ஸ்ரீ ராம ஜயம்
சித்திரை மீ ௩௨
சித்தார்த்தி ௵

# முகவுரை.

---

யோக வாஸிஷ்டம் என்றும் ஞான வாஸிஷ்டம் என்றும் சொல்லப்படுகிற கிரந்தமும், வால்மீகி மஹர்ஷியினாலேயே எழுதப்பட்டதாக பிரஸித்தியிருந்து வருகிறது. அதில் சுமார் 32,000 சுலோகங்கள் அடங்கியிருக்கின்றன வேதாந்த தத்வத்தையே பிரதி பாதிப்பதாயிருந்தாலும், அதில் உபாக்யானங்களும் உபமானங்களும் வர்ணனைகளும் விசித்திரமாகவும் ஏராளமாயுமிருக்கின்றன அதைப் பூராவையும் வாசிக்க ஸௌகர்யமில்லாதவர்களுக்காக காச்மீரத்திலிருந்த அபிநந்த பண்டிதரென்பவர், அதை சுமார் 6000 சுலோகங்களில் சுறுக்கி, லகுவாஸிஷ்டம் என்ற கிரந்தத்தை வெளியிட்டார். தற்காலத்திலுள்ள வாசகர்களுக்கு இதுவும் பெரிதாகத் தோன்றுமென்று நினைத்து இன்னமும் சுருக்கி சுமார் 1700 சுலோகங்களில் ஸ்ரீ வாஸிஷ்ட ஸங்கிரஹமென்று ஸ்ரீ ஞானேந்தபாரதீ ஸ்வாமிகள் எழுதியிருக்கிறார் அத்துடன் ஸம்ஸ்கிருதத்தில் பரிசயமில்லாதவர்களுக்கும் அக்கிரந்தத்தின் ஸாரம் தெரியவேண்டுமென்று எண்ணி, தமிழில் **ஸ்ரீ வாஸிஷ்ட ஸாரம்** என்று வெகு சுருக்கமாய் எழுதியிருக்கிறார். இந்த உயர்ந்த நூலை, மகிழ்ச்சியுடன் வெளியிட்டு ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீமத் அபினவவித்யா தீர்த்த மஹா ஸ்வாமிகள் பாத கமலங்களில் சமர்ப்பணம் செய்கிறேன்.

51, சத்தியமூர்த்தி தெரு.
**திருநெல்வேலி டவுண்.**
19—2—73.

இப்படிக்கு,
**M. ராமசுப்பிரமணிய அய்யர்** B.A.,
ஸ்ரீ சிருங்கேரி சங்கரமடம், தர்மாதிகாரி.

# பொருளடக்கம்



ஸ்ரீ தக்ஷிணாம்னாய சிருங்கேரி
ஸ்ரீ ஜகத்குரு சங்கராசார்ய ஸ்வாமிகள்,
35-வது பீடாதிபதி,

# ஸ்ரீமத் அபினவ வித்யா தீர்த்த மஹாஸ்வாமிகள்



# ஸ்ரீ வாஸிஷ்ட ஸாரம்

## அத்யாயம் 1

## பீடிகை

ஸ்ரீமான் **வால்மீகி மஹர்ஷி** ஏகாந்தமாய் உட்கார்ந்து கொண்டிருந்தவொரு ஸமயம் **பரத்வாஜர்** என்பவர் வந்து நமஸ்கரித்து "ஹே பகவன், இந்த ஸம்ஸார ஸங்கடம் நிறைந்துள்ள இவ்வுலகத்தில் ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தி அவதாரம் செய்திருந்த போது எவ்விதம் நடந்துகொண்டாரென்பதை தயவுசெய்து எனக்குச் சொல்ல வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அதன் பேரில் அம்மஹர்ஷி சொல்லவாரம்பித்தார் —

வாஸனை என்பது இருவிதம், சுத்தம், மலினம் என்று. சுத்த வாஸனையுள்ளவர்கள் ஜீவன் முக்தர்கள் எனப்படுவர்; அவர்கள் மறுபடியும் பிறப்பது கிடையாது. மறுபிறப்பு அசுத்த வாஸனையுள்ளவர்களுக்குத்தான். ஸ்ரீ ராமர் அந்த ஜீவன் முக்தநிலையை அடைந்தவர். எப்படியடைந்தாரென்பதைச் சொல்கிறேன். கேள்.

அவர் குருகுலவாஸம்செய்து வித்யாப்பியாஸம் பூர்த்தியாகி வீட்டுக்குத் திரும்பியபின் தகப்பனார் தசரத மஹாராஜனின் அனுமதியின் பேரில் தீர்த்த யாத்திரை போய்விட்டு வந்தார். உலகத்தில் எங்கு பார்த்தாலும் துக்கமயமாகவே யிருப்பதைக் கண்டார். உலகப் பற்று விட்டது. சிந்தையிலேயே மூழ்கினார். ஒரு கார்யத்திலும் ஈடுபட மனம் வரவில்லை. உடம்பும் இளைத்தது.

இந்த ஸமயம், விசுவாமித்திர மஹர்ஷி தசரதரிடம் வந்து, தான் செய்ய உத்தேசிக்கும் யாகத்தை பாதுகாத்துக் கொடுக்க ஸ்ரீ ராமரைத் தன்னுடன் அனுப்ப வேண்டுமென்று கேட்டதற்கு மஹாராஜா கொஞ்சம் தயங்கும்போது அம்மஹர்ஷியின் வேண்டுகோளை மறுப்பது உசிதமில்லை என்று வஸிஷ்டர் எடுத்துச் சொன்னதின் பேரில் அனுப்புவதாக ஒப்புக்கொண்டார்.

ஆனாலும் பக்கத்திலுள்ளவர்கள் மூலமாக ஸ்ரீ ராமருடைய மனோநிலையை அறிந்த விசுவாமித்திரர் "ஸ்ரீராமருக்குத் தற்கால முள்ள மோஹம் வைராக்கியத்தினாலேயே ஏற்பட்டிருப்பதால், அதை நிவிருத்தி செய்து விடலாம்" என்று சொல்லி அவரை அழைத்து வரச் சொன்னார். அந்த ஸமயம் ஸ்ரீ ராமராகவே தகப்பனாரை வந்தனம் செய்வதற்காக வந்து விட்டார். அவர் பிதாவையும் மஹர்ஷிகளையும் நமஸ்கரித்துவிட்டு அவருக்குக் குறிப்பிட்ட ஆஸனத்தில் உட்கார்ந்து கொண்டார். பிறகு இவர்கள் கேட்டதன் பேரில் ஸ்ரீ ராமர் சொல்லத் துடங்கினார் —

நான் எதுவுமறியாதவனாயிருந்தும், புத்தி சிந்தித்துக் கொண்டேயிருக்கிறது. பிராணிகள் இறப்பதற்காகவே பிறப்ப தாகவும், பிறப்பதற்காகவே இறப்பதாகவும் தோன்றுகிறது. இந்த ஸ்திதியில், நான் யார், உலகம் என்பது என்ன, ராஜ் யத்தினாலோ போகங்களினாலோ என்ன பிரயோஜனம் என்று சிந்திக்கும்போது எல்லாப் பதார்த்தங்களிலும் எனக்கு பற் றின்மையே ஏற்படுகிறது. செல்வவந்தனாயிருந்தால் அவனை ஜனங்கள் நிந்திக்கிறார்கள்; சூரனாயிருந்தால் தற்புகழ்ச்சியுள்ள வனாயிருக்கிறான். ஆயுளோ புல்லின் நுனியிலுள்ள ஜலபிந்து போல எப்பொழுதும் நாசமடையும் ஸ்திதியிலிருக்கிறது. காற் றைக் கட்டிவிடலாம், ஆகாசத்தை வெட்டிவிடலாம், அலைகளை யும் நிறுத்தலாம்; ஆயுள் விஷயத்தில் ஒன்றும் செய்ய முடியாது. மரங்களும் ஜீவிக்கின்றன. மிருகங்கள், பக்ஷி களும் ஜீவிக்கின்றன; வெறும் ஜீவனம் பிரயோஜனமற்றது. மறுபிறப்பு ஏற்படாமல் செய்துகொண்டால்தான் வாஸ்தவமாக ஜீவித்ததாகும். "நான், நான்" என்பதே எல்லா ஆபத்துக் களுக்கும் காரணம். அதற்கு வசப்பட்டு நாய் மாதிரி இங்கு மங்கும் அலைகிறான். ஸமுத்திரத்தைக் குடித்துவிடலாம்; மேரு மலையை வேருடன் பெயர்த்து விடலாம்; நெருப்பையும் சாப் பிட்டு விடலாம்; மனதை அடக்குவது மிகவும் சிரமம். எல்லா ஸம்ஸார துக்கங்களுக்கும் காரணம் ஆசையென்பது. அது எவ்வளவு அறிவாளியாயிருந்தாலும் அவனையும் துரும்பைப் போல ஆட்டி வைக்கிறது.

இந்த சரீரமோ துக்கத்திற்காகவே இருக்கிறது. ராஜ்யம் செல்வம், அழகு, ஸாமர்த்தியம் எதுவேண்டுமானாலும் இருக் கட்டும். காலம் எல்லாவற்றையும் நாசம் செய்து விடுகிறது.

ரத்தம், மாம்ஸம், எலும்பு நிறைந்த இந்தக் கூட்டில் நன்ருயிருப்பது எது? பால்யத்திலோ சக்தியற்று, பேச்சற்று அமேத்யத்தில் உழலுகிருன். கொஞ்சம் வயதாஞல் தாயார், தகப்பஞர், குரு, பலிஷ்டன் இவர்களிடமிருந்து பயம். யௌவனம் வந்தாலோ தெளிவாயுள்ள புத்திகூட, மழை காலத்தில் நதிகளைப்போல, கலங்கிவிடுகிறது. நரம்புகளைக் கொண்டு பின்னியிருக்கிற ஸ்திரீயினிடத்தில் எது சோபனமான அம்சம்? கண் மூக்குக் காதுகளை தனித்தனியாக எடுத்துப் பார்க்கட்டுமே? எவர் வடுப்படாமல் யௌவன தசையைத் தாண்டுகிருர்களோ, அவர்கள் மஹாத்மாக்கள்தான். யௌவனம் என்று நினைத்துக்கொண்டிருக்கிற போதே உடம்பில் தளர்ச்சியும், கிழட்டுத்தனமும் வந்து விடுகிறது; அப்பொழுதும் ஆசை குறையாது; அனுபவிக்கத்தான் முடியாது; இதைவிடத் துக்கம் என்னவேண்டும்?

யாருக்காவது இவ்வுலகத்தில் ஸுகமிருப்பதாகத் தோற்றமிருந்ததேயாஞல், அவனுடைய ஆயுளை எலி கயிற்றைக் கத்தரிப்பதுபோல, காலம் கத்தரித்து விடுகிறது. காலத்திற்கு வசமாகி மலைகள் சிதறுகின்றன. ஸமுத்திரங்கள் வற்றுகின்றன, தேவர்களும் நாசமடைகிருர்கள். ஏன்? பிரஹ்மாவுக்கும் முடிவுண்டு, விஷ்ணுவும், மஹேசுவரனும் கூட மறைவதுண்டு. என்னைப் போலுள்ளவர் விஷயத்தில் கேட்பானேன்? இவ்விதமெல்லாம் ஆலோசிக்கும்போது மனது துக்கத்திஞற் பீடிக்கப்படுவதால், போகங்களில் நோக்கம் ஏற்படவில்லை. நான் சாகவேண்டுமென்றும் எண்ணவில்லை. எதுவேண்டுமாஞலும் நடக்கட்டும். எனக்கு எதிலும் பிரவிருத்தி ஏற்படவில்லை. பெரியோர்கள் எவ்விதம் துக்கமில்லாத நிலையை யடைகிருர்களோ, அது எப்படியென்று சொல்லுங்கள். அப்படியிருக்க ஸாதனமே கிடையாதென்ருலும் ஸாதனமிருந்து நீங்கள் எனக்குச் சொல்லவில்லையென்ருலும், நான் மௌனமாக சித்திரத்திலெழுதிய படம் போலிருந்து கொண்டு இந்த சரீரம் விலகும் ஸமயத்தை எதிர்பார்த்துக் கொண்டு சும்மாயிருக்க வேண்டியதுதான்.

## அத்யாயம் 2

## பந்தமோக்ஷ லக்ஷணம்

இவ்விதம் ஸ்ரீராமர் சொல்லி நிறுத்தியவுடன் விசுவாமித்திரர் "ராகவா, உனக்குப் புதிதாக அறிந்துகொள்ள வேண்டியது எதுவுமில்லை. எல்லாவற்றையும் நீயே உன் கூர்மையான

புத்தியினுல் அறிந்துகொண்டிருக்கிருய். அறியவேண்டியதை யெல்லாம் அறிந்தவனுனுலும் மனஸ் ஓய்வை அபேக்ஷிக்கிறது. முன்னுல் வியாஸருடைய குமாரர் சுகர் தானுகவே உலகத்தின் போக்கை சிந்தித்துப் பார்த்து விவேகம் ஏற்பட்டுத் தத்வத்தை யறிந்து கொண்டார். ஆனுலும் அதுதான் தத்வம் என்பதில் விசுவாஸமேற்படாததினுல் மனஸிற்கு நிம்மதியில்லாமல் தகப்பனுரை "இந்த ஸம்ஸாரம் யாரால் எப்பொழுது எப்படி ஏற்பட்டது? இதற்கு நிவிருத்தி எப்பொழுது? எப்படி?" என்று கேட்டார். அதற்கு அவர் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லியும் "இது எனக்கு முன்னமேயே தெரிந்ததுதானே?" என்று அதை மதிக்கவில்லை. அதன் பேரில் இவருடைய மனேபாவத்தை யறிந்து வியாஸர், "எனக்கும்தான் தெரியவில்லை. அந்த தத்வத்தை ஜனகமஹாராஜர் அறிந்திருக்கிருர். அவரிடம் கேட்டுக் கொள்" என்ருர். அப்படியே சுகர் ஜனகருடைய நகரம் போய்ச் சேர்ந்தார். இவர் வாசலில் வந்திருக்கிருரென்று தெரிந்தும் இவருடைய மனப் பரிபாகத்தையறிய விரும்பி மஹாராஜர் ஒரு வாரம் கவனிக்காததுபோல் இருந்துவிட்டு,பிறகுஅரண்மனையின் முதல் கட்டில் அழைத்து வரச்சொன்னுர். அங்கேயும் ஒரு வாரமான பிறகு அந்தப்புரத்திற்கு அழைத்து வரச்சொல்லி அங்கே சுசுரூஷைக்காக வெகு ரூபவதிகளான ஸ்திரீகளையும் போகத்திற்கு வேண்டிய ஸகல ஸாமக்ரிகளையும் ஏற்பாடு செய்திருந்தார். அங்கே ஒரு வாரம் தங்கியும் சுகருடைய மனஸ் சலிக்காமலிருந்தபடியால் அவரை உள்ளே தருவித்து மஹாராஜர், இது வரை நடந்ததெல்லாம் தனக்குத் தெரியாததுபோல, சுகரை நமஸ்கரித்து, நல்வரவு கூறி "தாங்கள் அடைய வேண்டியதை யெல்லாம் அடைந்தவராயிருக்க, தங்களுக்கு வேண்டியது என்ன உண்டு?" என்று கேட்டார்- "இந்த ஸம்ஸாரம் எப்படி ஏற்பட்டது, எப்படி நிவிருத்தியாகும்" என்பதைச் சொல்லுங்கள். என்று இவர் கேட்டதற்கு அவர் வியாஸர் சொன்னதையே சொன்னுர். அதன் பேரில் சுகர், "இது எனக்கு முன்னமேயே தெரியும், தகப்பனுரும் இதையே சொன்னுர். தாங்களும் இதையே சொல்லுகிறீர்கள். ஆனுல் தாங்கள் சொன்னவுடன் மனதிற்கு நிம்மதியேற்படுகிறது. அதற்கு முன் ஏற்படவில்லை. அதற்கு என்ன காரணம்?" என்று கேட்டார். அதற்கு ஜனகர் "எல்லையற்ற ஆத்ம ஸ்வரூபம் ஒன்றுதான். மற்றது எதுவும் கிடையாது. நீங்கள் அதை அறிந்தவர்கள். அறியவில்லை

யென்று யெண்ணிக் கொண்டிருக்கிறவரையில் கட்டுப்பட்டவரே; அந்த எண்ணம் விலகினல் முக்தர், அந்த பிசகான எண்ணத்தை விட்டு விடுங்கள்'' என்ருர். அவ்விதமே சுகர் நிம்மதியடைந்து நிர்விகல்ப ஸமாதியில் ஈடுபட்டு சாந்தியை யடைந்தார். உனக்கும் அதைப்போலவே, அழுக்கைத் துடைத்து விடவேண்டியது மாத்திரம்தான் பாக்கியிருக்கிறது. வாஸனை கெட்டிப்பட்டால் பந்தம்: வாஸனை குறைந்தால் மோக்ஷம்.

என்று ஸ்ரீராமரிடம் சொல்லிவிட்டு விசுவாமித்திரர் வஸிஷ்டரைப் பார்த்து "தாங்கள்தான் ரகு குலத்திற்கே குருவாயிருப்பவர். இவனுக்கு மனது நிம்மதியடைவதற்குள்ள உபாயத்தை தாங்களே உபதேசம் செய்யுங்கள்'' என்ருர். வஸிஸ்டர்"ஸம்ஸாரமாகிற பிராந்தி விலகுவதற்கு எதை எனக்கு பிரஹ்மா முதலில் உபதேசித்தாரோ அது ஞாபகத்திலிருக்கிறது. அதையே சொல்கிறேன்'' என்று சொல்லவாரம்பித்தார்.

**வஸிஷ்டர் :** இந்த ஸம்ஸாரத்தில் எவனுலும் எப்பொழுதுமே சரியாகச் செய்யப்படும் புருஷப்பிரயத்தனத்தினுல் எல்லாமே அடையப்படும். அந்த புருஷப் பிரயத்தினம் சாஸ்திரத்தையனுஸரித்திருந்தால் பிரயோஜனப்படும். சாஸ்திரத்தை மீறியிருந்தால் கெடுதலே யேற்படும்.

**ஸ்ரீராமர் :** முன்னுள்ள வாஸனை என்னை எப்படி ஏவுகிறதோ அப்படித்தானே நான் நடக்கமுடியும்? அதை மீறிச்செய்ய எனக்குச் சக்தியேது?

**வஸிஷ்டர் :** வாஸனை நல்லது கெட்டது என்று இருவிதம். நல்ல வாஸனை உன்னை இழுத்துக்கொண்டு போவதானல் கிரமப்படி சாசுவதமான மேலான நிலையை அடைவாய். கெட்ட வாஸனையாயிருந்தால் பிரயத்தினம் செய்து அதை ஜயிக்கத்தான் வேண்டும். கெட்டதிலிருந்து இழுத்து நல்லதிலேயே ஈடுபடச் செய்யவேண்டும். தத்வமறிந்துவிட்டால் நல்ல வாஸனையையும் விட்டுவிட வேண்டியதுதான். தத்வமறிந்து ஸம்ஸாரத்திலிருந்து விடுபடவேண்டுமானல் அந்த மோக்ஷமாகிற மாளிகைக்கு நான்கு வாசற் காப்பாளர்கள் இருக்கிருர்கள். அவர்கள் விட்டுத்தான் உள்ளே போகமுடியும். அவை முறையே

சமம், விசாரம், ஸந்தோஷம், ஸாதுஸங்கமம் எனப்படும். இந்த நான்கையுமோ, அல்லது அவைகளில் மூன்றையோ, இரண்டையோ ஒன்றையோ ஸேவிக்க வேண்டும். ஒன்றையே பிரயத்தனத்துடன் ஸேவித்தால்கூட மற்ற மூன்றும் தானகவே ஸேவித்ததாக ஆகிவிடும். ஆகையால் இவைகளில் ஏதேனு மொன்றில் பிடிமானமிருந்தாலும் அவ்வரண்மனைக்குள் பிரவே சிக்கலாம். ஸஹிக்கமுடியாததாக எத்தனை துக்கங்களோ கவலைகளோ இருந்தாலும் சாந்தமான மனஸுள்ளவர்களை பீடிக் காது. விசாரத்தினல் புத்தி தீக்ஷிணமாகி ஸம்ஸாரமாகிய வியா திக்கே ஔஷதமாக யேற்பட்டுவிடும். ஸந்தோஷமிருந்தால் ஸுகரூபமான நிம்மதியிருக்கும். ஸாதுக்களுடைய ஸங்கமம் இருந்துவிட்டால், தானம் தீர்த்த யாத்திரை, தபஸ், யக்ஞ யாகா திகள் கூடத் தேவையில்லை; அதுவே எல்லாவித நன்மையை யும் ஏற்படுத்திவிடும். இவ்விதமுள்ள நான்கு உபாயங்களையும் நன்கு அப்யஸிக்கிறவர்கள் மோஹமாகிற ஜலம் நிறைந்த ஸம் ஸார ஸாகரத்தைக் கடந்து விடுவார்கள்.

ஸம்ஸார பந்தம் என்பதைப் பற்றிச் சொல்கிறேன் கேள். அதிலிருந்தே அந்த பந்தத்திலிருந்து எப்படி விடுபடுவதென் பதும் தெரியவரும். பார்க்கப்படும் பதார்த்தத்திற்கு வாஸ்தவ மாக இருப்புஉண்டு என்று எண்ணுகிறவரையில் பந்தம் என்று பெயர். அந்த எண்ணம் நிவிருத்தியாவதே மோக்ஷமாகும். பார்க் கப்படும் பதார்த்தம் என்பது இவ்வுலகம், நீ, நான், எல்லாமே, சேர்ந்தது. ஸ்வப்னத்தில் காணப்படும் இவைகளெல்லாம் எப் படி தூக்கம் முடிந்தவுடன் இல்லாமலே போய்விடுகின்றனவோ அப்படியேதான் இப்பொழுது பார்க்கப்படுவதெல்லாம் கல்பத் தின் முடிவில் நசித்துவிடும். அப்பொழுது மிஞ்சுவது வேறென்று மில்லை, இருட்டுமில்லை, அதற்குப் பெயரும் கிடையாது, உருவ மும் கிடையாது; ஏதோ ஒன்று "இருக்கிறது" என்று மாத் திரம் சொல்லலாம். அதைப்பற்றிப் பேச வேண்டியதற்காக அதற்கு ஆத்மா, பிரஹ்மம், ஸத்யம்என்றெல்லாம் வித்வான்கள் பெயர்களை கல்பிக்கிறார்கள். அப்படியிருக்கும் வஸ்து தன்னை வேருக தோற்றுவிக்கும்போது, கண்ணாடியில் தன்னைத்தானே பார்த்துக்கொள்வதுபோல, "ஜீவன்" என்ற தன்மையை அடை கிறது; கொஞ்சம் தடிப்பேற்பட்டு ஆலோசனை செய்ய வாரம் பித்தால் "மனஸ்" என்றாகிறது. இதினல்தான் உலகமாகிற

இந்திரஜாலம் ஏற்படுகிறது. இவ்விதம் ஏற்படுவதே, அவித்யை, மாயை, ஸம்ஸாரம், பந்தம், மலம், இருட்டு என்றெல்லாம், சொல்லப்படுகிறது. தங்கத்தினுல் ஏற்பட்ட காப்பு, எப்படி வாஸ்தவத்தில் தங்கத்தைவிட வேறு என்று எப்பொழுதும் ஆகாதோ, அப்படியே அந்த வஸ்துவிலிருந்து ஏற்படும் ஜீவன், மனஸ், உலகம் எல்லாம் அவ்வஸ்துவை விட வேறு என்று ஒருநாளும் ஆகாது. விதையானது தேசகாலம் சேரும்போது எப்படி முளைத்துத் துளிர் விட ஆரம்பிக்கிறதோ, அப்படியே இந்த ஸ்தூலமான தேஹமும் வெளியுலகமும் பார்க்கப் படுபவைகளாக ஆகின்றன.

பிரஹ்மா காரணமில்லாமல் தானுகவே ஏற்பட்டபடியால் அவருக்கு ஐந்து பூதங்களால் ஏற்படும் ஸ்தூலதேஹம் கிடையாது. அவருடைய மனஸ் ஸங்கல்பத்தினுலேயே உலகம் ஏற்பட்டதால், உலகம் மனேமயமேதான். மஹாப் பிரளயத்தில் அந்த ஸங்கல்பமில்லையானதால், பார்க்கப்படுவதெல்லாம் இல்லாத நிலையையடைந்துவிடும். அப்பொழுது மிஞ்சுவது எப்பொழுதும் உள்ளதாய் எப்பொழுதும் அழியாததாயுள்ள அந்த பரமாத்மாதான். கனவில் தோன்றும் ஜலத்தில் அலைகள் தோன்றுவதுபோல மூவுலகங்களும் அவரிடத்திலேயே தோன்றி மறைகின்றன. அவர் வாக்குக்கு எட்டாதவர். ஆனுலும் முக்தர்களால் அறியப்படுபவர். அவரை அறிந்துவிட்டால் எவ்வித ஆசைகளும் ஸந்தேஹங்களும் கர்மாக்களும் விலகி விடும்.

அவ்விதம் அறிந்தவர்கள்தான் ஜீவன் முக்தர் எனப்படுபவர் அவர்களுக்குத் தேஹத்தில் பற்றில்லாததினுல் அவர்களை விதேஹமுக்தர்கள் என்றும் சொல்லலாம். ஸுகமோ துக்கமோ ஏற்பட்டால், அவர்களுடைய முககாந்தி அதிகமாகவோ குறைவாகவோ ஆகாது. ராகம் த்வேஷம் பயம் முதலியதிருப்பதுபோல். அவர்கள் நடந்து கொண்டாலும் அவர்கள் மனஸ் ஆகாசம் போல எப்பொழுதும் நிர்மலமாயிருந்து வரும். "நான்" என்ற எண்ணமிராது. எவரிடத்திலிருந்தும் பயப்படுவதில்லையோ, அவரே ஜீவன் முக்தர். எவ்வித வாஸனையுமற்றதாகவே அவர்

அறிவு இருக்கும். அவருக்கு மனஸ் இருந்தும் அவர் வாஸ்தவத்தில் மனஸ் இல்லாதவரேயாவர். பிராரப்தகர்மா முடிந்து இந்த தேஹம் விலகி விட்டால் அவர் எப்படியிருப்பார் என்று சொல்லவே முடியாது. ஸர்வகாரணமாகிய பரப்ரஹ்மத்துடன் கலந்து ஒன்ருகிவிடுவார்.

## அத்யாயம் 3

## லீலோபாக்யானம்

**வஸிஷ்டர்:** இவ்விஷயமாய் மனஸிற்கு விசிராந்தியைக் கொடுக்கக் கூடியதாய் ஒரு கதை சொல்கிறேன், கேள். முன்ஞெரு காலத்தில் நல்ல விவேகமுள்ளவனுய் பத்மன் என்றதோர் அரசன் இருந்தான். அவனுடைய பார்யை லீலா என்ற பெயருடன் பதிவிரதா சிரோமணியாய் விளங்கினுள். அவள் ஒரு ஸமயம் தன் பிராணனைவிடப் பிரியமாயிருக்கிற பர்த்தா ஜராமரணமில்லாமலிருக்க வழியுண்டாவென்று யோசித்ததில், பெரிய ஸித்திகள் வேண்டுமானுல் தபஸ் முதலியவைகளால் ஏற்படலாமே தவிர சாகாமலிருக்க முடியாதென்று பிராஹ்மணர்கள் மூலம் தெரிந்துகொண்டாள். "காலகதியால் அவருக்கு முன்னுல் நான் இறந்துவிட்டால், நான் துக்கப்படுவதற்கொன்றுமில்லை. விபரீதமாய் நான் ஜீவித்திருக்கும்போது அவர் இறந்துவிட்டால் அவருடைய ஜீவன் இந்த மண்டபத்திற்கு வெளியில் போய் விடாமலிருக்கும்படி பரதேவதையை ஆராதிக்கிறேன்" என்று தீர்மானித்துக்கொண்டு, பர்த்தாவிடம் சொல்லாமல், அப்படியே வெகு நியமத்துடன் ஆராதித்து வந்தாள். தேவீ ஸரஸ்வதியும் திருப்தியடைந்து தர்சனம் கொடுத்தபோது இவள் "என் பர்த்தா இந்த தேஹத்தைவிட்டு விட்டாலும், இந்த மண்டபத்திற்கு வெளியில் போகக் கூடாது. தாங்களும் நான் வேண்டும் போதெல்லாம் தர்சனம் அளிக்க வேண்டும்" என்று இரண்டு வரங்களைக்கேட்டு வாங்கிக்கொண்டு ஸந்தோஷமாயிருந்து வந்தாள்.

வெகு வருஷங்கள் சென்றபின் ராஜன் காலகதியடைந்தவுடன், தேவியின் உத்தரவின் பேரில், அவனுடைய தேஹத்தை புஷ்பக் குவியலில் வைத்துக் காப்பாற்றி வந்தாள். ஆனுலும் ஜடமான சரீரத்தைப் பார்க்க முடிகிறதே தவிர அவனுடைய ஜீவனைப் பார்ப்பதற்கில்லாததால் வெகு துக்கப்பட்டு

தேவியிடம் "என் பர்த்தா எங்கேயிருக்கிருர்? என்ன செய்கிருர்? என்னல் தனித்து ஜீவிக்க முடியாது. அவரிடம் என்னையும் அழைத்துச் செல்லுங்கள்" என்று முறையிட்டாள். அதற்கு தேவி "ஆகாசம் என்பது ஜடமான பூதாகாசம், சித்தம் (மனஸ்) என்ற ஆகாசம், சித் (சுத்த அறிவு) என்ற ஆகாசம், என்று மூன்று விதமுண்டு. முதல் இரண்டையும் தாண்டி, மூன்ருவது நிலையில் நின்ருயேயானல் உன் இஷ்டம் நிறைவேறும்" என்று சொன்னள். அதன் பேரில் இவள் தன் தேஹத்தையும் மனஸையும் ஒதுக்கிவிட்டு, நிர்விகல்ப ஸமாதியை அடைந்து பார்க்கும்போது, தன் பர்த்தா அநேக அரசர்கள் சூழ ஒரு பெரிய ஆஸ்தான மண்டபத்தில் நல்லயுவாவாக ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பதைக் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டாள். மறுபடியும் அவள் தன்னிருப்பிடமே வந்து தேவியை ஸ்மரித்து தேவி வந்தவுடன் இதன் தத்வத்தைப் பற்றிக் கேட்டாள்.

**தேவீ :** சித் என்ற ஆகாசத்தில் ஸம்ஸாரம் என்ற ஒரு மண்டபம் இருக்கிறது. அதில் வஸிஷ்டர் என்ற பெயருடன் ஒரு பிராஹ்மண சிரேஷ்டர் இருந்தார். அவர் ஒருநாள் பூலோகத்தில் ஏராளமான பரிவாரங்களுடன் போகும் ஒரு அரசனைப் பார்த்ததும் "அரசனயிருப்பது வெகு நன்ருயிருக்கிறதே? இது மாதிரி நான் எப்பொழுது இருப்பேன்?" என்று நினைக்கலானர் அவருக்கு இசைந்த பார்யையாயிருந்த அருந்ததி என்பவள், அவருக்கு மரணம் கிட்டின ஸமயம், என்னை ஆராதித்து உன்னைப் போலவே தன் பர்த்தாவின் ஜீவன் மண்டபத்திற்கு வெளியில் போகக் கூடாதென்று கேட்டுக்கொண்டாள். அப்படியே தேஹ வியோகமான பிறகு அவர் ஜீவன் அங்கே சித் ஆகாசத்தில் நின்றது. இவளும் சோகத்தினல் பீடிக்கப்பட்டு தன் ஸ்தூல தேகத்தைவிட்டு விட்டு ஆதிவாஹிக (ஸூக்ஷ்ம) தேஹத்துடனிருந்து கொண்டு பர்த்தாவை அடைந்தாள். அவள்தான் நீ. அந்த பிராஹ்மணரேதான் உன் பர்த்தாவான அரசன். ஸ்வப்ன காலத்தில் எப்படி ஜாகிரத் நிலை மறந்து விடுகிறதோ, அது மாதிரி, உங்களிருவருக்கும் முன்னிருந்த ஸ்திதி மறந்து போய் விட்டது. அவர் இறந்து இது எட்டாவது நாள். ஆனலும் மரணத்தினல் ஏற்படும் மோஹத்தினல் நான் இன்னர் புத்திரன், எனக்கு வயது இவ்வளவு, என்றெல்லாம் தோன்றும்.

**லீலா:** அப்படியானால் அந்த பிராஹ்மண தம்பதிகளின் ஸமீபத்தில் என்னையும் அழைத்துச் செல்லுங்கள்.

**தேவி:** அவ்விதம் செய்யவேண்டுமானால், நீ பார்க்கப்படுவதையெல்லாம் உதறித் தள்ளி, சுத்தமான அறிவு ஸ்வரூபமாக ஆகவேண்டும் வெகுநாள் வாஸனையால் அறிவு மனஸாகி, மனஸ் தேஹமாகி, அந்த தேஹமே நான் என்ற எண்ணம் உறுதிப்பட்டிருக்கிறது. இதையெல்லாம் விட்டு மறுபடியும் அறிவாக மாத்திரம் இருக்க வேண்டும்.

**லீலா:** அவ்விதம் ஏற்படுவதற்கு என்ன அப்பியாஸம் செய்ய வேண்டும்?

**தேவி:** அதையே சிந்திக்க வேண்டும். அதைப்பற்றியே பேச வேண்டும். அதைப்பற்றியே ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளவேண்டும். அதிலேயே மனஸ் ஈடுபட்டிருக்கவேண்டும். இதையே ப்ரஹ்மாப்யாஸம் என்பார்கள். அறியப்படும் பதார்த்தத்திற்கு இருப்பே கிடையாது. ஆகையால் அது விஷயமாய் ராகத்வேஷங்களுக்கு இடமேயில்லையென்ற தீர்மானத்துடன் சுத்தமான, அறியப்படுவதை அபேக்ஷிக்காமல். அறிவாகவே நிலைக்கவேண்டும்.

இவ்விதம் பேசிக்கொண்டு நிர்விகல்ப ஸமாதியினால் சுத்தமான அறிவு ரூபத்தைத் தரித்தவர்களாக, இருவரும் இந்த பிரஹ்மாண்டத்தையெல்லாம் தாண்டி, மற்றொரு பிரஹ்மாண்டம் போய், அந்த பிராஹ்மணர் இருந்த இடம் போய்ச் சேர்ந்தார்கள் தேவியின் ஸங்கல்பத்தின்பேரில் அங்குள்ளவர்களுக்கு இவர்கள் கண்ணில் பட்டார்கள். உடனே அங்கிருந்த மூத்த புத்திரன் இவர்களை நமஸ்கரித்து புஷ்பாஞ்ஜலி செய்தான். லீலாவும் தன் புத்திரனை சிரஸில் தொட்டாள். அங்குள்ளவர்கள் ஸந்தோஷத்தை யடைந்தார்கள். பிறகு இவர்கள் அங்கிருந்து புறப்பட்டு, பத்மராஜனின் தேஹமிருக்கும் இடத்திற்குத் திரும்பி வந்தார்கள்.

**லீலா:** என் பர்த்தா ராஜ்யபாரம் செய்வதாகப் பார்த்த விடத்திலுள்ளவர்கள் யாரும் என்னைப் பார்க்கவில்லை. இப்பொழுது மாத்திரம் இவர்கள் கண்ணுக்குத் தென்பட்டேனே, அது எதினால்?

**தேவி:** அப்பொழுது உனக்கு இந்த அப்பியாஸமில்லாததினால், பார்க்கப்படும் பதார்த்தத்தில் ஸத்யமென்ற எண்ணமிருந்தது. இப்பொழுது அது உனக்கு நிவிருத்தியாகிவிட்டது. அதினால்தான் வித்தியாஸம்.

**லீலா:** வாஸ்தவம். இதற்கு முன்னால் நான் எடுத்திருந்த நூற்றுக்கணக்கான ஜன்மாக்களெல்லாம் இப்பொழுது ஞாபகத்திற்கு வருகிறது.

இவ்விதம் பேசிக்கொண்டே மறுபடியும் அந்த அரசன் விதூரதன் என்ற பெயருடன் அரசாண்டு வந்த இடத்திற்குப் போய்ப் பார்க்கையில் வெகு கடுமையாய் நடந்து கொண்டிருக்கும் யுத்தத்தைக் கண்டார்கள், அன்றிரவு யுத்தம் நிறுத்தி அரசன் நித்திரை செய்யும் ஸமயம் இவர்கள் அவ்விடம் சென்றார்கள். அரசன் உடனே விழித்துக்கொண்டு எழுந்து இவர்களுக்குப் புஷ்பாஞ்ஜலி செய்தான். உடனே தேவி அவன் சிரஸைத் தொட்டு "முன்ஜன்மாவை நினைத்துப்பார்" என்றாள். அவள் ஸ்பர்சம் ஏற்பட்டவுடனேயே இவனுடைய ஹ்ருதயத்திலிருந்து இருள் விலகி "ஹே தேவிகளே, இதென்ன வெகு ஆச்சர்யமாயிருக்கிறதே? நான் இறந்து ஒரு நாள்தானாகிறது. ஆனால் எனக்கோ இங்கே வயது எழுபதாகிவிட்டது" என்றான்.

**தேவி:** எப்படி ஸ்வப்னத்தில் ஒரு முகூர்த்தத்தில் நூறு வருஷங்களாகி விட்டதாக பிராந்திதோன்றுகிறதோ, அப்படியே தான் இது ஜாக்ரத்தில் தோன்றும் பிராந்தி. வாஸ்தவத்தில் நீ பிறப்பதுமில்லை, சாவதுமில்லை, சுத்தமான அறிவு ஸ்வரூபமாயுள்ளவன். இந்த உலகம் நீளமான ஸ்வப்னம்.

**ராஜன்:** நான் இந்த தேஹத்தைவிட்டு பழைய தேஹத்தையடைவது எப்பொழுது?

**தேவி:** நீ இந்த யுத்தத்தில் சாகவேண்டும். பிறகு முன்னுள்ள தேஹத்தை அடைவாய்.

இவ்விதம் பேசிக்கொண்டிருக்கையிலேயே நகரம் சத்ருவினால் பீடிக்கப்பட்டதாகத் தெரிந்தவுடன் அவ்வரசன் "ஹே தேவிகளே, நான் யுத்தத்திற்குப் போகிறேன். என் பார்யையைக் காப்பாற்றுங்கள்" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டுவிட்டான்.

இவர்கள் பார்க்கும்போது இவளைப்போலவே அங்கேயும் ஒரு லீலா இருக்கக் கண்டார்கள். அரசன் யுத்தத்தில் சத்ருவினால் கொல்லப்பட்டு விட்டான். அவனுடனேயே போகவேண்டு மென்ற எண்ணத்துடன் அவன் பார்யை பிரஹ்மாண்டங்களை யெல்லாம் தாண்டி சித் என்ற ஆகாசத்தின் வழியாக பத்மராஜ னின் சரீரம் புஷ்பக் குவியலில் வைத்திருக்கிற இடம் போய் விட்டாள். தேவீ, லீலா, அரசனுடைய ஜீவகலை. ஆக மூவரும் அங்கேயே போய்ச் சேர்ந்து தங்களுக்கு முன்னாலேயே அந்த லீலா வந்திருப்பதைக் கண்டார்கள். ஆனால் அங்கே லீலாவின் முந்தின தேஹத்தைக் காணவில்லை. "ஏன் காணவில்லை?" என்று கேட்டதற்கு, தேவீ, "நீ ஸமாதியிலிருக்கும்போது இறந்து விட்டாயென்று நினைத்து மந்திரிகள் அதைத் தஹனம் செய்துவிட்டார்கள். உனக்கோ வாஸனைகளெல்லாம் நசித்து விட்டபடியால் இனி ஸ்தூல தேஹம் அவசியமில்லை" என்று சொல்லிவிட்டு, "இந்த லீலா நம்மைப் பார்க்கட்டும்" என்று ஸங்கல்பித்தாள்.

உடனே அவளும் வெகு பர பரப்புடன் எழுந்து இவர்கள் காலில் விழுந்து நமஸ்கரித்தாள். பிறகு ராஜனுடைய சரீரத்தை எடுத்து மூக்கின் வழியாக ஜீவகலையை உள்ளே அனுப்பினாள் ஸரஸ்வதி தேவி. அவன் உடனே எழுந்திருந்து மிகவும் ஆச்சர் யத்துடன் "நீ யார்? இவள் யார்? இவள் யார்?" என்று கேட் டான்.

**லீலா :** நான்தான் உங்களுக்கு முன்னால் இருந்த லீலா என்ற பார்யை. இந்த இரண்டாவது லீலா என் பிரதி பிம்பமாக உங்களுக்காக ஸ்ருஷ்டிக்கப்பட்டவள். இவள்தான் மூவுலகத் திற்கும் தாயாரான ஸரஸ்வதிதேவி.

இதைக் கேட்டவுடன் அரசன் எழுந்து தேவியை நமஸ்க ரித்தான். அவளும் "உங்களுக்கு எவ்வித கெடுதலும் ஏற்ப டாது. ஸௌக்யமாய் இருப்பீர்கள்" என்று ஆசீர்வதித்துவிட்டு மறைந்து விட்டாள். பிறகு அந்த பத்மராஜனும் இரண்டு லீலை களும் வெகு காலம் ஜீவன்முக்தர்களாகவே ஜீவித்திருந்து தேவியின் அனுக்ரஹத்தினால் விதேஹ முக்தி நிலையை அடைந் தார்கள்.

## அத்யாயம் 4

# பிரஹ்ம ஸ்வரூபம்

**வஸிஷ்டர்**: மனஸை காரணமாய் வைத்துக்கொண்டு ஏற்படும் நீண்ட ஸ்வப்னமே இந்த ஸம்ஸாரம் என்றும், பிராந்தியினுலேயே அது தோன்றுகிறது என்றும், சொன்னேன். அறை குறை வெளிச்சத்தில் பார்க்கப்படும் மரக்கட்டையை மனிதன் என்றே எண்ணி பயப்படுகிறதில்லையா? இவன் வியவஹாரம் பண்ணுவதற்கு ஸத்யமான வஸ்து தேவையில்லை. மனஸினுல் கல்பிக்கப்படுவதே போதுமானது. உலகத்தில் தோன்றுவது எல்லாமே கல்பிக்கப்பட்டதுதான். கல்பிக்கப்படாமல் எப்பொழுதும் ஒரே மாதிரி மாறுதலில்லாமல் இருக்கும் வஸ்து பிரஹ்மம் ஒன்றுதான். அதுவே ஜீவனுவதால் பிரஹ்மத்திற்கும் ஜீவனுக்கும் பேதம் கிடையாது. மனஸை வைத்தே ஜீவன் என்பதால், மனஸுக்கும் ஜீவனுக்கும் பேதம் கிடையாது. உலகம் மனஸினுலேயே கல்பிக்கப்படுவதால், உலகத்திற்கும் மனஸுக்கும் பேதம் கிடையாது.

இந்த பிரஹ்மத்தின் தத்வம் உனக்கு நன்கு விளக்குவதற்காக ஒரு கதை சொல்கிறேன் கேள். ஹிமயமலையின் பக்கத்தில் கர்கடீ என்று ஒரு ராக்ஷஸீ இருந்தாள். அவள் சரீரம் மிகப் பெரியதாயிருந்ததால் அவளுக்கு வேண்டியபடி ஆஹாரம் கிடைப்பதில்லை. ஆகையால் அவள் திருப்தியடைந்த நாளும் கிடையாது. இந்த ஜம்பூத்வீபத்திலுள்ள எல்லாரையுமே விழுங்கிவிடவேண்டுமென்று தீர்மானித்து தபஸ் செய்யவாரம்பித்தாள். பிரஹ்மா பிரத்யக்ஷமானவுடன் "நான் எல்லாரிடத்திலும் நுழையும் படிக்காக சிறு ஊசி மாதிரி இருக்கவேண்டும்" என்று வரன் கேட்டாள். அதற்கு பகவான் "அப்படியேயாகலாம். நீ விஷபேதியாயிருந்து கெட்ட ஆஹாரம் செய்கிறவர்கள், கெட்ட நடத்தையுள்ளவர்கள், கெட்ட தசையிலிருப்பவர்கள் கெட்ட தேசத்திலிருப்பவர்கள், மூர்க்கர்கள் இவர்களுக்கெல்லாம் வியாதியாக இருந்துவா" என்றுர். அப்படியே அவள் வெகு சிறிய சரீரத்துடனிருந்துகொண்டு வெகு வருஷங்கள் பிராணிகளைக் கொன்றுக்கொண்டிருந்தாள். பிறகு ஒரு ஸமயம் "ஊசி மாதிரியிருப்பதால் வெகு ஸ்வல்பமான ஆஹாரத்தினுலேயே வயிறு நிரம்பிவிடுகிறது. எனக்கு முன்னிருந்த விசால

மான அங்கங்கள் எங்கேயோ போய்விட்டனவே" என்று ஆலோசித்து மறுபடியும் மிகக்கடிமையாய் தபஸ் செய்தாள். அந்த தபஸின் வைபவத்தினுல் இவளுக்கிருந்த அக்ஞானம் நிவிருத்தியாகி ஸம்ஸாரத்திலேயே வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. அவ்விதம் இவள் இருக்கிருள் என்று தெரிந்து பிரஹ்மா மறுபடியும் வந்து "உன் ஹ்ருதயத்திலிருந்த இருட்டு விலகிவிட்டது. ஜீவன்முக்ததசையை அடைந்துவிட்டாய். முன்னிருந்த சரீரத்தையே யடைந்து ஸௌக்யமாயிரு"என்று சொன்னதின்பேரில் இவள் நிர்விகல்ப ஸமாதியிலேயே வெகுகாலமிருந்து விட்டாள்.

பிறகு வெகுநாள் சென்று சித்தம் கொஞ்சம் சலித்தும் வெளிப்பார்வையுள்ளவளாக ஆனபோது மறுபடியும் பசி ஏற்பட்டது. தன் ஜாதிக்கு உரியதான ஆஹாரம் கிடைப்பதற்காக ஒரு காட்டில் வஸித்து வந்தாள். அப்படியிருக்கையில் ஒரு ஸமயம் இரவில் மந்திரியுடன் ஒரு அரசன் காட்டில் பிரவேசிப்பதைக் கண்டாள். "என் சரீரம் நசித்தாலும் நசிக்கட்டும், குணசாலியாயிருப்பவனை நான் பக்ஷிக்கமாட்டேன். ஆகையால் இவ்விருவர்களும் எப்படியென்று கேள்விகள் கேட்டு பரீக்ஷித்துப் பார்க்கிறேன்" என்று நிச்சயித்துக்கொண்டாள். உடனே பயங்கரமாக சப்தமிட்டுக்கொண்டு அவர்களைப் பார்த்து, "எனக்கு ஆஹாரமாக வந்திருக்கிறீர்களே நீங்கள் யார்? என்னிடத்திலிருந்து தப்பிக்கவேண்டுமானுல் ஒரே வழிதான் உண்டு, நான் கேட்பதற்கு சரியான பதில் சொல்லவேண்டும்" என்ருள். இதைக் கேட்டு அவ்வரசன் கொஞ்சமேனும் பயமன்னியில் "கேள்" என்ருன்.

**ராக்ஷஸீ:** ஒன்ருயிருந்துகொண்டு பலவாய்த் தோன்றுகிற எந்த அணுவிற்குள்ளே லக்ஷக்கணக்கான பிரஹ்மாண்டங்கள், ஸமுத்திரத்தில் நீர்க்குமிழிகள் போல, லயித்து விடுகின்றன? எது ஆகாசமாயிருந்தும் ஆகாசமற்றதாயிருக்கிறது? எது எதுவுமில்லை, எதுவுமாகவுமிருக்கிறது? எது போகாமலே போகிறது, நிற்காமலே நிற்கிறது? அறிவிருந்தும் எது கல்? எது ஆகாசத்தில் சித்திரம் எழுதுகிறது? எதைவிட வேறு எதுவும் கிடையாது? வேருயிருப்பதும் எதைவிட வேறில்லை?

**மந்திரி:** நீ சொல்வது பரமாத்மாவேதான். அதுதான் அறிய முடியாததாய் இருப்பதால் ஆகாசத்தைவிட ஸூக்ஷ்மமானது. அதில்தான் பிரஹ்மாண்டமாகிற நீர்க்குமிழிகள் லயிக்

கின்றன. அதற்கு வெளியில் எதுவும் கிடையாததால் அது ஆகாசம்; அறிவுஸ்வரூபமாயிருப்பதால் பூத ஆகாசமில்லை. சுட்டிக்காட்ட முடியாததால் அது ஒன்றுமில்லை. அதுவே வாஸ்தவத்தில் இருக்கிற வஸ்துவானதினால் அது இருக்கிறது. பிரகாச ஸ்வரூபமானதினால் அறிவுள்ளது, அறிய முடியாததினால் கல். ஆத்மாவான சுத்த வெளியில் உலகமாகிற சித்திரத்தை எழுதுகிறது. உலகம் கல்பிதமானதினால் அதைவிட வேறில்லை, தனித்திருப்பதுபோல் தோன்றுவதால் வேறும் கூட. வியாபகமாயிருப்பதால் எங்கும் போகாது; எங்குமிருப்பதால் எங்கும் போகும்.

**அரசன்**: எது வாக்குக்கு எட்டாததாய் உபநிஷத்து வாக்கியங்களின் பரமதாத்பர்யமாயிருந்து வருகிறதோ, எதனுடைய சுருங்குதல் மலருதல் என்பதே உலகத்தின் லயம் ஸ்ருஷ்டி எனப்படுகிறதோ, அந்த சாசுவதமான ஸத்வஸ்துவான பிரஹ்மம்தான் உன்னால் சொல்லப்பட்டது.

**ராக்ஷஸீ**: உங்களிருவருடைய புத்தியும் வெகு பரிசுத்தமாயிருக்கிறது. நீங்கள் பூஜிக்கத் தகுந்தவர்கள். உங்களுக்கு வேண்டியதைக் கேளுங்கள்.

**அரசன்**: இனிமேல் உன்னால் எந்தப் பிராணியும் ஹிம்ஸிக்கப்படக் கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன்.

**ராக்ஷஸீ**: அப்படியே செய்கிறேன். இந்த சரீரம் போகும் வரை நான் யாரையும் ஹிம்ஸிப்பதில்லை. பசியை நான் பொருட்படுத்துவதில்லை.

**அரசன்**: அது சரியல்ல. நீ அழகான ஸ்திரீரூபம் தரித்துக்கொண்டு என் இருப்பிடம் வா. என் ராஜ்யத்தில் அநேகம் பாபிகள் திருடர்கள், ஆயிரக்கணக்கான மரணதண்டனைக்குரியவர்கள் இருக்கிறார்கள். அவர்களை உன்னிடம் கொடுக்கிறேன். நீ உன் சொந்த ரூபத்தை எடுத்துக்கொண்டு அவர்களை தூக்கிக்கொண்டு ஹிமயமலைக்கு வந்து உன் இஷ்டப்படி சாப்பிடு. திருப்தியடைந்து தூங்கியெழுந்து மறுபடியும் முன்போல என்னிருப்பிடம் வா. அவ்விதமே உனக்கு போஜனம் தருகிறேன்.

**வஸிஷ்டர்** : இவ்விதமாகவே அவள் ஸமாதி கலைந்த ஸமயம் ஆஹாரம் செய்துகொண்டு ஸுகமாயிருந்து வந்தாள். இதே மாதிரி வேருெரு கதையும் சொல்கிறேன்.

விந்திய மலையிலிருந்த ஒரு பெரியகாட்டில் ஒரு வேதாளம் இருந்தது. பெரிய சரீரத்தையுடையது. ஆனுலும் தனக்கு எவ்வளவு பசித்தாலும் எதிரில் வந்து நின்றுலும் காரணமன்னியில் தோஷமில்லாத எவனையும் கொல்லாது. ஓரிரவு அங்கு வந்த ஒரு அரசனைப் பார்த்து "நீ இன்று கிடைத்துவிட்டாய். எனக்கு போஜனமாக ஆவாய்," என்றது. அதற்கு அவன் "நியாயமன்னியில் பலாத்காரம் செய்து நீ என்னை சாப்பிடுவாயானுல் உன் தலை ஆயிரமாய் வெடித்துவிடும்" என்ருன்.

**வேதாளம்** : நியாயமாய்த்தான் சொல்கிறேன், கேள். ராஜாவாக இருப்பவன் வேண்டுபவர்களுடைய ஆசைகளைப் பூர்த்தி செய்து கொடுக்கவேண்டும். நான் கேட்கிற கேள்வைகளுக்கு பதில் சொல்லி என் ஆசையைப் பூர்த்திசெய். எந்த ஸூர்யனுடைய கிரணங்களிலுள்ள அணுக்களே இந்த பிரஹ்மாண்டங்கள்? எவன் ஒரு ஸ்வப்னத்திலிருந்து மற்ருெரு ஸ்வப்னத்திற்கு என்று ஆயிரக்கணக்காகப் போய்க்கொண்டேயிருந்தாலும் தன்னுடைய பிரகாசமாயுள்ள ஸ்வரூபத்தை இழப்பதில்லை? எது அணுவாகவேயிருந்தபோதிலும் அதில் ஸூர்ய மண்டலம், மஹாமேருபர்வதம் முதலியவை பரமாணுக்களாக இருக்கின்றன? எதற்கு அவயவமில்லையானுலும் அதற்குள் மூவுலகமும் மஜ்ஜையாக (ஊனுக) இருக்கிறது?

இதைக்கேட்டு சிரித்துக்கொண்டு அரசன் பதில் சொன்னுர்

**அரசன்** : நீ சொன்னது அறிவாகிய ஸூர்யனே. அதுதான் வெகு பிரகாசமாயுள்ளது. எல்லாவுலகங்களும் அதில் அடங்கிய அணுக்கள். உலகமாகிற பெரிய ஸ்வப்னத்தில் பல விதமான ஜீவரூபத்தையடைந்தும், தன் அறிவு ஸ்வரூபத்தை இழப்பதில்லை. ஸூக்ஷ்மமாயும் அறியமுடியாததாயுமிருப்பதால் அது அணு எனப்படுகிறது. அதன் முன்னுல் மஹாமேரு முதலியது பரமாணுதான். எவ்வித அவயவமற்றிருந்த போதிலும் எல்லா அவயவமாயிருப்பதும் அதுவே. இதின் மஜ்ஜைதான் மூவுலகமும்.

இவ்விதம் அரசன் சொன்னதைக்கேட்டு அந்த வேதாளம் சாந்தியை அடைந்து, பசியெல்லாவற்றையும் மறந்து, எப்பொழுதும் தியானத்திலேயே ஈடுபட்டதாக இருந்துவிட்டது.

## அத்யாயம் 5

## மனோவைபவம்

**வஸிஷ்டர்:** அறிவு ஸ்வரூபமாயுள்ளதின் விலாஸம்தான் இந்த வுலகம் என்பதை நீ எவ்விதம் நன்கு உணர்வாயோ, அதற்குத்தக்க கதை சொல்கிறேன், கேள்.

பிரஹ்மா ஜகத்தை ஸ்ருஷ்டி செய்ய வெட்ட வெளியில் நாலா பக்கங்களிலும் சுற்றிப் பார்த்தார். இவ்விதம் பார்க்கும் போது வேறு அநேக உலகங்கள் இருப்பதைக்கண்டு ஆச்சர்யப் பட்டு அதில் ஒன்றில் பிரகாசித்துக்கொண்டிருந்த ஒரு ஸூர்யனைக் கூப்பிட்டு "நீ யார்? இந்த ஜகத் எப்படி ஏற்பட்டது?" என்று வினவினர்.

**ஸூர்யன்:** ஜம்பூத்வீபத்தின் ஒரு மூலையில் காசியபவம்சத்தில் பிறந்தவராக வெகு சாந்த ஸ்வரூபராக "இந்து" என்று ஒருவர் இருந்தார். அவருக்கு ஸந்தானமில்லாததால், பார்யையுடன் சேர்ந்து பரமேசுவரனை ஆராதித்து அவருடைய அனுக்ரஹத்தினல் பத்து புத்திரர்களை அடைந்தார். பிறகு அந்த பெற்றோர்கள் காலகதியை அடைந்துவிட்டபடியால், அப்புத்திரர்கள் வீட்டைவிட்டு வெளிக் கிளம்பி ஆலோசிக்கையில் கல்பம் முடியும் வரை ஜீவித்திருக்கக்கூடிய பிரஹ்மாவாக இருப்பதுதான் சிலாக்கியம் என்று மூத்தவருக்குத் தோன்றி அவ்விதமே, "நானே பிரஹ்மா, நானே ஸ்ருஷ்டிக்கிறேன், நானே ஸம்ஹரிக்கிறேன், என்று இடைவிடாமல் பாவனை செய்யுங்கள்" என்று மற்றவர்களிடமும் சொன்னர். அப்படியே அவர்கள் பத்துப் பேர்களும் வெகு காலம் பாவனை செய்யும்போது சரீரங்கள் நழுவி விட்டன; அவர்களே பிரஹ்மாக்களாக ஆகி விட்டார்கள். அவர்களால் பாவனையால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பத்து விதமான ஜகத்துக்களில் ஒன்றில் நான் ஸூர்யனுக இருந்து வருகிறேன்.

**வஸிஷ்டர் :** இவ்விதம் ஸாமான்யமான பிராஹ்மணர்கள் கூட மனஸின் பாவனையால் பிரஹ்மாவாக ஆகலாமென்றால், மனஸுக்கு எவ்வளவு சக்தியுள்ளதென்பதை நினைத்துப்பார். மேலும் தன்னை தேஹமென்றே எண்ணுவதால்தான் தேஹத்தை பாதிப்பதெல்லாம் இவனை பாதிக்கிறது. அந்த எண்ணமில்லாமலே இருந்தால் சரீரத்தை என்ன பண்ணினாலும் இவன் பாதிக்கப்படமாட்டான். இதற்கு ஒரு திருஷ்டாந்தம் சொல்கிறேன்.

மகத தேசத்திற்கு அதிபதியாக "இந்திரத்யும்னன்" என்று ஒரு அரசன் இருந்தான். அவன் பார்யை வெகு ரூபவதி; அவள் பெயர் அஹல்யை. அதே ஊரில் "இந்திரன்" என்றவொரு விட புருஷன் இருந்தான். அவள் ஒரு ஸமயம் புராணங்களிலிருந்து முன்னிருந்த அஹல்யை இந்திரனுக்கு ஈடுபட்டாளென்று தெரிந்ததின்பேரில், இவளுக்கும் இந்த இந்திரனுடன் ரமிக்கவேண்டுமென்று துர்புத்தியேற்பட்டு அவனை அழைத்து வரச்சொல்லி அவனிடம் ரமித்து வந்தாள். இவ்விஷயம் அரசனுக்குத் தெரிந்தவுடன் அவன் இருவரையும் சேர்த்து குளத்தில் தள்ளிவிடச் செய்தான். ஆனால் அவ்விருவரும் எவ்வித மனக் கிலேசமும் அடையாமல் சிரித்துக்கொண்டேயிருந்தார்கள். பிறகு யானையின் காலில் அவர்களைக் கட்டினான். சவுக்கால் அடித்தான், தீயில் வாட்டினான், ஒன்றிலும் அவர்கள் கிலேசமடையாததைக் கண்டு வெகு ஆச்சர்யப்பட்டு அவர்களையே காரணம் கேட்டான். அதற்கு அவர்கள் "நாங்கள் ஒருவருக்கொருவர் தீவிரமான அபிமானம் வைத்துவிட்டபடியால் எங்கள் மனஸ் அதிலேயே லயித்திருக்கிறது. மனஸ் அவ்விதம் லயித்துவிட்டபடியால் அது சரீரத்திற்கு ஏற்படுவதை கவனிப்பதேயில்லை" என்றார்கள். இதைக்கேட்டு அவ்வரசன் அவர்கள் சொல்வது வாஸ்தவம்தான் என்று உணர்ந்து அவர்களை ஊரைவிட்டுத் துரத்திவிட்டான். இவ்விதமாக காமத்தினால் மனஸ் வேறிடத்தில் ஈடுபட்டாலும்கூட சரீரத்தை லக்ஷ்யம் செய்வதில்லை. இதிலிருந்து எல்லோருக்கும் இரண்டு சரீரங்கள் உண்டென்று நன்றாய்த் தெரிகிறது. எப்பொழுதும் வேலை செய்து கொண்டிருக்கிற ஸூக்ஷ்ம சரீரம் ஒன்று; மற்றது மாம்ஸமயமாய் ஒன்றும் செய்யாமலிருக்கிற ஸ்தூல சரீரம்.

இந்த மனஸின் வேலையைப்பற்றி இன்னமும் சொல்கிறேன், கேள். சூன்யமாய், பயங்கரமாய் ஒரு காடு இருக்கிறது அதில் ஒரு மனிதன் எப்பொழுதும் கவலைப்பட்டவனாக ஒரு இரும்பு

ஆயுதத்தை எடுத்துக்கொண்டு தானாகவே தன் முதுகில் அடித்துக்கொண்டு அழுதுகொண்டு ஓடிப்போய் ஒரு பாழும் கிணற்றில் விழுந்து விடுகிறான். அதிலிருந்து எழுந்து முட் புதருக்குள் நுழைந்து கஷ்டப்பட்டுவிட்டு வெளியில் வந்து, மறுபடியும் தன்னைத்தானே அடித்துக்கொண்டு ஓடி, மறுபடியும் குளிர்ந்திருக்கிற வாழைத் தோட்டத்தில் புகுந்து வெளிவந்து, மறுபடியும் அடித்துக்கொண்டு ஓடி அதே பாழும் கிணற்றில் விழுகிறான். இவ்விதம் வெகு நாளாக இருந்துவரும் அவனை நான் "நீ யார்? ஏன் இப்படி ஓடுகிறாய்?" என்று கேட்டதற்கு அவன் "நான் யாருமில்லை. நான் ஒன்றும் செய்யவில்லை, நீதான் எனக்குச் சத்துரு, உன்னால் நான் நாசத்தையடைகிறேன்" என்று அலறிக்கொண்டு, மறுக்ஷணத்தில் சிரித்துக்கொண்டு தன்னுடைய அங்கங்களையெல்லாம் உதறியெறிந்து விட்டான். இவனைப்போல அந்தக்காட்டில் அலைகிறவர்கள் ஏராளமாயிருக்கிறார்கள். அந்தக்காடு இன்னமும் இருந்து வருகிறது.

**ஸ்ரீ ராமர் :** அந்தக்காடு எது? அவர்கள் செய்ய நினைப்பது என்ன?

**வஸிஷ்டர் :** அந்தக்காடு என்பது ஸம்ஸாரமே. அதில் அலைவது மனஸ்கள். விவேகமாகிற என்னைக் கண்டவுடன் சாந்தியடைகிறார்கள். என்னை லக்ஷ்யம் செய்யாததினால் அநேகர் நரகத்தில் விழுகிறார்கள். வாழைத்தோட்டம் என்பது ஸ்வர்க்கம், முட் புதர்கள் துக்கங்கள். என்னைக் கண்டதும் அழுதது "தன்னுடையது" என்பதை விட்டு விடுவதால்; மனஸிற்கு இது வரை கிடைத்து வந்த போகங்களை விட்டு விடுவதினால் அழுகை வருவது ஸஹஜமே. ஆனால் விவேகத்தையடைந்து, போகங்களை விட்டுவிட்டால் பின்னால் ஏற்படும் ஆனந்தமே சிரிப்பு. தன்னைத்தானே அடித்துக்கொள்வது என்பது கல்பனைகள். அதினாலேயேதான் துக்கமேற்படுகிறது; பட்டுப்பூச்சி தானாகவே தன்னைச் சுற்றிக் கூடுகட்டிக்கொண்டு அதற்குள் கட்டுப்படுவதுபோல, எல்லாம் இந்த மனதினால் ஏற்படுகிறதென்பதை நன்கு அறிந்து அதைத் தன்னிடமிருந்து விலக்கி விடுவதிலேயே நன்கு உறுதியுடன் பிரயத்னம் செய்,

பிரஹ்மம் என்பது எல்லா சக்தியுமுள்ளது, எப்பொழுதுமுள்ளது, நிறைந்தது, அழிவற்றது எந்த சக்தியைக்கொண்டு அது விளங்குகிறதோ அப்படியே பாவிக்கப்படுகிறது, சரீரங்க

ளில் அறிவு சக்தி; கல்லில் கெட்டியாயிருக்கும் சக்தி; காற்றில் அசையும் சக்தி; நாசமடையும் வஸ்துக்களில் நாச சக்தி; ஜலத்தில் திரவமாயிருக்கும் சக்தி; ஆகாசத்தில் சூன்யமாயிருக்கும் சக்தி; நெருப்பில் எரிக்கும் சக்தி, இவ்விதமாக அதன் சக்தி எங்கும் வியாபித்திருக்கிறது. தூர், கிளை, இலை, கொடி, பூ, காய், பழம் எல்லாம் எப்படி மரத்தின் விதைக்குள்ளேயே அடங்கிக் கிடக்கின்றனவோ, அப்படியே எல்லாம் பிரஹ்மத்தில் அடங்கியுள்ளவை. சில ஸமயத்தில் சிலவிடங்களில் சில சக்திகள் அதிலிருந்து வெளிக்கிளம்பும், பூமியிலிருந்து காலதேசத்தை அனுஸரித்து பயிர்கள் உண்டாவதுபோல, இவ்விதம் பிரபஞ்சம் உண்டாவதாகச் சொல்வதே குழந்தைக்குச் சொல்லும் கதை போலவேதான்.

"இல்லாத ஒரு பட்டினத்தில் சூரர்களாக மூன்று ராஜகுமாரர்கள் இருந்தார்கள். அவர்களில் இருவர் பிறக்கவே இல்லை; மற்றவன் கர்பத்திலேயே ஏற்படவில்லை. இம் மூவரும் ஒரு ஸமயம் வெளியில் புறப்பட்டு பழுத்துத்தொங்கும் சில மரங்களை ஆகாசத்தில் பார்த்து அங்குள்ள ருசியான பழங்களை சாப்பிட்டுவிட்டு வரும் வழியில் அலையடித்துக்கொண்டிருக்கிற மூன்று நதிகளைக் கண்டார்கள். அதில் ஒன்று நன்கு வற்றியிருந்தது; மற்ற இரண்டிலும் ஜலம் ஓடின நாளே கிடையாது. அந்த நதிகளில் ஜலக் கிரீடை செய்துவிட்டு, அம்மூவரும் அன்று ஸாயங்காலம் உண்டாகப்போகிற நகரத்தையடைந்தார்கள். அங்கே மூன்று அழகான மாளிகைகளைப் பார்த்தார்கள். அவைகளில் ஒன்றில் சுவருமில்லை, தூணுமில்லை; மற்ற இரண்டு ஏற்படவே இல்லை. அங்கே நல்ல உறுக்கின தங்கத்தில் செய்த மூன்று பாத்திரங்களை எடுத்துக்கொண்டார்கள்; அவைகளில் இரண்டு ஓட்டாஞ்சல்லியாகவிருந்தது; மற்றொன்று பொடியாகவே ஆகியிருந்தது. அந்த மூன்ருவது பாத்திரத்தில் மூன்றிலிருந்து மூன்று குறைந்துள்ள அன்னத்தை அடைந்தார்கள். அதுவும் வாயே இல்லாமல் அதிகமாகச் சாப்பிடும் பிராஹ்மணர்கள் சாப்பிட்ட மிச்சம். அந்த மீதத்தையும் இந்த ராஜகுமாரர்கள் சாப்பிட்டு விட்டு அங்கே வேட்டையாடிக்கொண்டு வெகு ஸுகமாயிருந்து வந்தார்கள்" என்று தாதி கதை சொன்னல் விசாரிக்க சக்தியற்ற குழந்தை எல்லாம் ஸத்யமென்றே நினைக்குமல்லவா? அப்படியேதான் பிரஹ்மத்திலிருந்து இந்த ஸம்ஸாரம் ஏற்பட்டிருப்பது விசாரணை செய்யாத புத்தியையுடையவர்களுக்கு ஸத்யமாகவே தோன்றும்.

## அத்யாயம் 6

# லவண உபாக்யானம்

**வஸிஷ்டர் :** தன்னுடைய ஸங்கல்பத்தினுலேயே மோஹ மடைந்து மனிதன் கட்டுப்பட்டவனுக ஆகிருன், விசாரணை செய்து மனஸை அடக்கிவிட்டால் விடுபடுகிருன், என்ற விஷயத்தில் ஒரு சரித்திரம் சொல்கிறேன், கேள். வெகு தார்மிகனுக "லவணன்" என்று ஒரு அரசன் இருந்தான். அவன் ஒரு நாள் ஆஸ்தான மண்டபத்தில் வீற்றிருக்கும்போது ஒரு இந்திர ஜாலிகன் வெகு பகட்டுடன் வந்து ராஜனை வணங்கி "இதைப் பாருங்கள்" என்று சொல்லி தன் கையிலிருந்த மயில் தோகையை சுழற்றினுன். அந்த ஸமயத்தில் ஸிந்து தேசத்திலிருந்து ஒரு சிற்றரசன் குதிரையுடன் வந்து சேர்ந்தான். உடனே இந்த இந்திர ஜாலிகன் ராஜனைப் பார்த்து, "உத்தமமான குதிரை, ஏறி இஷ்டப்படி ஸஞ்சாரம் செய்யுங்கள்" என்று சொன்னுன். ராஜனும் அந்தக் குதிரையைப் பார்த்துக்கொண்டு இரண்டு முகூர்த்த காலம் பிரமித்து இருந்துவிட்டார். அங்கே ஸபையிலுள்ளவர்கள் இதைக் கண்டு ஆச்சர்யமும் கவலையுமடைந்தார்கள். பிறகு ஏதோ கலங்கின புத்தியுள்ளவன்போல பிரக்ஞை வந்து அப்புறம் நன்கு பிரக்ஞை வந்தவுடன் அரசன் மந்திரிகளைப் பார்த்து சொன்னுன்.

"ஆச்சர்யமான ஸமாசாரம் சொல்லப் போகிறேன். ஸபையில் உள்ளவர்கள் கவனமாய்க் கேளுங்கள். அவன் தோகையைச் சுற்றியவுடன் நான் குதிரையின் பேரில் ஏறிக்கொண்டு வேட்டையாடப் போனவன் வெகுதூரம் எல்லையற்ற காட்டில் கொண்டுபோகப்பட்டேன். அஸ்தமன ஸமயத்தில் அங்குள்ள ஒரு மரத்தில் தொங்கிக்கொண்டிருந்த ஒரு கொடியைப் பிடித்து அதில் தொங்கிக்கொண்டிருக்கையில் என்னை அப்படியே விட்டு விட்டு குதிரை எங்கேயோ ஓடிவிட்டது. அன்று இரவு பூராவும் அதிலேயே தொங்கிக்கொண்டிருந்தேன். மறுநாள் அங்குமிங்கும் அலைந்து பசியினுல் வருந்திக்கொண்டிருக்கையில் ஸாயங்காலமாகி, அன்னம் வைத்துக்கொண்டிருந்த ஒரு பெண்ணைக் கண்டேன். நான் எவ்வளவு கெஞ்சிக்கேட்டும் அவள் அன்னம் கொடுக்காமல் "நான் சண்டாள ஜாதி. என்னிடமிருந்து நீர் ஆஹாரம் கிரஹிக்கக்கூடாது. என்னை விவாஹம் செய்து

கொள்வதானல் மாத்திரம் கொடுக்கிறேன்'' என்ருள். ஆபத் காலத்தில் ஜாதி குலம் இதையெல்லாம் கவனிக்க முடியுமா என்று ஸமாதானப்படுத்திக்கொண்டு அப்படியே ஒப்புக் கொண்டு அன்னம் வாங்கி சாப்பிட்டேன். அவளை விவாஹம் செய்து கொண்டதில் இரண்டு பெண்களும், இரண்டு பிள்ளைக ளும் பிறந்தார்கள். இவ்விதமாக அந்த புது மாமஞர் வீட்டில் இருந்து வருகையில் அங்கு துர்பிக்ஷம் ஏற்பட்டு எல்லாரும் வேறு இடம் போய் விட்டார்கள். நானும் வெகு துக்கத்தோடு அவளையும் குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு அங்கிருந்து வெகுதூரம் போய் ஒரு மரத்தடியில் தங்கினேன். அப்பொழுது கடைசிப் பையன் "பசிக்கிறது, ஆஹாரம் கொடு" என்று கேட் டான். என்னல் அப்பொழுது ஏற்பட்ட துக்கத்தை ஸஹிக்க முடியவில்லை. பிராணனை விட்டுவிட தீர்மானித்துக்கொண்டு கட்டைகளைக் கொண்டுவந்து எரியவிட்டு அதில் குதித்தேன். அந்த அதிர்ச்சியில் விழித்துக்கொண்டு பார்க்கிறேன், இங்கே இருக்கிறேன். இவ்விதமேற்பட்ட மோஹமெல்லாம் அந்த இந்திர ஜாலிகன் செய்தது. அவன் எங்கே?''

என்று கேட்டவுடன் பார்க்கையில் இந்திரஜாலிகன் மறைந்து விட்டான். ஸம்ஸாரத்தின் நிலை இவ்விதம்தான் என்று போதிப்பதற்காக யாரோ தேவன் காட்டிய மாயை, என்று தீர் மானித்துக் கொண்டார்கள்.

**ஸ்ரீ ராமர்:** இந்த லவண மஹாராஜன் வெகு தார்மிகன் என்று சொன்னீர்களே? அவனுக்கு ஏன் இவ்வளவு துக்கத்தின் அனுபவம் ஏற்பட்டது?

**வஸிஷ்டர்:** இவன் ஒரு ஸமயம் தனியாக உட்கார்ந்திருக் கும்போது தன் பாட்டனர் ராஜஸூய யாகம் செய்திருக்கிருர், அவர் குலத்தில் பிறந்த நானும் செய்தாலென்ன, என்று நினைத் துக்கொண்டு, மனஸிஞலேயே, அக்னியை மூட்டி, ஆஹூதி கள் செய்து, மனஸிஞலேயே தன் எல்லா சொத்துக்களையும் தக்ஷிணையாகக் கொடுத்து விட்டதாக, பலமான பாவனை செய்துவிட்டு ஸாயங்காலம் விழித்துக்கொண்டான். அந்த யாகத்தில் வாஸ்தவமாக அனுபவிக்கவேண்டிய சிரமங்களை அவன் அனுபவிக்காமலிருந்ததால் அவைகளையும் அனுபவிக்கட் டும் என்று இந்திரஞல் அனுப்பப்பட்ட தூதன்தான் இந்த இந்திர ஜாலிகன். மறுபடியும் என்ன நடந்ததென்பதைச் சொல் கிறேன், கேள்.

மறுநாள் மஹாராஜன் காட்டுப்பக்கம் போனபோது முன் தான் அனுபவித்த பல அடையாளங்களைக் கண்டு வியந்தான். அங்கே அழுதுகொண்டிருந்த ஒரு கிழவியிடம் "ஏன் அழுகிருய்? யாரை உத்தேசித்து அழுகிருய்?" என்று ராஜன் கேட்டதற்கு, அவள் "என் பர்த்தா சண்டாளர்களுக்குத் தலைவனுயிருந்தார். எங்களுக்கு ஒரே பெண். அதிருஷ்ட வசத்தினுல் இந்திரனுக்கு ஸமானமான ஒரு பர்த்தா அவளுக்கு ஏற்பட்டார். வெகு ஸந்தோஷமாக இருந்து வந்தார்கள். பெண்களும், பிள்ளைகளும் பிறந்தன. சிலகாலம் சென்று துர்பிக்ஷம் ஏற்பட்டது. அவர்கள் எங்கேயோ போய்விட்டார்கள். இறந்துதான் போய்விட்டார்களோ, அதுவும் தெரியவில்லை. அவர்களை நினைத்து நினைத்து துக்கத்துடன் நான் இங்கே இருந்து வருகிறேன்." என்ருள் இதைக் கேட்டதும் ராஜன் மிகவும் ஆச்சர்யப்பட்டு அவளுக்கு ஆறுதல் சொல்லி, அவளுக்கு தேவையானதைக் கொடுத்துவிட்டு, ஸம்ஸாரத்தின் போக்கு இன்னவிதமென்றும் அவித்யையின் ஸ்வாபவத்தையும் நன்கு அறிந்தவனுக அரண்மனைக்குத் திரும்பி வந்து சேர்ந்தான்.

**ஸ்ரீராமர்:** இந்திரஜாலிகனுடைய மாயா சக்தியால் ஏற்பட்டதாக ராஜனுக்குத் தோன்றின அனுபவங்கள் பின்னுல் போது வாஸ்தவமாகவே இருந்ததே. அது எப்படி பார்க்கும் என்று எனக்குப் புரியவில்லை.

**வஸிஷ்டர்:** அவித்யை இருக்கும்போது எல்லாமே ஸம்பவிக்கக் கூடியதுதான். இல்லாதது இருக்கிறதுபோல் தோன்றும். ஸ்வப்னத்தில் ஆகாசத்தில் பறப்பதாகப் பார்த்ததில்லையா? இதே மாதிரி ஸம்பவம் வேறு ஒன்று சொல்கிறேன். அதையும் கேட்டுக்கொள். உன் ஸந்தேஹம் நிவிருத்தியாகிவிடும்.

## அத்யாயம் 7

## காதி உபாக்யானம்

கோஸல தேசத்தில் காதி என்று ஒரு உத்தமமான பிராஹ்மணர் இருந்தார் அவர் கழுத்துவரை ஜலத்தில் நின்றுகொண்டு தபஸ் செய்து வந்தார். பகவான் மகாவிஷ்ணு முன் வந்து "வேண்டிய வரனைக் கேள்" என்ருர். அதற்கு காதி "இந்த

ஆச்சர்யமான ஸம்ஸாரமாகிற தங்களுடைய மாயையைப் பார்க்க விரும்புகிறேன்'' என்று சொன்னவுடன் "அப்படியே பார்ப்பாய்'' என்று சொல்லிவிட்டு மறைந்து விட்டார். பின்னுல் ஒரு நாள் அந்த காதி ஸ்நானத்திற்காக ஜலத்தில் அமிழ்ந்தார். அப்பொழுது தன் வீட்டில் தான் இறந்து கிடப்பதாகவும் தன் சரீரத்தைக் கொண்டுபோய் பந்துக்கள் சாம்பலாக்கி விட்டதாக வும் கண்டார். அதன் பிறகு சண்டாளர்களுடைய கிரஹத்தில் பிறந்து, வயதாகி விவாஹமாகி பின்னுல் கிழவனுகவும் ஆகி, பந்துக்களெல்லாம் போய், தான் தனித்து துக்கத்துடன் அவ்வி டத்தையே விட்டு கீரர்களுடைய நகரம் போய் ராஜ வீதியில் தான் நிற்பதாகக் கண்டார். அவ்வூர் அரசன் காலமாகிவிட்ட படியால் வேறு அரசனைத் தேடியெடுக்க இங்குமங்கும் போய்க் கொண்டிருந்த யானை இவரைத் தூக்கித் தன்மேல் வைத்துக் கொண்டவுடன் பிரஜைகள் வெகு உத்ஸாகத்துடன் இவரை அரசனுக வரித்தபடியால் கவயன் என்ற பெயருடன் அந்த கீரர் களுக்கு அரசனுகி மந்திரிகளால் சூழப்பட்டு எட்டு வருஷகாலம் ராஜ்யபாரம் வஹித்ததாகவும் கண்டார். அவ்வூரில் இருக்கும் போது ஒரு நாள் இவர் எவ்வித அலங்காரமுமில்லாமல் வெளி யில் வந்த ஸமயம் இவரைப் பார்த்து ஒரு சண்டாளன் இவரை பந்து என்ற முறையில் அழைத்து "இத்தனை நாளாக எங்கே இருந்தாய்?'' என்று கேட்டதை மந்திரிகளும் அரண்மனை ஸ்திரீ களும் தெரிந்துகொண்டு "சண்டாளனுன இவனை அரசனுக இத்தனை நாளாக வைத்துக்கொண்டு நெறுங்கிப் பழகினதால் எல்லாருமே தோஷமுள்ளவர்களாக ஆகிவிட்டோம். இதற்குப் பிராயச்சித்தம் ஸாத்யம் இல்லை. அக்னியில் விழவேண்டியது தான்,'' என்று தீர்மானித்து எல்லாரும் அக்னிப் பிரவேசம் செய்து விட்டார்கள். தன்னுல் இந்த பெரிய அனர்த்தம் ஏற்பட்டுவிட்டதேயென்று இந்த அரசனும் தன் சரீரத்தை அக் னியில் ஆஹுதி செய்தான். அந்த வேகத்திஞல் காதி தனக் கேற்பட்டிருந்த மோஹத்திலிருந்து விழித்துக்கொண்டார். 'எப்படியெல்லாமோ இருந்தேனே, என்னவெல்லாமோ செய் தேனே, இது எல்லாம் என்ன விசித்திரமாயிருக்கிறது? என்று ஆலோசித்துக்கொண்டே ஜலத்திலிருந்து வெளியில் வந்தார்.

பிராந்தி யென்பது விசித்திரமாக வேலை செய்கிறதே யென்று ஆலோசித்துக்கொண்டிருக்கையில் ஒரு அதிதி வந்து சேர்ந்தார். அவர் மிகவும் இளைத்திருந்ததற்கு என்ன காரண

மென்று கேட்கையில் அவர் "நான் கீரர்களுடைய நகரத்தில் ஒரு மாஸம் வஸித்தேன். அங்கே யாரோ ஒரு சண்டாளன் எட்டு வருஷங்கள் அரசனுயிருந்துவிட்டு பின்னுல் அவன் யாரென்று தெரிந்தவுடன் அவனும் அநேகரும் அக்னிப்ர வேசம் செய்துவிட்டதாகத் தெரிந்தது. அந்தவூரில் நான் தங்கி யிருந்ததாலுள்ள தோஷத்திற்குப் பிரயாசித்தமாக பிரயாகை போய் சாந்திராயணவிருதம் அனுஷ்டித்துவிட்டு பாரணைக்காக இங்கே வந்தேன். இந்த உபவாஸத்தினுல் இளைப்பு, வேறு ஒரு காரணமுமில்லை" என்ருர்.

இதைக்கேட்டு காதி மிகவும் ஆச்சர்யமடைந்து அங்கிருந்து புறப்பட்டு அந்த சண்டாளச் சேரிக்குப் போய்ப் பார்த்ததில் தான் முன் அனுபவித்ததுபோலவே யிருக்கக் கண்டார். அப்படியே கீர நகரத்திற்கும்போய் அங்கேயும் அப்படியே யிருக்கக் கண்டு பகவானுடைய லீலையைப் பார்த்து ஆச்சர்யப்பட்டுக்கொண்டே திரும்ப வந்து மறுபடியும் தபஸ் செய்தார். பகவான் மிகவும் பிரீதியடைந்து தர்சனம் கொடுத்து, "என் மாயைப் பார்த்து விட்டாயே? வேறு என்ன வேண்டும்?" என்று கேட்டார். "மாயையைப் பார்த்தது வாஸ்தவம். ஆனுல் அதன் மர்மம் தெரியவில்லை. பிராந்தியாயிருப்பது ஸத்யமாக எப்படி ஏற்பட்டது?" என்று காதி கேட்டதற்கு பகவான் பதில் சொல்லுகிருர்.

"பிருதிவீ முதலியது யாவும் சித்தத்தில்தானிருக்கிறது, வெளியில் இல்லை. இவ்விஷயம் எல்லாராலும் ஸ்வப்னத்திலும் பிராந்தியிலும் அனுபவிக்கப்பட்டதே. எதில் ஸர்வ பிரபஞ்சமுமிருக்கிறதோ, அதில் சண்டாளனுயிருப்பதும் தோன்றினுல் அதில் என்ன ஆச்சர்யம்? பிராந்தியினுல் எப்படி உன்னுல் சண்டாளத் தன்மை பார்க்கப்பட்டதோ அப்படியே பிராந்தியினுல் அதிதியையும் பார்த்தாய், சண்டாளப் பிரதேசத்தில் வீட்டையும் பார்த்தாய், கீரர்களுக்கு அரசனுயிருப்பதையும் பார்த்தாய். சில ஸமயம் ஒரே எண்ணம் பலர் மனஸ்களில் பிரதிபலிக்கும். முன்னெரு காலத்தில் ஒரு சண்டாளன் கீர ராஜனுக இருந்திருக்கலாம். அதுவே உனக்கு ஸம்பந்தப்பட்டதுபோல மனஸில் பிரதிபலித்திருக்கலாம். மனஸின் போக்கு வெகு விசித்திரமானது. ஸம்ஸாரமென்ற மாயைக்கு முடிவே கிடையாது. ஞானம் ஏற்படாமலிருக்கும்வரை பிராந்தியை ஜயிக்க முடியாது. அதை ஜயிக்கவும் மனஸ்தான் வேண்டும். ஆகையால் மனஸை அடக்கி தபஸ் செய். அதிலிருந்து ஞானத்தை அடைவாய்."

என்று பகவான் உபதேசித்த பிரகாரம் காதி எவ்வித ஸங்கல்பத்தையும் விட்டு விட்டு, பிராந்தி நிவிருத்தியாவதற்காக, ஆத்ம சிந்தன ரூபமான தபஸை பத்து வருஷ காலம் அனுஷ்டித்து ஞானத்தையடைந்தார். பிறகு ஜீவன் முக்த நிலையையும் அடைந்து ஸகல சோகமும் விலகினவராக விளங்கினார்.

## அத்யாயம் 8

## பார்க்கவ உபாக்யானம்

**வஸிஷ்டர் :** சைதன்யஸ்வரூபமாயுள்ள பிரஹ்மம் ஒன்றே, அதில்தான் இந்த பிரபஞ்சம் வெறும் தோற்றமென்று சொன்னேன். இதை விளக்க ஒரு விருத்தாந்தம் சொல்கிறேன். மந்தர பர்வதத்தின் தாழ்வரையில் பிருகு மஹர்ஷி முன்னொரு காலம் நிர்விகல்ப ஸமாதி நிஷ்டையிலிருக்கும்போது, அவருடைய புத்திரன் சுக்கிரன் ஆகாசத்தில் போய்க்கொண்டிருந்த ஒரு அப்ஸரஸைக் கண்டான். உடனே, மனஸில் அவளையே நினைத்துக் கொண்டு கண்ணை மூடிக்கொண்டு அவளுடன் ஸ்வர்க்கலோகத்தில் ரமிப்பதாக பாவனை செய்தான். பிறகு அந்த ஸுகத்தைக் கொடுத்த புண்யம் செலவழிந்து ஸ்வர்க்கத்திலிருந்து நழுவி பூமியில் விழுந்து, தான்யமாக ஆனான். பிறகு அந்த தான்யத்தை சாப்பிட்டவனுக்குப் புத்திரனாகப் பிறந்து, மேரு பர்வதத்திலிருந்த அரண்யத்தில் ஒரு மன்வந்தரகாலம் தபஸ் செய்தான். அந்த தர்மத்திலிருந்து கொஞ்சம் பிசகினதால் மத்ர தேசத்து அரசனாகப் பிறந்தான். இவ்விதமாகப் பல ஜன்மாக்களையடைந்து கடைசியில் ஸமங்கா என்ற நதி தீரத்தில் ஒரு தபஸ்வீக்கு புத்திரனாகப் பிறந்து இவனும் தபஸ் செய்து கொண்டிருந்தான். பிறகு மஹர்ஷிக்குப் புத்திரனாய்ப் பிறந்திருந்த இவன் சரீரம் காற்று வெய்யில் இவைகளால் உலர்ந்து கீழே விழுந்து விட்டது.

ஆயிரம் வருஷங்களுக்குப் பிறகு அந்த பிருகு மஹர்ஷி ஸமாதி கலைந்தவராக ஏற்பட்டு வெளியில் பார்க்கும்போது தன் புத்திரன் இறந்துவிட்டானென்று எண்ணி காலதேவதையை சபித்துவிட நினைத்தார். இது தெரிந்து காலன் ஸ்தூல தேஹம் தரித்துக்கொண்டு முன் வந்து நின்று "நீர் எல்லையற்ற தபோ மஹிமை யுள்ளவர். எல்லாவற்றையும் அறிந்தவர். நாங்களோ

எங்களுக்குள்ள கடமையைச் செலுத்துகிறவர்கள். எதற்காக என்னை வீணுகச் சபிக்க நினைக்கிறீர்? நீர் ஸமாதியிலிருக்கும் போது உம் புத்திரனுடைய மனஸ் இந்த சரீரத்தை விட்டு விட்டு ஸ்வர்க்கலோகத்தில் விசுவாசீ என்ற அப்ஸரஸுடன் ரமித்தது. பிறகு ராஜனுய், செம்படவனுய், மூங்கிலாய், பாம்பாய், கோழி யாய்ப் பலவித பிறவிகளில் சுற்றிவிட்டு, இப்பொழுது ஒரு பிராஹ்மண குமாரனுக இருந்துகொண்டு ஸமங்கா நதிக்கரை யில் தபஸ் செய்து கொண்டிருக்கிருன். உம்முடைய ஞான திருஷ்டியினுல் நீரே பாரும்'' என்று சொன்னுர்.

அது வாஸ்தவமென்று பிருகுவும் அறிந்துகொண்டு, கால னுடன் அந்த ஸமங்காக் கரைக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கு காலனுடைய ஸங்கல்பத்தினுல் சுக்கிரனும் ஸமாதி கலைந்து கண்களைத் திறந்து பார்த்து இவர்களை நமஸ்கரித்தான். ''உன் ஸ்வரூபத்தை நினைத்துப் பார்'' என்று பிருகு சொன்னதின் பேரில், சுக்கிரனுக்குத் தன் பூர்வ நிலை ஞாபகத்திற்கு வந்தது. ''எழுந்திரு. உன் பழைய சரீரத்திற்குப் போகலாம்'' என்று அவர் சொன்னதை அனுஸரித்து எல்லாரும் மந்தர பர்வதம் சென்றுர்கள். அங்கே உலர்ந்து கிடந்த தன் சரீரத்தைப் பார்த்துவிட்டு சுக்கிரன் ''எவ்வித கல்பனையுமற்று இது ஸுக மாகக் காட்டில் கிடக்கிறது. மனஸில்லாமலிருக்கிற தன்மையை விட மேலான்தாக எனக்கு ஒன்றும் தோன்றவில்லை'' என்றுன். இதை ஆக்ஷேபித்து காலன் ''நீ இந்த சரீரத்தினுல் செய்ய வேண்டிய கார்யம் ஏராளமாயிருக்கிறது. இதற்குள் பிரவேசித் துக்கொண்டு அஸுரர்களுக்கு ஆசார்யராக இருந்து வா. உங் களுக்கு க்ஷேமம் உண்டாகுக'' என்று ஆசீர்வதித்து மறைந்து விட்டார்.

பிறகு ஸமங்காக் கரையிலுள்ள பிராஹ்மண குமாரன் என்ற பாவனையை விட்டு விட்டு சுக்கிரன் பழைய சரீரத்தில் பிரவேசித் துக் கொண்டான். பிறகு மஹர்ஷி பிரோக்ஷணம் செய்து அதை முன்போல விருக்கும்படி செய்தார். அதன் பிறகு சுக்கிரன் எழுந்திருந்து தகப்பனுரை நமஸ்கரித்தான். ஆகையால் மனஸ் எவ்வளவு தூரம் கல்பிக்க சக்தியுள்ளது, அதினுலேதான் பல வித ஸுகதுக்க அனுபவ ரூபமான ஸம்ஸார பந்தம் ஏற்படு கிறது, என்பதை நன்ருக விசாரித்து அறிந்து கொள். விசாரம் செய்யச் செய்யத்தான் மனஸின் விருத்திகள் விலகும், விருத்தி

கள் அடங்கினால்தான் தெளிவு ஏற்படும், மனஸ் தெளிந்தால் தான் தத்வஞானமேற்படும். விசாரம் செய்து ஆத்ம தத்வ ஞானத்தை யடைந்தவருடைய நிலையிலிருந்து கவனித்தால், பிரஹ்மா, விஷ்ணு, ருத்ரர், இந்திரன் முதலானவர்கள் பரிதபிக்க வேண்டியவர்களே. "நான் யார்? இது எப்படி ஏற்பட்டது?" என்று தனக்குள் விசாரிக்காமலிருக்கும்வரை ஸம்ஸாரத்தின் ஆடம்பரம் இருந்தே தீரும். அதுவே அக்ஞானமாகிற பெரிய இருட்டு. எல்லா சக்தியும் வாய்ந்ததாய் எல்லாருடைய உள்ளத் திலுமிருப்பதாய் இரண்டாவதற்றதாய் இருக்கும் சைதன்யத்தை எவன் பார்க்கிறானோ, அவன்தான் வாஸ்தவமாய் பார்க்கிறவன். அதையும் ஸம்ஸாரத்தின் வாஸ்தவமான தன்மையையும் நன்கு அறிந்து போகங்களை அனுபவித்தால் அவை பாதிக்காது, ஸந் தோஷத்தையே கொடுக்கும். திருடன் என்று ஒருவனை நன்றாக அறிந்துகொண்டு அவனிடம் பழகினால் அவன் இவனுக்குத் திருடனாகமாட்டான். ஸ்நேகிதனாகவே ஆகிவிடுவான். மேலும், மனஸை அடக்கிவிட்டால், ஸ்வல்பமான போகமிருந்தாலும் திருப்தியடைந்துவிடும். அடங்காமலிருந்தால் எவ்வளவு போக மேற்பட்டாலும் மேல் மேல் அபேக்ஷிக்குமேயொழிய திருப்தி யேற்படாது. சத்துருவினால் பீடிக்கபடாமலிருக்கிற அரசனுக்கு புதிதாக ஒரு ராஜ்யம் கிடைத்தாலும் போதாது. சத்ருவினால் பிடித்து விடப்பட்டவனுக்கு ஒரு கிராமம் கிடைத்தாலும் திருப்தி யுண்டாகும். எதுவரை வாஸனைகள் உள்ளே சுற்றிக்கொண்டி ருக்கிறதோ அதுவரை மனஸ் ஜயிக்கப்பட்டதாக ஆகாது. அதை ஜயிப்பது ஒரே தத்வமாயுளதில் உறுதியுடன் அப்யா ஸம் செய்து நிலைக்க வைப்பதினால்தான் ஸாத்தியம். இந்த மனஸ் நமக்குத் தோன்றியதையெல்லாம் செய்வதால் வேலைக் காரன்; நல்ல கார்யங்களை செய்து கொடுப்பதால் மந்திரி; இந்தி ரியங்களை ஜயிக்க உதவுவதால் அடங்கியுள்ள சிற்றரசன்; அறிவைக் கொடுப்பதால் குரு; விளையாடுவதால் பிரியமான பத்னீ; காப்பாற்றுவதால் தகப்பனார்; நம்பிக்கையுள்ளதால் ஸ்நேகிதன்; இவ்விதமாக உத்தமமான ரத்னமானது பலவித அழுக்குகளினால் மங்கியிருக்கிறது; விவேகமாகிற ஜலத்தை விட்டு நன்கு அலம்பி சுத்தி செய்து அதைக்கொண்டு தத் வத்தை அறி. இந்திரியங்களாகிற சத்ருக்களை ஜயித்துவிட்டு புத்தியைக்கொண்டு ஸத்யமாயுள்ள வஸ்துவை அறிந்து, அதி லேயே நிலைத்திருந்து ஸம்ஸாரமாகிற கடலைத்தாண்டிவிடு. மனஸை நிர்மலமாகச் செய்வதற்கு இதுதான் உபாயம்.

## அத்யாயம் 9

# தாமாதிகளின் உபாக்யானம்

**வஸிஷ்டர்:** மனஸை அசுத்தமாகச் செய்து ஸம்ஸாரக் கடலில் மூழ்கச் செய்வது வாஸனைகள்தான். வாஸனையற்று மனஸ் இருக்குமேயானல் உலகத்தில் ஏற்படக்கூடிய எவ்வித ஸுகதுக்கமும் பாதிக்கவே பாதிக்காது. இவ்விஷயத்திலும் ஒரு கதை சொல்கிறேன்.

சம்பராஸுரன் வேறிடம் போயிருந்தபோது இவன் ஸைன்யம் உறங்கிக்கொண்டிருக்கிற ஸமயம் பார்த்து தேவர்கள் படையெடுத்து வந்து ஸம்ஹரித்து விட்டார்கள். இது தெரிந்து சம்பரன் வெகு கோபத்துடன் தேவர்களின் நகரத்துக்கே சென்றுன். இவனுடைய மாயா பலத்தைக்கண்டு பயப்பட்ட தேவர்கள் இவன் கண்ணில் அகப்படாமல் மறைந்து விட்டார்கள். அந் நகரத்தில் யாரையும் காணுமல் கோபத்தினுல் அதை எரித்துவிட்டு தன்னிடம் திரும்பி வந்தான். மறைந்திருந்தே தேவர்கள் இவனுடைய ஸேனுதிபதிகளைக் கொன்று விட்டார்கள். அதன்பேரில் இவன் தன்னுடைய மாயா சக்தியினுல் தாமன், வியாலன், கடன் என்ற மூவரை ஸ்ருஷ்டி செய்தான். அவர்கள் மிக பலிஷ்டர்கள், பயங்கரமாயிருப்பவர்கள், அவர்களிடம் எவ்வித வாஸனையும் கிடையாததால் அவர்களுக்கு பயம் என்பதே தெரியாது. யாரேனும் எதிரில் வந்தால் அடிக்க மாத்திரம் தெரியும். இவர்களை சம்பரன் ஏவி விட்டதால் தேவர்கள் எங்கேயோ போய் இருக்கவேண்டியிருந்தது. கொஞ்சம் இளைப்பாறிக்கொண்டு பிரஹ்மாவிடம்போய் சரணமடைந்து அவர்களை ஜயிக்க உபாயம் கேட்டார்கள்.

அதற்கு பிரஹ்மா "இவர்களுக்கு மனஸில் வாஸனையில்லாமலிருக்கும்வரை உங்களால் ஜயிக்க முடியாது. அவர்களுக்கு வாஸனையை ஏற்படுத்திவிட்டால் ஸுலபமாய் ஜயிக்கலாம். அவர்கள் யுத்தத்திற்கு வரும்போது யுத்தம் செய்துகொண்டிருக்கையிலேயே ஓடி விடுங்கள். மறுபடியும் யுத்தத்திற்குப் போங்கள்; அப்பொழுதும் ஓடுங்கள். இவ்விதம் பலதடவை செய்தீர்களேயானுல் அவர்கள் மனஸில் "நம்மைக்கண்டு இவர் ஓடுகிருர்கள்" என்ற எண்ணம் தோன்றி அஹம்பாவமாகப் பரிணமிக்கும். இந்த வாஸனையாகிற கயிற்றிற்குக் கட்டுப் படா

தவர் யாரும் கிடையாது. எவ்வித தீரனுயும் அறிவாளியாயும் பெரியவனுயுமிருந்தாலும் இதற்குள்பட்டவனுகவே ஆவான்'' என்ருர். இதைக்கேட்டு தேவர்கள் அப்படியே பல தடவை யுத்தம் ஓட்டம் என்று காட்டினபடியால் அந்த தாமன் முதலான மூவருக்கும் "நான்'' என்ற எண்ணம் உதித்துவிட்டது. அது வந்தவுடன் தைர்யம் மறைந்தது. பயம் ஏற்பட்டது. பிறகு தேவர் களை அடிக்க சக்தி குறைந்தது. அதினுல் அவர்களே தேவர்க ளால் கொல்லப்பட்டு விட்டார்கள்.

இவ்விதம் அஹங்காரம் ஏற்பட்டு அவர்கள் நசித்து விட்டார் களென்று தெரிந்துகொண்ட சம்பராஸுரன் மறுபடியும் மாயை யைப் பிரயோகித்து வேறு மூவர்களை ஸ்ருஷ்டித்தான். அவர்கள் சாஸ்திரமறிந்தவர்கள், விவேகமுள்ளவர்கள், அஹங் காரமற்றவர்கள், மோஹத்தை அடையாதவர்கள், அவர்கள் பீமன், பாஸன், த்ருடன் என்ற பெயருள்ளவர்கள். அவர்க ளுக்கு ராகமோ துவேஷமோ கிடையாது எங்கும் ஸமதிருஷ்டி யுள்ளவர்கள்; எல்லாமறிந்தவர்கள்; ஜனன மரணம் முதலியவற் றிற்குப் பயப்படாதவர்கள். பயங்மரமாயிருப்பவர்கள்; ஏற்பட்ட கார்யத்தை சரிவர செய்கிறவர்கள். இவர்களால் தாக்கப்பட்ட போதும் தேவர்களால் ஒன்றும் செய்ய முடியாமல் மஹாவிஷ் ணுவை சரணம் அடைந்தார்கள். அதன்பேரில் அவரே நேரில் வந்து யுத்தம் செய்து வாஸனையற்ற இந்த மஹாத்மாக்களை சக்ராயுதத்தினுல் அடித்து அடக்கி மோக்ஷத்தைக் கொடுத்தார்.

இதிலிருந்து வாஸனைக்குள்பட்டால் பந்தம், வாஸனையற்றி ருந்தால் மோக்ஷம் என்று தெரிகிறது. வாஸனையென்பது வாஸ்தவமாயுள்ள தத்வத்தை அறிவதினுல் நாசத்தையடை கிறது. எல்லாவித உபத்திரவத்தையும் செய்துகொண்டிருக்கிற இந்த ஸம்ஸார துக்கத்திலிருந்து விடுபட, தன் மனஸை நிக்ர ஹம் செய்வதென்ற ஒரே உபாயம்தான் உண்டு. போகத்தில் ஆசையிருந்தால் பந்தம்; அவ்வாசையை விடுவதே மோக்ஷம். மனஸ் வெளிக்கிளம்புவதுதான் ஆபத்து; மனஸ் நசிப்பதே க்ஷேமம். "எனக்கு இது வேண்டும். எனக்கு இது வேண்டாம்'' என்ற எண்ணம் இருக்கும்வரை புத்தி ஸத்யமான வஸ்துவை நாடாது. எவன் மூவுலகங்களையும் துரும்பாக மதிக்கிருனே, அவனிடம் ஆபத்துக்கள் அணுகா. எல்லா ஆபத்துக்களும் அவனுக்கு ஸம்பத்தேயாகும். எதிலும் ஆதரவு வைக்காமலி

ருப்பதே அதை ஜயிக்கும் வழி. எப்பொழுதும் நாசமடையாமலி ருந்து கொண்டேயிருக்கிற பிறவி என்ற மரத்திற்கு முதல் முளை அஹங்காரம்; "இது என்னுடையது" என்ற பாவனைகள்தான் அதன் கிளைகள்; கெட்ட பழங்களையே கொடுக்கும்.

இந்த அஹங்காரம் மூன்று விதம் என்று சொல்லலாம். "நான், இது, உலகம், எல்லாமே அழிவற்ற பரமாத்மாதான். அதுவே நான். அதைத் தவிர வேறு எதுவும் கிடையாது." என்ற எண்ணம் உத்தமமான அஹங்காரம். "எல்லாவற்றை யும் அறிந்துகொண்டு, அவைகளுக்கு வேருக, அதிஸூக்ஷ்ம மாக அறிவு ஸ்வரூபமாயிருப்பவன் நான்" என்பது இரண்டா வது அஹங்காரம். "கை கால் முதலியதுடனிருக்கிற இதுவே நான்" என்ற தீர்மானம் மிகவும் கீழ்ப்பட்ட மூன்ருவது அஹங் காரம். முதல் இரண்டுவித அஹங்காரங்களைக் கைக்கொண்டு, துக்கத்தையே கொடுக்கும் மூன்ருவது அஹங்காரத்தை விலக்கிவிட வேண்டியது. பிற்பாடு கிரமமாக அந்த முதல் இரண்டு அஹங்காரங்களையும் நன்கு உதறிவிட்டு எவ்வித அஹங்காரமுமன்னியில் நிலைத்துவிட்டானேயாகுல் சாசுவத மான உத்தமமான நிலையை அடைவான் அதுவே எல்லாவற் றிற்கும் மேலான நன்மை. அதையே பரமபதம் என்பார்கள்.

## அத்யாயம் 10

## உலக ஸ்ருஷ்டி

**வஸிஷ்டர்** : எவ்விதம் ஆகாசமானது வெகு ஸூக்ஷ்மமா யிருப்பதால், எங்குமிருந்தும் கூட காணப்படுகிறதில்லையோ, அப்படியேதான் "சித்" என்று சொல்லப்படும் ஆத்மா, எங்கு மிருந்தும் கூட, காணப்படுவதில்லை. அதற்கு அவயவங்கள் கிடையாததால் நாசமும் கிடையாது. அது உண்டாவதுமில்லை, கிளம்புவதுமில்லை. நிற்பதுமில்லை, போவதுமில்லை, வருவது மில்லை, இங்கே இருக்கிறதென்பதுமில்லை, இங்கேயில்லையென் பதுமில்லை, இதுதான் விரியும்போது உலகம் என்ற பெயரால் விளங்குகிறது. நீ எதனுல் சப்தத்தை அறிகிருயோ, ரஸம் ரூபம் கந்தம் முதலியவைகளை அறிகிருயோ, அதுதான் ஆத்மா. அதுவே பரப்பிரஹ்மம். அதுதான் எங்கும் நிரம்பி

யிருக்கிறது. அதைத் தவிர வேறு உண்டு என்ற கல்பனைக்கே இடமில்லை. எப்படி உஷ்ணத்தன்மையைத் தவிர அக்னியில் வேறு கிடையாதோ, அப்படியே பிரஹ்மத்தைத் தவிர உலகத்தில் வேறு எதுவும் கிடையாது.

ஆனால் சிஷ்யனுக்கு இந்த தத்வத்தை முதலில் போதிக்கக் கூடாது. சமம் வேண்டும், தமம் வேண்டும், என்று தான் போதித்து அவனை உத்தமமான குணங்களுள்ளவனாகச் செய்ய வேண்டும். பிறகு "இது எல்லாம் பிரஹ்மம், நீயும் சுத்தமான சைதன்யம்" என்று போதிக்கவேண்டும். ஒன்றும் தெரியாதவனிடத்திலும் அரைகுறையாகத் தெரிந்து கொண்டிருக்கிறவனிடத்திலும் "எல்லாம் பிரஹ்மம்" என்று எவன் சொல்கிறானோ, அவன் அவர்களை பெரிய நரகத்தில் தள்ளினவனேயாவான். அவித்யா தசையிலுள்பட்ட உத்தமமான அவித்யையாகிற வித்யையினால்தான் அவித்யையும் போக்க முடியும். அழுக்கைப் போக்கடிக்க வேறொரு சுத்தமான அழுக்கினால்தான் முடியும். சுத்தமான ஆகாசத்தைக்கொண்டு விலக்கிவிட முடியாது. கடைசியில் அழுக்கைப் போக்கடித்த அழுக்கையும் அலம்பிவிட வேண்டியதுதான். இந்த அவித்யை எப்படி ஏற்பட்டது, ஏன் ஏற்பட்டது என்றெல்லாம் விசாரணை செய்யவேண்டாம். அந்த அவித்யை விலகிவிட்டால் எல்லாம் தெளிவாகத் தெரியும். அதை விலக்குவதற்கே பிரயத்னம் செய்.

இவ்வுலகம் எப்படி ஏற்பட்டது என்பதை ஒருவாறு சொல்கிறேன், கேள். "சித்" ஆகிய பெரிய ஸமுத்திரத்தில் உள்ளடங்கிய சைதன்ய சக்தி கொஞ்சம் கலைந்தது. ஏன் என்று கேட்கக் கூடாது. கலைந்தவுடன் தேசம், காலம், செயல் இவைகளுக்கு இடமேற்பட்டவுடன் ஜீவன் என்பார்கள். வாஸனைகள் ஏற்படும் போது அஹங்காரம், தீர்மானம் செய்யும்போது புத்தி, ஆலோசனை செய்யும்போது மனஸ், என்ற பெயர்களை அடைகிறது. மனஸ் நன்கு தடித்தவுடன் இந்திரியங்கள், பிறகு கை, கால் முதலியவைகளுடைய சரீரம், என்று ஏற்படுகிறது. பட்டுப்பூச்சி தானாகவே தன்னைச் சுற்றி நூல்களை உண்டு பண்ணி அந்தக் கூட்டுக்குள் அகப்பட்டுக்கொள்வது போல ஜீவன் வாஸனை அஹங்காரம் முதலியதை ஏற்படுத்திக்கொண்டு துக்கத்தினால் பீடிக்கப்பட்டவனாக ஆகிறான். அவன் ஏற்படுத்திக் கொள்ளும்

கூடுகளிலுள்ள வித்தியாஸத்தினுல் தேவன், மனுஷியன், மிருகம் முதலான உருவங்களுள்ளவனுகத் தோன்றுகிருன் ஒன்றுக்கொன்று வெவ்வேறு போலவும் தோன்றுகிறது. வாஸ்தவத்தில் ஸமுத்திரத்தில் தோன்றும் நீர்க்குமிழிகள் வெவ்வேறு உருவத்துடனும் வெவ்வேருகவும் தோன்றினபோதிலும் எல்லாம் எப்படி ஸமுத்திரத்திலிருந்து வேறுபட்டவை அல்லவோ, அப்படியே ஸகல ஜீவன்களும் சைதன்ய ரூபர்களே.

மனஸ் தடித்தால் இந்திரியமாகவும் தேஹமாகவும் ஆகிறதென்று சொன்னேன். அது எப்படியென்று சொல்கிறேன். கேள் முதலில் மனஸ் சப்தமென்ற அனுபவத்திற்கு வேண்டிய சுத்தமான ஆகாசத்தை பாவனை செய்து ஆகாசமாகிவிட்டது; பிறகு சப்தத்துடன் அசைவுமிருக்க வேண்டுமென்று நினைத்து ஸ்பர்சம் என்ற அனுபவத்திற்கு வேண்டிய வாயுவாக ஏற்பட்டது சப்தம் ஸ்பர்சம் இவைகளுடன் உஷ்ணத்தையும் ஸங்கல்பிக்கும்போது ரூபத்திற்கு ஆசிரியமான தேஜஸான அக்னி ஏற்பட்டது.. இந்த மூன்று குணங்களுடன் ருசியும் வேண்டியபோது ரஸத்திற்கு ஆசிரியமான ஜலம் ஏற்பட்டது. அவைகளுடன் கந்தமும் ஏற்படும்போது பிருதிவீ ஏற்பட்டது. இவ்விதமாக ஸூக்ஷ்மமான பூதங்களால் தன்னை சுற்றிக்கொண்டு தன்னை பார்த்துக்கொள்ளும்போது ஆத்மா தன்னை பிரகாசமான ரூபமுள்ளதாகப் பார்த்தார். தங்கத்திற்கு ஸ்வபாவத்தில் எவ்வித ரூபமும் கிடையாதபோதிலும் அதை உருக்கி ஒரு மூஷாவில் விட்டால் எப்படி அந்த தங்கமே அந்த மூஷாவையனுசரித்து ரூபமுள்ளதாக ஆகிறதோ, அப்படியேதான் எவ்வித ரூபமுமில்லாத சைதன்யம் கலங்கி பாவனை செய்யும்போது ரூபமுள்ளதாக ஆகிறது, அவ்விதம் ஏற்படும் முதல் ரூபமுள்ளவர்தான் பிரஹ்மா எனப்படுகிருர்.

அவர்தான் பின்னுல் தன் ஸங்கல்பத்தினுல் எல்லா பிரஜைகளையும் ஸ்ருஷ்டி செய்கிருர். அவர்கள் ஸ்வர்க்கத்தையோ மோக்ஷத்தையோ அடையவேண்டிய ஸாதனங்களைக் கண்டு தர்ம சாஸ்திரங்களையும் இயற்றிக்கொடுக்கிருர், புத்தி, ஸத்வம், பலம், உத்ஸாஹம், ஞானம், ஐசுவர்யம் எல்லாம் உள்ளவராக இருக்கிருர். முன் கல்பங்களில் சென்றிருந்த உலகங்களை ஞாபகப்படுத்திக்கொண்டு அப்படியே இப்பொழுதும் உலகத்தை ஸ்ருஷ்டி செய்கிருர், இவ்விதம் இந்த ஜகத் ஸங்கல்பத்தினு

லேயே உண்டானது. அந்த ஸங்கல்பம் நின்றுவிடுமேயானல் உலகமும் அடங்கிவிடும். எண்ணெய் இல்லாத தீபம்போல ஸங்கல்பத்திலேயே ஏற்பட்டதால் இதை ஒரு நீண்ட ஸ்வப்னம் என்று அறிந்துகொள். ஆகையால் தத்வத்தையறிந்தவன் உலக வியவஹாரத்திலுமிருப்பான். கிடைத்ததை எடுத்துக் கொள்வான். போய்விட்டதை கவனிக்கமாட்டான். கிடைக்காத போகங்களை விரும்பமாட்டான். வந்திருப்பதை அனுபவிப்பான் அவனுக்கு விருப்பமென்பது கிடையாது. விருப்பமில்லையென்பதும் கிடையாது. ஜலத்திலுள்ள தாமரையிலே ஜலத்துடன் ஒட்டாததுபோல் இவனுடைய புத்தி கார்யம் செய்துகொண்டிருந்தாலும் எதினாலும் பாதிக்கப்படாது. இதுவே அறிவாளியின் லக்ஷணம்.

மனஸ் அடங்கினல் ஸம்ஸாரமாகிற பிராந்தி விலகிவிடும் ஆசையென்பதை அறவே விட்டு பிரயத்தினம் செய்து மனஸை அடக்குவதைவிட வேறு உபாயம் கிடையாது. ஸங்கல்பத்தை செய்வதில்லையென்றுள்ள தீர்மானத்தினல்தான் மனஸ் அடங்கும். "இவன், அவன், இது, அது, நான், எனக்கு" என்ற இவ்வளவுதான் மனஸ் என்பது. உறுதியான பௌருஷத்தை யவலம்பித்துக்கொண்டு இதை அடக்கிவிட்டால் உத்தமமான நிலையை அடைந்து விடலாம். அதுவே பிரஹ்மம் எனப்படும். உஷ்ணமாயிருப்பது எப்படி அக்கினியின் ஸ்வபாவமோ, அப்படியே சஞ்சலமாயிருப்பது மனஸின் ஸ்வபாவம். அந்த சஞ்சலத்தன்மையை நிறுத்திவிட்டால் மனஸே நசித்துவிடும், அதை நிறுத்தவும் மனஸிற்குத்தான் ஸாமர்த்தியம். ஆகையால் மனஸைக் கொண்டே மனஸை அடக்கவேண்டும் போகத்திலுள்ள வாஸனையைவிட்டு விட்டால் மனஸ் தானே அடங்கிவிடும். ஆசைதான் அவித்யை என்பதும். அவித்யை நாசம் செய்வது என்பது மனஸை நாசம் செய்வதேயாகும் அந்த நாசம்தான் மோக்ஷம் எனப்படும். "நான் பிரஹ்மம் அல்ல" என்ற உறுதியான எண்ணத்தினல் மனஸ் பந்தத்திற்கு உள்படுகிறது. "எல்லாம் பிரஹ்மமே" என்ற உறுதியான எண்ணத்தினல் மனஸ் பந்தத்திலிருந்து விடுபடுகிறது, "நான் இளைத்திருக்கிறேன்" நான்

னை கால் முதலியதுள்ளவன், கட்டுப்பட்டவன், துக்கமுள்ள வன்'' என்றெல்லாம் எண்ணும்வரை பந்தம் உண்டு. ''நான் தேஹமில்லை, துக்கமுள்ளவனுமில்லை, இவைகளுக்கெல்லாம் வேருகவும், மேலாகவுமுள்ள ஸத்யவஸ்து'' என்ற தீர்மானமேற் பட்டுவிட்டால், அப்பொழுது அவித்தை விலகி முக்தனுகிருன். ஸத்யமாய் எப்பொழுதும் எங்கும் விளங்கிக்கொண்டேயிருக் கிற பிரஹ்மம் ஜனங்களுக்கு மறந்துவிடுகிறது; அஸத்யமா யுள்ள அவித்யையே அவர்கள் முன்தோன்றிக்கொண்டிருக்கி றது- என்ன ஆச்சர்யம் இது?

## அத்யாயம் 11

## தாசூர உபாக்யானம்

**ஸ்ரீராமர் :** ஸ்ருஷ்டி என்பது ஒரேவிதம்தானு? பலவித முண்டா?

**வஸிஷ்டர் :** மாயை ஸ்ருஷ்டிப்பதில் எவ்வித நியமமும் கிடையாது. பலவிதமாகவேயிருக்கும். மகததேசத்தில் தாசூரர் என்ற ஒரு தபஸ்வீ இருந்தார். அவருடைய பெற்றேர்கள் இறந்தபோது வெகு துக்கமடைந்தார். அப்பொழுது அங்குள்ள வனதேவதை அவருக்கு தேறுதல் சொன்னுள். ''எல்லாமறிந்த வராயிருந்தும் மூடன் மாதிரி அழுகிறீரே! ஸம்ஸாரமென்பது நிலையற்றதுதானே! பிறப்பது, ஜீவித்திருப்பது, பிறகு இறப்பது என்பது ஏற்பட்டக் கிரமம்தானே'' என்று அவள் சொன்னதின் பேரில் இவர் தைர்யத்தைக் கைக்கொண்டு பிராஹ்மணர்களுக் குரிய தர்மத்தையனுஷ்டித்து வந்து மிகவும் ஆசாரபரரான சுரோத்திரியராக ஆகிவிட்டார். பிறகு அக்கினியைசரிவர ஆரா திக்க நினைத்ததில் பூமியில் எங்கு பார்த்தாலும் அசுத்தமாகவே அவருக்கு தோன்றினபடியால் ஸங்கல்பத்தினுலேயே ஒரு மரத்தின் பேரில் கொடிகளால் ஒரு குடிசைக் கட்டிக்கொண்டு அங்கேயே மனஸினுலேயே அசுவமேதாதி யாகங்களைச்செய்து தேவர்களை பத்து வருஷகாலம் ஆராதித்து வந்தார். அதின் பல னுக இவர் மனஸ் தெளிவடைந்து ஞானமேற்பட்டுவிட்டது.

இவரிடம் அந்த வனதேவதை தனக்கு ஒரு புத்திரன் வேண்டுமென்று கேட்டதற்கு இவர் ஒரு புஷ்பத்தை அவளுக்குக் கொடுத்தார். வெகு நாள் சென்று அவள் பன்னிரண்டு வயதுள்ள ஒரு பாலகனையும் அழைத்துக்கொண்டு வந்து இவரிடம் "இவனை எல்லா கலைகளிலும் வித்வானாகச் செய்துவிட்டேன். ஆத்ம ஞானத்தை மட்டும் இவனுக்கு உபதேசிக்கவேண்டும்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள். அதன் பேரில் இவரே அவனுக்கு உபதேசம் செய்தார்.

**தாசூரர் :** "தாங்தோன்றி" என்றதோர் அரசன் மூவுலகங்களிலும் கியாதி உள்ளவனாக விளங்கினான். அவனுடைய ஆக்ஞையை எல்லாரும் தலையால் தாங்குவார்கள் இவனுக்கு மூன்று தேஹங்கள் உண்டு. உத்தமம், மத்யமம், அதமம் என்று இவைகளைக்கொண்டு உலகத்தையே ஆக்கிரமித்தான். அவன் பிறந்ததே ஆகாசமானதினால் அங்கேயே இருந்தான் அவன் இருப்பிடத்தில் பதினான்கு ராஜவீதிகளுள்ள நகரத்தை ஸ்ருஷ்டிசெய்து கொண்டான் அதில் ஏழு குளங்கள், இரண்டு பெரிய தீபங்கள் உண்டு ஒன்பது வாசல்களுள்ள அநேக வீடுகளையும் ஏற்படுத்தினான். அவைகளில் பலவிதமாக கிரீடித்துக் கொண்டிருப்பான் வேறு நகரத்தையும் உண்டு பண்ணுவான் அதை விட்டுவிட்டு வேறு இடம் போவான். தன்னுடனேயே வியவஹாரம் செய்துகொள்வான். சிலஸமயம் வெகுஸந்தோஷமாயிருப்பான். சில ஸமயம் துக்கப்படுவான்.

இவ்விதம் தாசூரர் சொன்னவுடன் அவர் புத்திரன் "இந்த தாங்தோன்றி என்ற அரசன் யார்?" என்று கேட்டான் அதற்கு அவர் பதில் சொல்லுகிறார்.

**தாசூரர் :** ஸம்ஸாரத்தின் ஸ்திதியைத்தான் உனக்கு இவ்விதம் சொன்னேன். ஆகாசம்போல் நிர்மலமாயுள்ள பரமாத்மாவிலிருந்து ஏற்படும் ஸங்கல்பமே அந்த தாங்தோன்றி என்பவன் அது தானாகவே உண்டாகிறது தானாகவே நசிக்கிறது. சூன்யமான ஆகாசத்தில் அதினாலேயே இந்த மூவுலகமாகிற நகரம் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கிறது, ஸத்யலோக முதல் ரஸாதலம்

வரையுள்ள பதினான்கு லோகங்களும் ராஜவீதிகள். ஸூர்யனும் சந்திரனும் தீபங்கள், ஏழு ஸமுத்திரங்களும் குளங்கள். உலகத்திலுள்ள பலவித சரீரங்கள் வீடுகள். மூன்று சரீரங்கள் என்றது ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிற மூன்று குணங்கள். தன்னுடைய செய்கையினாலேயே துக்கத்தையோ ஸுகத்தையோ அடைகிறான். தமஸை அவலம்பித்து ஸங்கல்பம் மிகவும் இழிவான கார்யங்களைச் செய்து பூச்சி புழுவாக ஜன்மத்தையடைகிறது. ஸத்வத்தை அவலம்பித்து தர்மம் ஞானம் இவைகளில் ஈடுபட்டு உத்தமமான நிலையை அடைகிறது. ரஜஸை அவலம்பித்து ஸம்ஸாரத்தில் அகப்பட்டுக்கொண்டு புத்திரன் மனைவி என்ற அபிமானத்தையடைந்து நடந்து வருகிறது. இந்த மூன்று வித ஸங்கல்பத்தையும் விட்டு விட்டால் பரமாத்மாவின் நிலையையே அடையலாம்.

மனஸினால் மனஸை அடக்கி ஸங்கல்பத்தை இல்லாமல் செய்யவேண்டும் ஆயிரக்கணக்கான வருஷங்கள் தபஸ் செய்தாலும்கூட, அந்த நிலையையடைவதற்கு, ஸங்கல்பத்தை இல்லாமல் செய்வதைத் தவிர வேறு உபாயம் கிடையாது. ஸங்கல்பம் க்ஷயமாகிவிட்டால் சைதன்யம் ஜடத்தைநோக்கியிருப்பதை விட்டுவிடும். சுத்த சைதன்யத்தையே நாடும்: அப்பொழுது இரண்டாவதற்ற ஆனந்தம் ஏற்படும்.

**புத்திரன் :** ஸங்கல்பம் என்பது எப்படியுள்ளது? எப்படி ஏற்படுகிறது? எப்படி வளர்கிறது? எப்படி நசிக்கும்?

**தாசூரர் :** "இருக்கிறது" என்று மாத்திரம் சொல்லக் கூடியதாய், எல்லையற்றதாய், ஆத்ம தத்வமாயுள்ள அறிவுக்கு அறியப்படுவதை நோக்கும் தன்மை எதுவோ, அதுதான் ஸங்கல்பமாகிற முளையாகும். சைதன்யம் அறியப்படுவதை தன்னைவிட வேறுபோல் பாவிப்பது ஸங்கல்பம்; விதையிலிருந்து முளை கிளம்புவதுபோல இது ஏற்படுகிறது. இது தானாகவே உண்டாகி தானாகவே வளர்ந்து ஸுக துக்கத்தைக் கொடுக்கிறது, அந்த பாவிப்பதை இல்லையென்று செய்துவிட்டால் அவசியம் ஸங்கல்பம் நசித்துவிடும். இது ஜீவனுடன் கூடவே பிறந்

ததாயிருந்தாலும், பிரயத்தினத்தினுல் விலக்கிவிட முடியும், கூடவே ஏற்பட்ட உமியை அரிசியிலிருந்து விலக்குவதுபோல்.

**வஸிஷ்டர் :** இவ்விதம் தாசூரர் செய்த உபதேசத்தை நன்கு ஆலோசித்துப்பார். பரமாத்மாவிடத்தில் செய்யும்தன்மை செய்யாமலிருக்கும் தன்மை இரண்டுமேயிருக்கிறது. செய்யாமலிருக்கும் தன்மையை உறுதியாக பாவித்தால் எதுசெய்தாலும் அதினுல் பாதிக்கப்படமாட்டான் செய்யும் தன்மையைய பாவிக்கிறதானுல் எல்லாவற்றையுமே செய்வதாக பாவிப்பது உத்தமம். அல்லது,செய்யாத்தன்மை,செய்யும் தன்மை இரண்டையுமே விட்டுவிட்டு, "இருக்கிறது" என்று மாத்திரமுள்ள நிலையில் உறுதியாயிருக்கவேண்டும். எப்படியும், தேஹத்தில் நான் என்ற எண்ணத்தை விட்டுத்தான் ஆகவேண்டும். வாஸனைக்கு உள்படுவதே பந்தம்; வாஸனை நசிப்பது மோக்ஷம். வாஸனையை பூரா விட்டு விட்டு மோக்ஷம் கிடைக்க வேண்டுமென்ற எண்ணத்தையும் விட்டு விடவேண்டும்,

முதலில் சப்தம் ஸ்பர்சம் முதலிய விஷயங்களால் ஏற்பட்டுள்ள தாமஸமான வாஸனைகளை விட்டுவிட்டு, மைத்ரீ (ஸ்நேஹ பாவம்) முதலான சுத்த வாஸனைகளை கைக்கொள்ளவேண்டும். அதற்குப்பிறகு அவைகளையும் விட்டுவிட்டு, அவைகளை வியவஹாரம் செய்துகொண்டிருந்தபோதிலுல், உள்ளே எல்லாவித ஆசையுமடங்கி, சைதன்யத்தில் மாத்திரம் வாஸனையுள்ளவனுய் இருக்க வேண்டும். மனஸ், புத்தி இவைகளுக்கு ஸம்பந்தபட்டதாயுள்ள இந்த வாஸனையையும் விட்டு விடவேண்டும். எதைக்கொண்டு இதை விடுகிருயோ அதையும் விட்டுவிடவேண்டும். அதன்பிறகு ஸமாதி நிலையில் இருந்தாலும் இருக்கலாம் இல்லாமலும் இருக்கலாம். கர்மாக்களையே செய்யட்டும், அல்லது செய்யாமலே இருக்கட்டும். இவனுக்கு கர்மாவற்று இருப்பதினுலும் ஆகவேண்டியது ஒன்றுமில்லை; கர்மாவைசெய்வதினுல் ஆகவேண்டியது ஒன்றுமில்லை; எல்லா வாஸனைகளையும் விட்டு சும்மாவிருப்பதற்கு மேலாக எந்த நிலையும் கிடையாது.

முன்னொருஸமயம் பிரஹஸ்பதியின் புத்திரன் கசன் ஸமாதி கலைந்து எழுந்தபோது "நான் எதைச்செய்யவேண்டும்" எங்கே போகவேண்டும்? எதை எடுத்துக்கொள்ள வேண்டும்? எதைத் தள்ள வேண்டும்? பிரளய காலத்து ஜலத்தைப்போல என்னால் உலகம் பூராவும் நிரப்பப்பட்டிருக்கிறதே? நான் இல்லாதவிடம் எதுவும் இல்லையே? என்னிடத்தில் இல்லாதது எதுவுமில்லையே? எல்லாம் சைதன்யமாயிருக்கும்போது வேறு என்று எதை நான் விரும்பமுடியும்"? என்று தன் அனுபவத்தை வெளியிட்டான். எவர்கள் அந்த நிலையை அடைந்திருக்கிறார்களோ, அவர்களுடைய அடிச்சுவடைப் பின்பற்றவேண்டும் ஆகையால் எப்பொழுதும் "நான் யார்? இது எப்படி"? என்று பிரயத்தினத்துடன் விசாரணை செய்யவேண்டும், தமஸ் ரஜஸ் என்ற பிறவியுள்ளவர்கள்கூட தன் பிரயத்தினத்தினால் ஸாத்விகமாக ஆவார்கள்.

## அத்தியாயம் 12

## ஜனக உபாக்கியானம்,

**வஸிஷ்டர்** : இது எல்லாமே பிரஹ்மம். ஆத்மாதான் இவ்விதம் எல்லாமாக விஸ்தாரத்தையடைந்திருக்கிறது இவ்விதம் வியாபகமாய் நித்யமாயிள்ள பிரஹ்மத்தில் கல்பனைக்கு இடமேயில்லை. அப்படியிருக்க "நான் வேறு, இது வேறு" என்று எண்ணுவது வெறும் பிராந்தி. எதுவும் வேண்டுமென்றிராமல், வந்ததை அனுபவித்துக்கொண்டு, எடுப்பது, தள்ளுவது இரண்டுமில்லாமல், எவ்வித கவலையுமற்று இருக்கவேண்டும், ஆனால் இந்த நிர்மலமான அறிவு. எவனுக்கு இது கடைசி ஜென்மமோ, அவனுக்குத்தான் ஏற்படும். பெருந்தன்மை, ஸ்நேகம், ஞானம் முதலியவை அவனிடமிருக்கும். ஜனங்களும் அவனை வெகுவாக விரும்புவார்கள். குரு சொல்கிறபடி அனுஷ்டானம் செய்து மெள்ள மெள்ள ஒரே ஜன்மாவிலேயோ பல ஜன்மாக்களிலேயோ இந்த நிலையை அடைவது தான் எல்லாருக்கும் ஏற்பட்ட பொதுவானவழி. இரண்டாவது வழியுமுண்டு. அதில் கொஞ்சம் ஏற்கெனவே மனஸ் பரிபாகமடைந்திருக்கும் விஷயத்தில் தானா

கவே நன்கு ஆலோசனை செய்யும்போது, ஆகாசத்திலிருந்து பழம் விழுவதுபோல, ஞானம் ஏற்பட்டுவிடலாம். அதற்கு திருஷ்டாந்தம் சொல்கிறேன், கேள்.

ஜனக மஹாராஜன் ஒரு ஸமயம் உத்யான வனத்தில் ஏகாந்தமாக ஸஞ்சரித்துக்கொண்டிருக்கையில் சில மஹான்களான ஸித்தர்கள் மறைவிலிருந்தவர்கள் தங்களுக்குள் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டிருந்தது இவர் காதில் விழுந்தது. "பார்ப்பவன், பார்வை, பார்க்கப்படுவது என்பதையெல்லாம் வாஸனையுடன் சேர்த்துத் தள்ளிவிட்டு பிரகாசங்களுக்கெல்லாம் பிரகாசத்தைக் கொடுக்கிற ஆத்மாவை நாங்கள் உபாஸிக்கிறோம். எல்லா வஸ்துக்களிலிமிருந்துகொண்டு மேலே ஸஞ்சரிக்கும் ஸூர்யனை உபாசிக்கிறோம். தன்னுடைய ஹிருதயமாகிற குஹையிலேயே இருந்து வருகிற ஈசுவரனை விட்டு விட்டு, எவர்கள் வேறு தேவனையடைய நினைக்கிறார்களோ, அவர்கள் கையிலிருக்கிற கௌதுபஸ்தை விட்டு விட்டு, வேறு ரத்னத்தைத் தேடுகிறார்கள். எல்லா ஆசைகளையும் விட்டு விட்டால் இந்த உத்தமமான பலன் கிடைக்கும். மற்ற வஸ்துக்களில், ஆரம்ப முதல் கடைசிவரை ரஸமற்றது என்று அறிந்திருந்தும்கூட, ஆசையைவைத்தால் அவன் மனிதனல்ல, கழுதையே ஆவான். இந்திரியங்களாகிற சத்துருக்கள் கிளம்பக் கிளம்ப அவைகளை நன்ருக நசுக்கிக் கொல்லவேண்டும். அவ்விதம் செய்தால் மனஸ் அடங்கும், மனஸ் அடங்கினல், ஸுகமான நிலை ஏற்பட்டே தீரும்" என்று அவர்கள் சொல்லிக்கொண்டேயிருப்பதைக் கேட்க நேரிட்ட மஹாராஜன் வெகு கவலையுடன் புலம்பினர்,

"காலமென்பதற்கு ஆதியும் இல்லை, அந்தமும் இல்லை. அதற்குள் ஏதோ ஒரு அம்சத்தில் நான் ஜீவித்திருக்கிறேன், இந்த அல்பமான வாழ்வில் பற்றுதல் வைக்கிறேனே! என்னைச் சுடு! என்னுடைய ஆயுஸோ. என்னுடைய இந்த ராஜ்யமோ எம்மட்டும்? எத்தனையோ பிரஹ்மாக்கள் கோடிக்கணக்காக போய்விட்டார்கள். ஸ்ருஷ்டிகள்தான் எத்தனை ஆகியிருக்கின்

றன? புழுதியைப்போல எத்தனையோ அரசர்கள் போய்விட்டார்கள், என் வாழ்வில் உறுதி ஏது? பால்யத்தில் அறியாமை கெடுக்கிறது, யௌவனத்தில் காமம் கெடுக்கிறது. மீதியுள்ள காலத்தில் கவலை வாட்டுகிறது. இந்த ஜடன் எப்பொழுது என்ன செய்ய முடியும்? "இருக்கிறது" என்று நினைப்பது "இல்லை" என்றுவது அழகாயிருப்பது அழகற்றதாக ஆகிவிடுகிறது. ஸுகங்களின் தலையில் துக்கங்களும் உட்கார்ந்துகொண்டிருக்கின்றன. எதை நான் உறுதியாய் அவலம்பிக்க முடியும்? எவர்களுடைய கண் திறப்பதும் மூடுவதுமே உலகத்தின் உற்பத்தி லயமாக விருந்ததோ, அவர்களுமே போய்விடுகிறார்கள். என்னைப் போலுள்ளவர்களைப்பற்றி கேட்பானேன்? ஸம்ஸாரம் என்பதே துக்கங்களுக்கு இருப்பிடம்; அதன் மத்தியில்இருப்பது இந்த தேஹம். அதில் ஸுகம் எப்படிக் கிடைக்கும்? ஸங்கல்பத்தை அடக்கிவிடுவதால் இந்த ஸம்ஸாரத்தை வற்றவடித்து விடுகிறேன்.

"இப்பொழுது விழித்துக் கொண்டுவிட்டேன். திருடனைக் கண்டு பிடித்துவிட்டேன். மனஸ் என்ற இவனை நசுக்கிவிடுகிறேன். இதுவரை வெகு காலமாக அது என்னை நசுக்கி வந்தது தீர்மானம் செய்து கொண்டு வெகுநேரம் சும்மாவிருந்து விட்டு மறுபடியும் "எனக்கு இங்கு கிரகிக்க வேண்டியது என்ன உண்டு? நான் பிரயத்தினம் செய்து எதை ஸாதிக்க வேண்டும்? சாசுவதமாய், சுத்தமாய், சைதன்யமாயிருக்கிற எனக்கு கல்பனை ஏது?" என்று சிந்தித்து விட்டு, எவ்வித பற்றுதலுமில்லாமல் அப்பொழுதப்பொழுது ஏற்படும் கார்யங்களைச் செய்துவந்தார், வரப்போவதை நினைப்பதில்லை, நடந்ததையும் நினைத்துப் பார்ப்பதில்லை இப்பொழுதுள்ளதை ஸந்தோஷமாய் அனுபவித்து நடந்து வந்தார்.

இவ்விதம் தானாகவே விசாரணை செய்து அடைய வேண்டிய நிலையை அடைந்தார். எல்லா துக்கங்களுக்கும் எல்லையா

கவும், ஆபத்துக்களுக்கெல்லாம் இருப்பிடமாகவும், ஸம்ஸார மாகிற மரங்களுக்கு விதையாகவும்மிருக்கிற அறியாமையை நாசம் செய்ய வேண்டும். அறிவு நன்ருக ஏற்படுவதற்காக பிரயத்தனம் செய்ய வேண்டும். இந்த அறிவே விவேகிக்கு ஹ்ருதயத்திலுள்ள சிந்தாமணி ரத்னம், வேண்டிய பலனையெல் லாம் கொடுக்கும் கல்பகக்கொடி ஜனகரைப்போல் எப்பொழு தும் தனக்குள்ளேயே விசாரணை செய்துகொண்டு, மாறிக் கொண்டேயிருக்கிற இந்த ஜகத்தை நன்கு பார்க்கிறவனுக்குக் காலக்கிரமத்தில் மனஸ் தானுகவே தெளிந்துவிடும், ஸம்ஸாரத் திலிருந்து பயப்படுகிறவர்களுக்கு தன்னுடைய சொந்தப்பிரயக் தினத்தைத்தவிர வேறு சரணம் கிடையாது. தைவம் கர்மாக் கள், சொத்து, பந்துக்கள் எதுவும் உபயோகப்படா, எடுத்துக் கொள்ளவேண்டியதென்று நினைத்து அதனிடம் ஓடுவது, வில க்க வேண்டியதென்று நினைத்து மற்றென்றிலிருந்து விலகுவது, என்று எது மனஸில் தோன்றுகிறதோ அதுவேதான் பந்தம்; வேறு எதுவுமில்லை, ஆகையால் வேண்டியது வேண்டாதது என்ற எண்ணத்தையே விட்டு விட்டு மீதமுள்ளதில் நிலைக்க வேண்டும். பார்க்கப்படுவதை மனஸ் ஆசிரயித்தால் பந்தம்; அதை விட்டு விட்டால் மோக்ஷம். "நான் இது" என்பதை விட்டு விட்டால் ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டி விடலாம்.

**ஸ்ரீ ராமர்:** "நான்" என்பதை விட்டு விட்டால் தேஹமே நசித்து விடாதா?

**வஸிஷ்டர் :** வாஸனையை விடுவது இரண்டு விதம், தியா னத்தினுலும், அறிவினுலும், "நான் என்று நினைத்துக்கொண்டி ருப்பது இந்த அன்னபானுதி பதார்த்தங்களால் ஏற்பட்டது. அவைகளே நான் ஜீவித்திருப்பதற்கு ஆதாரம். அவைகள் இல்லையானுல் நானும் இல்லை; நான் இல்லையானுல் அவைகளும் இல்லைதான்" என்று மனஸினுல் தீர்மானித்துக் கொண்டு விசாரணை செய்து " வாஸ்தவமாயுள்ள நான் என்பதற்கு இந்த பதார்த்தங்களின் தேவை கிடையாது, அவைகளுக்கும் நான்

ஸம்பந்தப்பட்டவனல்ல" என்று உள்ளே குளிர்ந்துள்ள புத்தியுள்ளவனும் வெளியில் கர்மாக்களைச் செய்து கொண்டிருந்தாலும் அவனுடைய வாஸனைத்யாகம் "தியானத்தினால்" எனப்படும். எவன் எல்லாவித வாஸனைகளையும் போக்கடித்துவிட்டு, தான் தன்னுடைய என்ற எண்ணமேயில்லாமல், எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்கிறானோ, அவனுடைய வாஸனைத்யாகம் "அறிவினால்" எனப்படும். இந்த இரண்டுவித தியாகமும் மோக்ஷ நிலைதான், அதையடைந்தவர்கள் இருவரும் பிரஹ்மமாகவே ஆகிவிட்டவர்கள், எவ்வித கவலையுமற்றவர்கள். எவருக்கு வஸ்துக்களைப் பார்க்கும்போது வேண்டும் வேண்டாம் என்ற இரண்டும் ஏற்படவில்லையோ, எவர் தூங்கிக் கொண்டே கேட்கிறவர்போல் சேஷ்டிக்கிறாரோ, இருவருமே முக்தர்கள்தான். மகிழ்ச்சி, பொறுமை, பயம், கோபம், ஆசை, தைன்யம் முதலியவைகளால் எவருடைய மனஸ் தீண்டப்படுவதில்லையோ அவரே ஜீவன் முக்தர் என்று சொல்லப்படுகிறது.

மேலும், தீர்மானம் என்பது நான்குவிதம்; (1) தாயார் தகப்பனார்களால் ஏற்படுத்திக்கொடுத்து கால் முதல் தலைவரையுள்ள இந்த சரீரமே நான் என்ற ஒருதீர்மானம் வாஸ்தவமில்லாததினால் பந்தத்திற்கே காரணமாகும் (2) இவைகளுக்கெல்லாம் வேறாக கேசத்தின்முனையைவிட மிகவும் ஸூக்ஷ்மமாயுள்ளவன் நான் என்பது இரண்டாவது தீர்மானம்; இது மோக்ஷத்திற்கு உபயோகப்படும். (3) ஜகத்திலுள்ள எல்லா பதார்த்தங்களாகவுமிருப்பது நானே என்ற தீர்மானமும் மோக்ஷத்தில் கொண்டுவிடும். (4) ஜகத்என்பதே வாஸ்தவமாகக்கிடையாது என்ற தீர்மானமும் மோக்ஷத்திற்கு ஸாதனமேயாகும்,

இவைகளில் முதலாவது தீர்மானம் ஆசையையுண்டு பண்ணி எப்பொழுதும் பந்தத்திற்கே காரணமாகும். மற்ற மூன்றும் ஆசையற்றதினால் ஜீவன் முக்தர்களிடம் தோன்றும் ஜீவன் முக்தராய் தன்நிலையிலிருப்பவர் எதைக்கண்டும் ஸந்தோஷமோ, வெறுப்போ அடையமாட்டார். வேண்டும் வேண்டாம்

என்ற இரண்டிலிருந்தும் விடுபட்டவர், ஸம்ஸாரத்தில் சோர்வு அடையமாட்டார். உள்ளே எல்லாவித ஆசைகளையும் விட்டவராய் ராகமற்று வாஸனையற்று வெளியில் உலகத்தில் எல்லா கார்யங்களையும் செய்துகொண்டுமிருப்பர். அல்பபுத்தியுள்ளவர்களுக்கு "இவன் பந்து, இவன் பந்துவல்ல" என்ற எண்ணமிருக்கும். உதாரணமான புத்தியுள்ளவர்களுக்கு பூமி பூராவும் ஒரே குடும்பம். இவ்விஷயத்தில் இரண்டு முனி புத்திரர்கள் பேசிக்கொண்டதைச்சொல்கிறேன், கேள். மஹேந்திரபர்வதத்தில் தீர்க்கதபஸ் என்றவொரு முனியிருந்தார், அவர் காலமானவுடன் அவருடைய இரண்டுபுத்திரர்களான புண்யன், பாவனன், என்பவர்களுக்குள் புண்யன் நல்ல அறிவாளி, பாவனன் அரை குறையறிந்தவன். பிதா இறந்ததால் மிகவும் துக்கப்பட்டுக் கொண்டிருந்த பாவனனைப்பார்த்து, புண்யன் "நம் தகப்பனார் அவருடைய சொந்த நிலையான மோக்ஷமென்ற பதவியை அடைந்திருக்கையில் எதற்காக துக்கப்படுகிறாய்? இதற்கு முன்னால் உனக்கே ஆயிரக்கணக்கான தாயார், தகப்பனார்கள் இருந்திருக்கிறார்கள் ஒவ்வொரு ஜன்மாவிலும் புத்திரர்களும் பந்துக்களும் இருந்திருக்கிறார்கள். தாயார், தகப்பனார், புத்திரன் முதலானவர்களைப்பற்றி அபிமானத்தினால் துக்கப்படுவதென்றால் முன்னால் ஆயிரக்கணக்காக இருந்து போய்விட்டவர்களைப் பற்றி ஏன் துக்கப்படவில்லை? தவிரவும், நீயோ முன்னால் ஸிம்ஹமாகவும், வானரமாகவும், யானையாகவும், கழுதையாகவும் காக்கையாகவும் பலவிதமான ஜன்மாக்களை அடைந்திருக்கிறாய்: அப்பொழுதும் ஏராளமாய் பந்துக்கலிருந்து இறந்திருக்கிறார்கள்; அவர்கள் விஷயமாய் நீ ஏன் துக்கிக்கவில்லை? வாஸ்தவத்தில் உண்டாவது, மறைவது பிறப்பது, இறப்பது, என்பதில்லாததே தன் ஸ்வரூபம் என்பதை நன்கு நினைத்துப்பார்." என்று எடுத்துச் சொன்னான். இதைக்கேட்ட பாவனனும் தத்வத்தை யுணர்ந்தவனானான். பிறகு இருவரும் தத்வத்தை அறிந்தவர்களாக தத்வஸாக்ஷாத்காரமுள்ளவர்களாக ஏற்பட்டார்கள். இவ்விதமாக எவ்வித சிந்தனையையும் விட்டு நீயும் இருக்க வேண்டும்.

## அத்யாயம் 13,

## பலி – உபாக்யானம்

**வஸிஷ்டர் :** அக்னி எப்படி விறகு போடப் போட அதிகமாகிறதோ, அப்படியேதான் சிந்திக்க சிந்திக்க கவலை விருத்தியாகும். சிந்திப்பதை நிறுத்தி விட்டால், விறகில்லாத அக்னி போல, கவலையும் அடங்கிவிடும். இதற்கு மற்ற பதார்த்தங்களையோ, பந்துககளையோ, எதிர்பார்க்காமல் தன் தைர்யத்தினுலேயே தன்னை ஸங்கடத்திலிருந்து விடுவித்துக்கொள்ள வேண்டும். வைராக்கியத்தினுலும், சாஸ்த்திரத்தினுலும், பெருந்தன்மை முதலான குணங்களாலும், ஸங்கடத்தை விலக்கிக் கொள்ள தன் பிரயத்தினத்தினுலேயே மனஸை நிமிர்ந்திருக்கச் செய்ய வேண்டும் மனஸ் நிறைந்திருந்தால் உலகம் பூராவும் அமிருத ரஸத்தினுல் நிரம்பியிருக்கும். காலில் செறுப்பிருப்பவனுக்கு பூமி பூராவும் தோல் விரித்திருப்பது போலல்லவா? வைராக்கியத்தினுல்தான் மனஸ் நிறைந்திருக்கும் நிலையையடையும். ஆசையற்ற மனஸ் எப்படி பிரகாசிக்கிறதோ, அப்படி பூர்ணசந்திரன் பிரகாசிக்காது; அது எப்படி நிறைந்திருக்கிறதோ, அப்படி க்ஷீரஸமுத்திரமும் நிறைந்திராது; அது எவ்வளவு அழகாக இருக்கிறதோ, அப்படி மஹாலெக்ஷ்மியின் முகம்கூட இராது

விரோசனனுடைய புத்திரனுன பலி என்ற அஸுரராஜன் பாதாளத்தில் பத்துக்கோடி வருஷங்கள் ராஜ்யம் நடத்தி எல்லாவித போகங்களையும் இடைவிடாமல் அனுபவித்து வந்தார். இவைகளில் அலுப்பு ஏற்பட்டு ஒரு ஸமயம் தனக்குள் ஆலோசித்தார். "இவ்வளவு போகத்தினுல் என்ன கிடைத்தது? இது எப்படி ஸுகமாகும்? திரும்பத் திரும்ப ஸ்திரீகளின் ஆலிங்கனம், ருசிகரமான போஜனம், இப்படியே மாறி மாறி செய்துகொண்டு வருவதில் புத்தியுள்ளவன் லஜ்ஜைப்பட வேண்டாமா? நித்யம் செய்த கார்யத்தையே மறுபடியும் மறு

படியும் செய்வதில் என்ன பிரயோஜனம்? எந்த பிரயோஜன மேற்பட்டால் மறுபடியும் எதுவும் செய்யவேண்டியதாய் இராது? ஆஹா - முன்னொரு ஸமயம் நான்கேட்டபோது என் தகப்பனர் விரோசனர் சொன்னது இப்பொழுது ஞாபகத்திற்கு வருகிறது. எல்லா துக்கங்களுக்கும் ஸுகங்களுக்கும் எல்லையாகவும், எல்லாவித பிராந்திகளும் அடங்குவதாயும் உள்ளது எதுஎன்று நான் கேட்டதற்கு அவர் அப்படி ஒருஇடம் எல்லைதாண்டி இருக்கிறது. அங்கே பூமியும் கிடையாது, ஆகாசமும் கிடையாது; ஸமுத்திரம், மலை, காடு, தீர்த்தங்கள், நதி, குளம் ஒன்றுமே கிடையாது. அங்கே ஒருவராக, பெரியவராக, மிகப்பிரகாசமுள்ளவராக ஒரு அரசன் இருக்கிறர், அவர் சும்மாதான் இருக்கிறர், ஆனலும் எல்லாவற்றையும் செய்கிறர், எங்கும் போகிறர், எல்லாமாகவும் இருக்கிறர் அவருடைய ஸங்கல்பத்திஞல் எல்லாக் கார்யங்களையும் நிர்வாஹிக்கக்கூடிய மந்திரி ஒருவர் ஏற்பட்டார். அவர் ஒருநொடியில் முடியாததையெல்லாம் செய்து வைப்பார். பிரிக்க முடியாததை யெல்லாம் உலைத்து விடுவார். அவருக்கு எதையும் அனுபவிக்கத் தெரியாது, எதையும், அறிந்தவருமில்லை. ஆனல் எப்பொழுதும் ராஜ்ய கார்யங்கள் எல்லாவற்றையும் செய்துகொண்டே யிருக்கிறர். ராஜன் தனித்து ஏகாந்தமாய் ஸ்வஸ்தமாய் இருந்துகொண்டிருக்கிறர். அந்த மந்திரி மிகவும் பலவான். தேவர்கள் அஸுரர்கள் எல்லாரும் லக்ஷக்கணக்காக எதிர்வந்தாலும் இவரை ஜெயிக்கமுடியாது. ஆனல் அவர் தன் யஜமானனல் மாத்திரம் ஜயிக்கக்கூடியவர்; யுக்தியினல் அவர் இவருக்கு வசமாகிவிடுவார்,

"நான் சொல்லிவந்த தேசம் மோக்ஷம் எனப்படும். அங்குதான் எல்லா துக்கங்களும் நசிக்கும். அங்குள்ள ராஜன் ஆத்மா; மந்திரி அறிவுள்ள மனஸ் மனஸை ஜயிப்பதற்கு விஷயங்களில் ஆசை வைக்காமலிருப்பதே யுக்தி. ஸாதாரணமாக மனஸை நான்கு பாகங்களாக வகுத்துக்கொண்டு, ஆரம்பத்தில் இரண்டு பாகங்களை போகங்களுக்கும் ஒருபாகத்தை சாஸ்திரத்திற்கும், மற்றொரு பாகத்தை குருவின் சுசுரூஷைக்கும் என்று

வைக்கவேண்டும். கொஞ்சம் பரிபாகம் ஏற்பட்ட பிறகு, ஒரு பாகம் போகத்திற்கும், இரண்டு பாகங்கள் குருவின்சுசுரூஷைக்கும், மற்றொரு பாகம் சாஸ்திரத்தின் தாத்பர்யத்தை சிந்தனை செய்வதற்கும் என்று செய்ய வேண்டும். நன்கு வ்யுத்பத்தி யேற்பட்டுவிட்டால், இரண்டு பாகங்களை அஸ்திரம் வைராக்கியம் இவைகளாலும்; மற்றவிரண்டு பாகங்களை தியானம், குருஸேவை இவைகளாலும் நிறப்ப வேண்டும். அறிவைக்கொண்டு விசாரணை செய்து மனஸை அடக்குதல், ஆத்மாவை அறிதல், ஆசையைவிடுதல் இவைகளில் எப்பொழுதும் தீவிரமாக ஈடுபடவேண்டும். "என்று அவர் சொன்னது நல்ல வேளையாய் ஞாபகத்திற்கு வந்தது, இப்பொழுது போகங்களில் ருசி விட்டுப்போய்விட்டது, மனஸ் அடங்குவதினால் ஏற்படும் ஸுகத்தில் இறங்குகிறேன். ஆனால் ஆத்மா என்று சொன்னாரே? அது யார்? நான் யார்! என்று நம் குரு சுக்கிராசார்யாரைக்கேட்போம் என்ற தீர்மானத்துடன் அவரை நினைத்தார்.

அப்படி சுக்கிராசார்யார் வந்தவுடன் அவரை நமஸ்கரித்து பூஜைசெய்து ஆசனத்தில் உட்காரச்செய்து. "ஹே பிரபோ, நான் யார்! இந்த உலகம் என்பது என்ன? தயவு செய்து சொல்லவேண்டும்." என்று பிரார்த்தித்தார். அதற்கு அவர் "அதிகமாகச் சொல்வானேன் ஸாரத்தை சுருக்கமாகச் சொல்கிறேன். நீ சித், நானும் சித், இந்த உலகங்கள் எல்லாமே சித், இந்த தீர்மானத்தை உறுதியாய்ப்பிடித்துக் கொண்டு அதினால் பிரகாசிக்கப்பட்ட புத்தியைக்கொண்டு எல்லாவற்றையும் பார். தானாகவே எல்லையற்ற ஆத்ம பதவியையடைவாய்," என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

அதன் பேரில் ராஜன் எல்லாமே சித்மயம் என்ற பாவனையுடன் தியானம் செய்து மனோவிருத்திகளெல்லாம் நின்று, தியானம் செய்கிறவன், தியானம் செய்தல், தியானம் செய்யப்படுவது என்றதில்லாமல் மனஸ் ஒடுங்கி. வாஸனைகள் அற்றுப்

போய், காற்றில்லாதவிடத்திலுள்ள தீபம்போல, லயித்து உத்தமமான நிலையை அடைந்தார். அப்படியே நிர்விகல்ப ஸமாதியில் வெகுகாலமிருந்து விட்டு அது கலைந்து வெளிப்பார்வையுள்ளவராக ராஜகார்யங்கள் எல்லாவற்றையும் கிரமப்படி நடத்தி வந்தார். ஆபத்தோ,ஸம்பத்தோ எல்லாவற்றையும் ஸமமாகவே பார்த்து வந்தார். அவருடைய ஞானம் ஸுக துக்கங்கள் ஏற்படும்போது மறைவதுமில்லை, உண்டாவதுமில்லை.

"மனஸ் எந்த எந்த இடங்களில் பதிகிறதோ அததிலிருந்து வெளிக்கிளம்பி ஆத்ம தத்துவத்திலேயே இணைந்துவிட வேண்டும். இவ்விதம் அப்யாசம் செய்து மனஸாகிற மத யானையை எல்லாவிதமாயும் கட்டிவிட்டால் உத்தமமான சிரேயஸ்தானுகவே கிடைத்துவிடும்.

## அத்யாயம் 14.

## ப்ரஹ்லாத - உபாக்யானம்

**வஸிஷ்டர் :** பிரஹ்லாதர் ஞானத்தையடைந்த முறையையும் சொல்கிறேன், கேள். தேவர்களால் அஸுரர்களெல்லாம் கொல்லப்பட்டதைப்பார்த்து "ஹரியை ஜயிக்க ஹரியேதான் ஸாதனம், ஆகையால் அவரையே சரணம் அடைகிறேன்" என்று தீர்மானித்துக்கொண்டு அவரை மனஸிலேயே ஆராதிக்கவாரம்பித்தார். பூஜைக்கு வேண்டிய விலையுயர்ந்த பாத்திரங்கள், பலவித ஆபரணங்கள்' சந்தனம் முதலியது, தூபங்கள் தீபங்கள் முதலியதெல்லாவற்றையும் கல்பித்துக் கொண்டு பூஜைசெய்தார். அரசனே உலகத்தில் ஆசாரத்திற்குக் காரணமாயிருப்பதால், அவர் இவ்விதமிருக்கிருரென்று தெரிந்து அவருடைய பிரஜைகளாயுள்ள தைத்யர்கள் யாவரும் பக்தியுடன் விஷ்ணு பக்தர்களாக மாறிவிட்டார்கள். இதைக் கண்டு ஆச்சர்யப்பட்டு தேவர்கள் பகவானிடம் சென்று "இதென்ன இப்படி? விரோதமாயிருக்கிறதே? தைத்யர்கள் வெகு கீழ்ப்பட்ட பிறவியிலிருப்பவர்கள் தங்களை உபாஸிக்கிருர்

களே? அவர்கள் எங்கே? விஷ்ணு பக்தி எங்கே?'' என்று கேட்டார்கள். அதற்கு பகவான் "பிரஹ்லாதன் பக்தியுள்ளவனுயிருக்கிருனே என்று கவலைப்படாதீர்கள். இது அவனுக்குக் கடைசி ஜன்மம்; அவன் மோக்ஷமடைய உரியவன். நல்ல குணமுள்ளவன் கெட்டவனுக ஆகிவிட்டால் அனர்த்தம். கெட்டவன் நல்ல குணமுள்ளவனுக ஆனுல் சிலாக்கியமே'' என்றுர். அது முதல் தேவர்கள் பிரஹ்லாதரிடம் ஸ்நேக பாவத்துடன் இருந்து வந்தார்கள்.

இவ்விதம் பிரஹ்லாதர் மனே வாக்குக் காயங்களால் பக்திமானுயிருந்து போக விஷயமான ஆசையை விட்டவராக இருந்தும் நிம்மதியடையவில்லை. இது தெரிந்து பகவானே அவருடைய பூஜா கிருஹம் சென்றுர். உடனே இவர் இரட்டிப்பான பக்தியுடன் அவரை பூஜைசெய்து மனமாற ஸ்துதித்தார். "உனக்கு மறுபடியும் பிறப்பாகிற துக்கம் மேற்படாமலிருப்பதற்குள்ள வரனைக் கேட்டுக்கொள்'' என்று அவர் சொன்னதும் இவர் "எதை மிகவும் மேலானது என்று தாங்கள் கருதுகீறீர்களோ அதையே எனக்கு உபதேசியுங்கள்'' என்றுர். அதன் பேரில் "எல்லாவித பிராந்தியும் நிவிருத்தியாகி உத்தமமான பலனை அடைய வேண்டியதற்காக பிரஹ்மத்திலேயே நிலைத்து ஓய்வு பெறும்வரை உனக்கு ஆத்மதத்துவ விசாரமே "இருக்கட்டும்'' என்று அனுக்ரஹித்துவிட்டு மறைந்துவிட்டனர். அதன் பிறகு பூஜையை விதிப்படி முடித்துவிட்டு இவர் ஏகாந்தத்தில் உட்கார்ந்து கொண்டு விசாரணை செய்தார். "இந்த உலகம் எனக்கு வெளியிலுமிருக்கிறது. ஜடமாகவுமிருக்கிறது; அதினுல் அது நான் அல்ல, காற்றினுல் அசைக்கப்படுவதாயிருக்கிறதும், ஜடமாயும், நாசமடையக் கூடியதாயுமுள்ள இந்த தேஹமும் நான் அல்ல. ஜடமான காதுத்துவாரத்தில் க்ஷணம் தோன்றுவதாய் ஆகாசத்திலிருந்து ஏற்படுவதாய் அறிவற்றதாயுள்ள சப்தமும் நான் அல்ல. தோலினுல் மாத்திரம் அறியக்கூடியதாய் க்ஷணத்தில் நாசமடையக் கூடியதாய் ஜடமாயுள்ள ஸ்பர்சமும் நானல்ல. பார்க்கப்படுவது, பார்வை

இவ்விரண்டும் இருந்தால் மாத்திரம் அறியப்படுவதாய், க்ஷணத்தில் நசிக்கக் கூடியதாய், பார்ப்பவனிடத்தில் ஒடுங்கிவிடுவதாய் ஜடமாயுள்ள ரூபமும் நான் அல்ல. ஒரு க்ஷணம் தோன்றி மறையக்கூடியதாய் திரவியத்தின்இருப்பை அபேக்ஷிக்கிறதாய் ஜடமாயுள்ள ரஸமும் நான் அல்ல. அப்படியே க்ஷணத்தில் மறையக் கூடியதாய் மூக்கினால் மாத்திரம் அறியக்கூடியதாய் ஜடமாயுள்ள கந்தமும் நான் இல்லை.

" இந்த ஐந்து இந்திரியங்களிலுள்ள நான் என்னுடையது என்ற பிராந்தியற்றதாய் அடங்கியுள்ள சுத்த சைதன்யம்தான் நான். அறியப்படுவதற்கு எவ்வித ஸம்பந்தமுமன்னியில் வெறும் அறிவாக மாத்திரமிருந்துகொண்டு எல்லாவற்றையும் பிரகாசப் படுத்திக்கொண்டு, உள்ளும் வெளியும், வியாபித்துக் கொண்டு, அவயமற்று நிர்மலமாய் "இருக்கிறது" என்று மாத்திரம் சொல்லக் கூடியதாயுள்ள வஸ்துதான் நான், இது தான் வாஸ்தவம், எவ்வித விகல்பமும் இல்லாமல் அறிவாகப் பிரகாசிக்கிற ஆத்மாவே நான்: எங்குமுள்ளவன், சைதன்யமான என்னால்தான் இந்த குடம் முதலானதெல்லாம் ஸூர்யன் உள்பட எல்லாமே பிரகாசிக்கின்றன. என்னால்தான் பலவிதமான இந்திரியங்களின் சேஷ்டைகளும், எல்லா வஸ்துக்களிலும் உள்ளேயிருப்பதாய், அறியப்படுவதிலிருந்து விடுபட்ட அறிவை ஸ்வபாவமாகவுடையதாய், உள்ளே சைதன்ய ஸ்வரூபமாய், உள்ள எனக்கேதான் நமஸ்காரம். இருந்தும் இல்லாதது, போனாலும் போகாதது, அடங்கினாலும் வியவஹாரம் செய்வது. இது என்ன செய்தாலும் அந்த செய்கையால் தீண்டப்படுவதில்லை. இதைத்தான் தேடியடைய வேண்டும், இதைத்தான் ஸ்துதிக்க வேண்டும், இதைத்தான் தியானிக்க வேண்டும் இதினால்தான் ஜனன மரணமென்ற மோஹத்திலிருந்து விடுபட முடியும் எனக்கு போகமிருக்க வேண்டுமென்ற விருப்பமில்லை, போகம் விலக வேண்டுமென்ற விருப்பமுமில்லை. எது வருகிறதோ வரட்டும்; எது போகிறதோ போகட்டும், மனஸினால் மனஸை ஜெயித்து அஹங்காரமற்ற

நிலையேற்பட்டு விட்டதால் ஸ்வஸ்தமாக இருந்து வருகிறேன்" என்று தீர்மானித்து நிர்விகல்ப ஸமாதியிலே வெகுநாள் இருந்து விட்டார்.

இப்படியிருக்கையில் ஹரியானவர் "தைத்யராஜன் சாந்தனுயிருப்பதால் தேவர்களுக்கு சத்துருவே இல்லாததினுல் அவர்களும் சாந்தியடைந்து மோக்ஷமடைந்து விடுவார்கள். தேவர்கள் இல்லையானுல் யக்ஞம், தானம், தபஸ் முதலிய கிரியைகளுக்கு பலனில்லை என்று ஏற்பட்டுவிடும். கிரியைகள் இல்லையானுல் பூலோகமே அஸ்தமித்துவிடும். ஸம்ஸாரமே கிடையாது என்று ஏற்பட்டுவிடும் இவ்விதம் உலகம் அடங்கி விடுவது முறையில்லை" என்று ஆலோசித்துக் கொண்டு பிரஹ்லாதரிடம் வந்து தன் பாஞ்சஜன்ய சங்கத்தின் சப்தத்தினுல் அவரை எழுப்பி விட்டுச் சொல்லவாரம்பித்தார்.

"உன்னுடைய ஸ்வரூபத்தை ஞாபகப்படுத்திக்கொள். ஜீவன் முக்தனுகவே இந்த ராஜ்யத்தில் இருந்துகொண்டு எவ்வித பதட்டமும் இல்லாமல் இந்த கல்பம் முடியும் வரை இந்த சரீரத்தை நடத்திக் கொண்டிருக்கவேண்டும். எவனுக்கு நான் இளைத்திருக்கிறேன், துக்கமுள்ளவன் அறியாதவன் என்பது போலுள்ள எண்ணங்கள் தோன்றி புத்தியை கலக்குகின்றனவோ அவனுக்கு மரணம் சோபிக்கும். எவனுக்கு நான் என்ற எண்ணமேயில்லையோ, புத்தி எதினுலும் பாதிக்கப்படவில்லையோ, எவன் எல்லாரிடத்திலும் ஸமமாக பாவிக்கிறுனே அவன் விஷயத்தில் ஜீவித்திருப்பதுதான் சோபிக்கும். ஆசையாகிற பாசங்களால் கட்டப்பட்டு எவன் அங்குமிங்குமாக இருக்கப்படுகிறுனே அவனுக்கு மரணம் சோபிக்கும். ராகத்வேஷ மன்னியில் உள்ளே குளிர்ந்து எல்லாவற்றையும் ஸாக்ஷியாகப் பார்த்துக் கொண்டிருப்பவனுக்கோ ஜீவித்திருப்பதுதான் சோபிக்கும். ஆகையால் எழுந்திரு, ஸிம்ஹாஸனத்தில் வீற்றிரு. எதுவரை மேடு, பூமி, ஸூர்யன், சந்திரன் இருக்கின்றனவோ அதுவரை அரசனுக இருந்து வா" என்று சொல்லி மறைந்தார்.

**ஸ்ரீ ராமர் :** எல்லாம் அடங்கி மேலான நிலையிலிருந்த பிரஹ்லாதருக்கு பான்சஜன்ய சப்தத்தினுல் எப்படி விழிப்பு ஏற்பட்டது?

**வஸிஷ்டர் :** ஜீவன் முக்தர்களுடைய ஹ்ருதயத்தில் சுத்தமான வாஸனையிருக்கும். அது மேல் ஜன்மத்தைக் கொடுக்காது வறுத்த விதைபோலிருந்துவரும் ஆயிரக்கணக்கான வருஷங்களாலுைம் தேஹம் இருக்கும்வரை உள்ளே இருக்கும். ஏதேனும் காரணத்தினுல் மெள்ள மெள்ள வெளியிலும் வரும்.

## அத்யாயம் 15.
## உத்தாலக — உபாக்யானம்.

**வஸிஷ்டர் :** சித்தத்தை அடக்குகிறதாகிற உத்தமமான மருந்தைத்தவிர எந்தப்பிரயத்தினம் செய்தாலும் ஸம்ஸாரமாகிற பெரிய ரோகம் நிவிருத்தியாகாது. வந்ததைமாத்திரம் அனுபவித்துக் கொண்டு சென்றதையோ வரப்போவதையோ நினைக்காமலிருந்தால் சித்தம் அடங்கிவிடும். சித்தம் அடங்கியான பிறகு மிஞ்சுவதான சைதன்யம்தான் பிரத்யக் ஆத்மா என்று சொல்லப்படுகிறது. சித்தமற்ற ஸ்வபாவமுள்ளதால் அதனிடத்தில் எவ்வித ஆலோசனையென்ற அழுக்குகிடையாது அறியப்படுவதாயிருக்கிற அழுக்கை விலக்கி மனஸை நிர்மலமாகச்செய்து, ஆசையாகிற பாசங்களையெல்லாம் அறுத்தெறிந்து, அறிவில் மாத்திரம் ஈடுபட்டவனுக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் ஸம்ஸாரமாகிறபிராந்திக்கும் காரணமாயிருக்கிற மோஹம் நசிக்கும்.

ஆத்மாவல்லாததில் ஆத்மா என்ற எண்ணத்துடன் "இது, என்னுடையது" என்ற எண்ணமாகிற அஹங்காரத்தின் மாறுபாட்டினுல் சித்தம் பெருக்கிறது; வேண்டாதது வேண்டியது என்று பிரித்து ஸம்ஸாரத்தில் ஸமாதானமடைந்து வேண்டியதில் ஸ்நேஹத்தினுலும், சொத்தில் ஆசையினுலும் சித்தம் பெருக்கிறது அதற்கு இடம்கொடுக்காமல் உத்தாலகர்போல தைர்யமாக விசாரணை செய்ய வேண்டும்.

அவர் அதிகமாக அறிந்தவரில்லையானாலும் விசாரணை செய்பவர், அவர் கிரமமாக தப்ஸினாலும் சாஸ்த்திரார்த்தங்களை அறிவதினாலும் யமநியமங்களாலும விவேகமுள்ளவராக ஏற்பட்டு ஆலோசிக்கலானார். "முக்கியமாய் அடைய வேண்டியது எது? எதையடைந்தால் சோகம் விலகும்? மனனத்திற்கு எல்லாம் அதீதமாயுள்ள வெகு பரிசுத்தமான நிலையை நான் எப்பொழுது அடைந்து வெகுகாலம் நிர்விகல்ப ஸமாதியினால் விசிராந்தியை அடைவேன்?" என்று சிந்தித்து தியானத்தை அப்யாஸம் செய்தார். குரங்குமாதிரி சஞ்சலமாயுள்ள சித்தம் விஷயங்களால் அங்குமிங்கும் இழுக்கப்படுவதினால், பிரீதியைக் கொடுக்கும் ஸமாதி நிலைக்கவில்லை. ஒரு ஸமயம் உதிக்கிற ஸூர்யனைப்போல தேஜஸைப்பார்ப்பார், மற்ற ஸமயம் வெறும் வெட்ட வெளியே தெரியும். வேறு ஸமயம் ஒரே இருட்டாக இருக்கும், இவ்விதமாக தியானம் செய்வதில் நிம்மதியேற்படாமல் ஒருநாள் மலைக்காட்டுப் பிரதேசத்தில் பத்மாஸனம் போட்டுக்கொண்டு வடக்குப்பார்த்து உட்கார்ந்து கொண்டு அசையாமலிருந்து கொண்டு நிர்விகல்ப ஸமாதியை அடைவதற்காக விசாரணை செய்ய ஆரம்பித்தார்.

"ஹே முட்டாள் மனமே, உனக்கு இந்த ஸம்ஸார விஷயமான விருத்திகளினால் என்னபிரயோஜனம்? நீ பூமிக்குள்ளேயே நுழைந்தாலும் சரி, அல்லது பிரஹ்மலோகத்திற்கே போனாலும் சரி, நீ அடங்கினாலொழிய ஸுகம் கிடைக்கப்போவதில்லை. காதாகிய இந்திரியமாக மாறிக்கொண்டு சப்தத்தைத் தேடிக்கொண்டிருந்து, மானைப்போல, நாசத்தை யடையாதே. தோலாகிற இந்திரியமாகவிருந்து கொண்டு ஸ்பர்சத்தினால், பெண் யானையில் ஆசைகொண்ட ஆண்யானைபோல, அகப்பட்டுக் கொண்டு விடாதே. கண்ணிந்திரியமாகி ரூபத்தில் ஆசை, கொண்டு, விளக்குப்பூச்சி மாதிரி, எரிந்துவிடாதே. ரஸநேந்திரியமாகி துஷ்டமான ஆஹாரத்தை உள்கொள்ள நினைத்து, தூண்டிலில் அகப்படும் மீனைப்போல, நசித்துவிடாதே, கிராணேந்திரியமாகி கந்தத்தைத்தேடிக்கொண்டு, வண்டுமாதிரி,

அகப்பட்டு விடாதே மான், யானை, பூச்சி, மீன், வண்டு இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு இந்திரியங்களால் கெடுகின்றன. அனர்த்தமாயுள்ள இந்த ஐந்தும் சேர்ந்துள்ளவனுக்கு ஸுகம் எப்படியிருக்கும்?... உன்னைப்பார்த்துத்தான் நான் எதற்காகக் கட்டளையிட வேண்டும்? விசாரணை செய்து பார்ப்பவனுக்கு நீ இல்லவேயில்லையே? சிறியதான மனஸிற்குள் எல்லையற்ற ஆத்மதத்வம் எப்படியிருக்க முடியும்? பில்வக்காயில் யானையிருக்க முடியுமா? நானும் கால் கட்டைவிரல் முதல் சிரஸ்வரை துளித்துளியாகத் தேடிப்பார்த்தேன். ' "நான்" என்ற பெயருள்ளது காணப்படவில்லை, அது எதுவாக இருக்கலாம்? இது மாம்ஸம், இது ரத்தம், இது எலும்பு, இது மூச்சுக்காற்று; நான் என்பது எது? இது மூக்கு, இது நாக்கு, இது கண், இது தோல் இது காது; நான் என்பது எது? எல்லாமே நானா? அல்லது நான் என்று எதுவும் கிடையாதா? இது தான் வாஸ்தவமென்று தோன்றுகிறது. "நான், நான்" என்ற அறியாமையான துஷ்டனால் நான் வெகுநாளாக ஹிம்ஸிக்கப்பட்டு விட்டேன். என் ஸ்வரூபத்தையே மறக்கடிக்கச்செய்யும் அவனை மறுபடியும் நான் ஆசிரயிக்கப் போவதில்லை, இந்த கண் முதலிய இந்திரியங்கள் வாஸனையில்லையானாலும் தானாகவே அதஅதன் விஷயங்களில் பிரவிருத்திக்கின்றன; அவைகளின் பிரவிருத்திக்கு வாஸனை காரணமில்லை ஆகையால் இந்திரியங்களையும் உள்ளேயுள்ள வாஸனையையும் விட்டு விட்டு, ஸங்கல்பமாகிற மரங்களும் ஆசையாகிற கொடிகளும் நிரம்பியிருக்கிற மனஸ் ஆகிற காட்டை வெட்டித் தள்ளிவிட்டு, விஸ்தாரமான பூமியை அடைந்து ஸுகமாய் இருந்து வருவேன்."

என்றிவ்விதம் தீர்மானம் செய்து கொண்டு, பாதி திறந்த கண்ணுள்ளவராக பிரணவத்தை உச்சரித்துக் கொண்டு, பிராணாயாமக்கிரமமாக தேஹத்தை ஸ்திரமாகச் செய்து கொண்டு, இந்திரியங்களைக்கட்டுப்படுத்தி, வண்டு போல சஞ்சலமாயுள்ள மனஸை ஹ்ருதயகமலத்தில் பலாத்காரமாய், ஓடும் ஜலத்தை அணை செய்வதுபோல, தடுத்து நிறுத்திக்கொண்டார்.

பிராணன், அபானன் இவைகளின் வேகத்தைக் குறைத்து ஒழுங்குப் படுத்தினர். இந்திரியங்களை விஷயங்களிலிருந்து பிரித்தெடுத்தார்; அவ்விஷயங்களை வெளியிலேயே விட்டு விட்டார். அடங்கின மனசை ஹ்ருதயாகாசத்தில் நிலைக்கச் செய்தார். அவ்வப்போது ஏற்படும் தோற்றங்களை உதறி யெறிந்தார். திரும்பத்திரும்ப வரும் தோற்றங்களை, சத்ருக்களை வாளால் வெட்டுவது போல, மனஸினுலேயே வெட்டித் தள்ளினுர். இவைகள் போன பிறகும் உள்ளே ஹ்ருதயத்திற்குள் அக்ஞானமிருப்பதைக்கண்டு, அதையும் உள்ளேயுள்ள ஜியோதிஸினுல் போக்கடித்தார், அப்பொழுது தேஜஸைக் கண்டார். அதைய்ம் விலக்கும்போது, நித்ரை ஏற்பட்டது. அதையும் விலக்கினுர். சூன்யமாகத் தெரிந்தது. அதையும் விலக்கினதில், மோஹம் ஏற்பட்டது. அதையும் விலக்கிவிடும் போது, தேஜஸ் இருட்டு நித்திரை மோஹம் முதலியது எதுவுமில்லாத ஒரு அபூர்வமான நிலையை அடைந்து மனஸ் ஒரு க்ஷணம் விசிராந்தியை அடைந்தது. உடனே தன் அறிவுத் தன்மைக்குத்தாவிற்று. அதையே வெகு நேரம் அனுஸந்தானம் செய்து அனுபவித்ததினுல் மனஸே, தங்கம் கொலுசாக ஆவது போல; சைதன்ய மயமாக ஆகிவிட்டது.

பிறகு மனஸாயிருக்கும் தன்மையை விட்டு சைதன்யமாகவே ஆகி, அறியப்படுவதின் ஸம்பந்தமேயில்லாமல். சுத்தமான சைதன்யமாகி, அலைமுதலான பேதங்களை விட்டு ஸமுத்திரம் எப்படி பொதுவாக ஜலம் என்ருகிறதோ அப்படியே, பொதுவான சைதன்யமாக ஏற்பட்டது. பிறகு பார்க்கப்படுவது பார்வை இவைகளற்ற ஆனந்தத்தை அடைந்தது. பிறகு அந்த ஆனந்தமும் பொதுவாக "இருக்கிறது" என்று மாத்திரம் சொல்லக் கூடிய நிலையை அடைந்தது. அதுதான் ஜீவன் முக்தர்களுடைய நிலை. மத்தியில் ஏற்படக்கூடிய அணிமாதி ஸித்திகளையெல்லாம் தள்ளிவிட்டு, உத்தாலகர் இந்த நிலையிலேயே ஒருநாள், ஒருமாஸம், ஆறுமாஸங்கள், ஒரு வருஷம், அல்லது பலவருஷங்கள் என்று தியானத்திலேயே ஈடுபட்டவ

ராகயிருந்துவிட்டு விழித்துக்கொள்வார். இவ்விதமாக சித்தின் தத்வத்தை உறுதியாக அப்யஸித்து, பொதுவாயுள்ள சித்தாக ஆக்கி, அதை உறுதியாய் அப்யஸித்து ஸத்தா ஸாமான்யத்தை (பொதுவாய் 'இருக்கிறது" என்ற நிலையை) அடைந்தார்.

**ஸ்ரீராமர் :** ஸத்தா ஸாமான்யம் என்றால் எவ்விதம்? அது எதினால் ஏற்படும்?

**வஸிஷ்டர் :** இல்லவேயில்லையென்று பாவிப்பதினால் எப்பொழுது சித்தம் க்ஷயத்தையடைகிறதோ அப்பொழுது பொதுவாயுள்ள சித் ஸத்தா ஸாமான்யமாகிறது. உள்ளே வெளியிலுள்ள எல்லா அறியப்படுவதையும் இல்லாமல் செய்துவிட்டு எப்பொழுது சித்தம் இருக்குமோ, அப்பொழுது ஸத்தாஸாமான்யம். இந்தநிலை ஸமாதியிலிருப்பவர்களுக்குமுண்டு, ஸமாதி கலைந்து எழுந்திருப்பவருக்குமிருக்கும். ஸகலவிதமான பயத்தையும் நாசம் செய்யும். இந்த உத்தமமான பதவியை அவலம்பித்துக்கொண்டு உத்தாலகர் ஸுகமாக வேண்டிய வரை உலகத்திலிருந்து வந்தார். வெகுகாலமான பிறகு அவருக்கு இந்த தேஹத்தை விட்டு விட்டு விதேஹமுக்தராக இருக்க வேண்டுமென்ற எண்ணம் தோன்றிற்று. பிறகு பத்மாஸனமிட்டுக்கொண்டு பாதிகண்திறந்தவராய் உட்கார்ந்துகொண்டு, ஒன்பது துவாரங்களையும் அடைத்து விட்டு பிராணவாயுவையும் நிறுத்தி, தன்னுடைய சைதன்ய ஸ்வரூபத்தை பாவித்து, சித் ஸ்வரூபத்தின் அனுஸந்தானத்தினால் பொதுவான சித் என்ற நிலையை அடைந்து, அதை அப்யஸிப்பதினால் உள்ளே ஆனந்தத்தை அடைந்து, அந்த ஆனந்தத்தை அனுபவிப்பதினால் பொதுவான சித் என்ற நிலையும் மறைந்து ஸத்தாஸாமான்ய நிலையை அடைந்தார். மெதுவாக அதுவும் அடங்கி எவ்வித உபாதியுமற்ற பிரஹ்மஸ்வரூபமாகவே ஆகிவிட்டார்.

## அத்யாயம் 16.

## ஸுரகு - உபாக்யானம்

**ஸ்ரீ ராமர் :** உலகத்தில் கிரமமாக ஸமாதி நிலையேற்பட்டு பிறகு இளைப்பாறி எழுந்திருப்பவர் போல, விழித்துக்கொண்டு

உலக வியவஹாரம செய்கிறவரும் காணப்படுகிருர். ஏகாந்த மான இடத்தில் ஸமாதி நியமத்திலேயே இருந்து விடுகிறவரும் காணப்படுகிருர். இவ்விருவர்களுக்குள் எவர் சிலாக்கியம்?

**வஸிஷ்டர் :** இந்த ஸ்தவ ரஜஸ் தமஸ் என்ற குணங்களின் கூட்டமாகியதெல்லாம் ஆத்மாவல்ல என்ற நிச்சயத்துடன் உள்ளே குளிர்ந்திருப்பது ஸமாதி பார்க்கப்படுபவைகளுடன் எனக்கு எவ்வித ஸம்பந்தமும் கிடையாது என்ற நிச்சயத்தி ஞலும் உள்ளே குளிர்ந்திருக்கும். ஆகையால் ஒருவர் ஸமாதி யிலிருக்கிருர்; ஒருவர் வியவஹாரத்திலிருக்கிருர். உள்ளே குளிர்ந்திருப்பதஞல் இருவருமே ஸுகமாயிருப்பவர்கள்; ஸந் தேஹமற்ற நிலையை அடைந்தவர்களானதிஞல் இருவரும் ஸமமே. வாஸனையற்ற மனஸ் ஏதேனும் கார்யம் செய்தாலும் செய்யாததேயாகும். கதை கேட்டுக் கொண்டிருக்கிறபோதே மனஸ் வேறிடம் போய்விட்டால் அவன் கேட்காதவனே. அதே மாதிரி. எதுவும் செய்யாமலிருந்தாலும் செய்பவஞகஆவதுண்டு அசையாமல் படுத்துக்கொண்டு தூங்கிஞலும் உள்ளிருக்கும் வாஸனையால் ஸ்வப்னத்தில் பள்ளத்தில் விழுவதில்லையா? எவன் உள்ளே ஆத்மாவினிடத்திலேயே ரமித்துக்கொண்டு, கர்மேந்திரியங்களால் கர்மாக்களைச் செய்து கொண்டு. ஸந்தோஷம், சோகம் இவைகளுக்கு வசமாகாமல் இருக்கிருஞே அவனும் ஸமாதியிலிருப்பவன்தான். தன்னைப்போல் எல்லாப்பிராணி களையும், மண்கட்டியைப்போல் மற்றவர் திரவியத்தையும் எவன் பயத்திஞலல்லாமல் ஸ்வபாவமாகவே பார்க்கிருஞே அவனே தான் வாஸ்தவமாக பார்க்கிறவன்.

இது ஸம்பந்தமாய் ஸுரகு என்ற அரசனின் விருத்தாந்தத் தைக்கேள். அவன் கிராதர்களுக்கு அரசஞகவிருந்தான். மிகவும் பலிஷ்டன். பிரஜைகளை நிக்ரஹம் அனுக்ரஹம் செய்து வரும் முறையில் அவர்களுக்கு ஏற்படும் ஸுகதுக்கங்களால் இவன் மனஸ் கலங்கிற்று. ஒரு ஸமயம் அங்கு வந்திருந்த, மாண்டவ்ய முனியிடம், கிரமப்படி வந்தஞதிகள் செய்து. "என் னுடைய வேலைக்காரர்கள்தான் நிக்ரஹமோ. அனுக்ரஹமோ

செய்கிறார்கள். ஆனாலும் அவைகளால் எனக்குக் கவலையேற் படுகிறது எப்பொழுது எனக்கு அக்கவலையற்ற நிலையேற் படும்?'' என்று கேட்டான். அதற்கு அவர் "தன்னைப்பற்றி விசாரணை செய்வதினால்தான் மனஸிலுள்ள அழுக்கு விலகும். நான் யார், இது என்ன, எப்படி? பிறப்பு, இறப்பு, ஏன்? என்று நன்கு விசாரித்து தன்ஸ்வரூபத்தை அறிந்து விட்டால், மனஸ் தன் ஸ்வபாவத்தை விட்டு விட்டு அடங்கி கவலையற்று இருக்கும் எதுவரை எல்லாவற்றையும் விடவில்லையோ, அதுவரை தன் ஆத்மஸ்வரூபமும் பிடிபடாது. ஆகையால் ஆத்மாவை ஸாக்ஷாத்கரிக்க வேண்டுமானால், எல்லாவற்றையும் விட்டு விட வேண்டும்'' என்று சொல்லி விட்டுப் போய்விட்டார்.

பிறகு அரசன் கைகால் முதலியதுள்ள ஜடமான தேஹம் நான் அல்ல. நான் கர்மேந்திரியங்கள் அல்ல; அவைகளும் என்னைச் சேர்ந்தவை அல்ல. அவை போலவே ஜடமாயிருக்கிற ஞானேந்திரியங்களும் நான் அல்ல. இப்படி தேஹம் முதலானது நான் இல்லாததினால் மிச்சம் என்ன இருக்கிறதென்று பார்ப்போம். மிச்சம் இருப்பது எவ்வித விகல்பமுமற்ற சுத்தமான சைதன்யம்தான் ஆகையால் அதுவேதான் நான், முத்து மாலையில் ஊடுருவிச்செல்லும் நூல்போல, எல்லாவற்றிலும் இருப்பதாயும், பிறப்பு, இறப்பு அற்றதாயும் ஸூக்ஷ்மமாயும் இருந்து வருவதே ஆத்மா'' என்று ஆலோசித்து முடிவிற்கு வந்து உத்தமமான நிலையை அடைந்தான். அவனுக்கு பாரசீக தேசத்து அரசன் பரிகன் என்பவன் மிகவும் பிரியமான ஸ்நேஹிதனாகவிருந்தான். அவன் ஒரு சமயத்தில் அவன் தேசத்தில் க்ஷாமம் ஏற்பட்டபோது ராஜ்யத்தை விட்டு விட்டு காட்டுக்குப் போய் உலர்ந்த இலைச்சரகுகளை சாப்பிட்டுக்கொண்டிருந்தபடியால் அவனுக்கு "பர்ணாதன்'' என்ற பெயரும் ஏற்பட்டிருந்தது. அவன் ஆயிரவருஷம் கடும்தபஸ்செய்து மனஸ் தெளிவடைந்து ஞானமடைந்தான். அவனுடைய அரண்மனைக்கு ஒருஸமயம் ஸூரகு போனபோது வெகுநாள் ஸ்நேஹிதர்களானதால் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டிருந்தார்கள்.

**பரிகன் :** "உம்மால் முன் ஞானம் எப்படி ஸம்பாதிக்கப் பட்டதோ, அப்படியே நானும் ஞானத்தை அடைத்திருக்கிறேன் நல்ல தெளிவான மனஸுடன் எவை நல்ல கார்யங்களென்று தெரிந்து அவைகளையே செய்து வருகிறீரா? பார்ப்பதற்கு மாத்திரம் அழகாய்த் தோன்றுகிற போகங்களில் ஈடுபடாமலிருக்கிறீரா? மனஸுக்கு சாந்தியைக் கொடுக்கும் ஸமாதியை அனுஷ்டித்து வருகிறீரா?" என்று கேட்டான். அதற்கு ஸுரகு "ஸந்தேகமில்லை, நீர் அறிந்தவரே, மேலான நிலையை அடைந்திருக்கிறீர். உம்முடைய அந்தக் கரணம் நன்கு குளிர்ந்திருக்கிறது. அஹங்காரத்தினுல் ஏற்படும் எவ்விதகலக்கமும் விலகிவிட்டது" என்ருன். இவ்விதமாக இருவரும் விசாரணை செய்து கொண்டு ஒருவருக்கொருவர் ஸந்தோஷத்தையும் கௌரவபுத்தியையும் அடைந்து பிறகு அவரவர் கார்யங்களைக் கவனித்தார்கள்.

இவ்விதம் எவன் எப்பொழுதும் ஆத்மாவைப்பற்றி விசாரித்துக்கொண்டு, உள்நோக்கி சைதன்ய ஸ்வரூபத்தையே அனுஸந்தானம் செய்கிருனே, அவனே ஸுகமுள்ளவன், சோகத்தினுல் பீடிக்கப்படாதவன் எந்த தேசத்திலோ, மலைப் பிரதேசத்திலோ குளிர்ந்த நிழலையும் நல்ல பலனையும் கொடுக்கும் ஆத்மஞானியான நல்லோராகிய விருக்ஷம் இல்லையோ, அங்கே புத்தியுள்ளவன் வஸிக்கக் கூடாது. ஸம்ஸாரமாகிற கடலில் அமிழ்ந்து கிடக்கிற தன்னை தூக்கி விடுவதற்கு பணமோ, ஸ்நேஹிதர்களோ, சாஸ்திரங்களோ, பந்துக்களோ, உதவ மாட்டார்கள். தன் கூடவே எப்பொழுது மிருந்து வருகிற ஸ்நேஹிதனுன மனஸுடன் சேர்ந்து நன்ருக அலசிப் பார்த்தால் ஆத்மா வெளியில் எடுக்கப்பட்டதாக ஆகும். அந்த மனஸில் நான் என்ற எண்ணம் லயமாகி விட்டால், எல்லா வஸ்துக்களிலும் உள்ளிருக்கிற பேரானந்தமாகிற பரமாத்வாவின் ஸ்வபாவம் வெளிப்படும். அது யோகத்தினுல்தான் தானே ஸித்திக்கும். அதுவே மேலானநிலை. அதற்கு உபமானம் கிடையாது அது வாக்குக்கு எட்டாது ஆனுல் இங்கேயே ஹ்ருதயத்தில் அனுபவிக்கப்படும்.

## அத்தியாயம் 17.

## பற்றற்ற நிலை.

**வஸிஷ்டர் :** மனஸினாலேயே மனஸை நாசம் செய்து ஆத்மா ஸாக்ஷாத்கரிக்கப்படவில்லையானால் உலகத்திலுள்ள துக்கம் விலகாது. முன் ஸஹ்ய கிரியில் இரண்டு தபஸ்வீகள் இருந்தார்கள். அவர்களுக்கு முறையே பாஸன், விலாஸன் என்று புத்திரர்கள் ஜனித்தார்கள். இவ்விருவரும் ஒரேமாதிரி மனப்போக்குள்ளவர்கள். பெற்றோர்கள் காலமான பிறகு இவர்கள் தனியாக தபஸ் செய்து விட்டு பிற்பாடு ஒரு ஸமயம் சந்திக்க நேரிட்டபோது விலாஸன், "இவ்வளவு காலம் எங்கே இருந்தாய்? உன் தபஸ் ஸபலமாக ஏற்பட்டதா? உன் புத்தி கவலையற்று இருக்கிறதா? க்ஷேமமாய் இருக்கிறாயா?" என்று கேட்டதற்கு பாஸன், "ஸம்ஸாரத்தில் இருந்து வருகிற நமக்கு க்ஷேமம் ஏது? எது வரை அறியவேண்டியது அறியப்படவில்லையோ, எதுவரை சித்தம் அடங்கவில்லையோ, எதுவரை ஸம்ஸாரக்கடல் தாண்டியாகவில்லையோ அதுவரை க்ஷேமம் ஏது" என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்கள். பிறகு வெகுகாலம் சென்று இருவருமே ஞானம் பெற்று மோக்ஷமடைந்தார்கள் ஆகையால் கட்டுப்பட்டுள்ள மனஸுக்கு ஸம்ஸாரத்தைத்தாண்ட ஞானத்தைத்தவிர வேறுவழி கிடையாது. பற்றில்லாமல் நிர்மலமாயிருக்கும் சித்தம் ஸம்ஸாரத்திலிருந்தாலும் விடுபட்டதேயாகும் நீண்ட தபஸுடன் இருந்தாலும் பற்றுள்ளது நன்கு கட்டுப்பட்டதேதான்.

**ஸ்ரீ ராமர் :** அந்த பற்றுதல் என்பது எவ்விதமுள்ளது? எப்படியிருந்தால் விடுபடமுடியும்? இதற்கு வைத்திய முறை எப்படி?

**வஸிஷ்டர் :** தேஹத்தையும் ஆத்மாவையும் தனித்தனிப் பிரித்து ஒன்றை விட்டு விட்டு தேஹத்தில் மாத்திரம் விசுவாஸம் வைக்கும் பற்றுதல் பந்தத்திற்கு ஏற்றது. "இது எல்லாமே

ஆத்மாதான், எது வேண்டியது, எது வேண்டாதது'' என்றநிலை பற்றற்றிருத்தல். அதுவே ஜீவன் முக்தநிலை கர்மாவை செய்யாமலிருப்பதிலும் பற்று இராது; கர்மாசெய்வதிலும் பற்று இராது. எல்லாவற்றிலும் ஸமமான பாவனையுடன் பலனைத் தியாகம் செய்தவன் பற்றில்லாதவன் என்று சொல்லப்படுகிறான். பலவிதமாக ஏற்படும் எல்லா செயல்களும் இந்த பற்றற்ற தன்மையால் வைத்தியம் செய்யப்பட்டு சிரேயஸ்ஸையே ஸம்பாதித்துக் கொள்கின்றன. எல்லையற்ற பிராணிகள், ஸமுத்ரத்தில் அலைகள் போல, உண்டாகி, உண்டாகி, லயிக்கிறார்களே எல்லாம் இந்த பற்றுதலினால்தான்.

பற்றுதல் என்பது இரண்டு விதமுண்டு, வீணாயுள்ளது, மெச்சத்தகுந்தது என்று ஆத்மாவின் தத்வத்தை அறியாமல் தேஹம் முதலானவைகளிலேயே ஈடுபட்டுக்கொண்டு ஸம்ஸாரத்தைக் கொடுக்கும்; திடமான பற்றுதல் மூடர்கள் எல்லாரிடத்திலும் இருக்கும்; அதுதான் வீணானது. ஆத்மாவின் தத்வத்தையறிந்து விவேகத்தினால் ஏற்பட்டு மறுபடியும் ஸம்ஸாரமன்னியில் செய்யும் பற்றுதல் மெச்சத்தகுந்தது; இதுதான் உலகத்தை பரிபாலித்து வரும் பிரஹ்மா முதலானவர்களில் காணப்படுகிறது. எப்பொழுதும் எங்கேயிருந்தாலும் எந்தக் கார்யம் செய்தாலும் மனஸை அந்தக் கார்யங்களிலோ, வஸ்துக்களிலோ கவலைகளிலோ பற்றாமலிருக்கச் செய்து கொள்ள வேண்டும். அறியப்படுவதை கொஞ்சம் அவலம்பித்தாலும்கூட சைதன்யத்திலேயே மனஸை ஈடுபடச்செய்து வேறு எவ்வித பற்றுமற்று அதிலேயே நிலைத்திருந்தால் ஜீவன் ஜீவனில்லாத தன்மையை அடைந்து விடுவான். வியவஹாரம் செய்து கொண்டிருக்கட்டும், அல்லது செய்யாமலேயிருக்கட்டும். அறியப்படுவதென்ற அம்சத்தை விட்டு விட்டு அறிவாகமாத்திரமிருந்து தன்னிடத்திலேயே அடங்கி ஜ்வலிக்கிற ரத்னம் போலிருப்பான். இதை அப்யாசம் செய்யச் செய்ய "தூங்கும் நிலை" என்பது ஏற்படும். இதுவே உறுதிப்பட்டால் "நான்காவது நிலை" என்பார்கள்.

இந்த துரீய (நான்காவது) நிலையில் ஸ்திரமாயிருந்து ஆனந்தத்தையே அனுபவித்துக்கொண்டிருந்து விட்டு அதற்கு மேலான ஆனந்தமும் தோன்றாத நிலையை அடைவான் அதையும்தாண்டி ஆனந்தம் ஆனந்தமின்மை இரண்டுக்கும் மேலான துர்யாதீத (நான்காவதையும் கடந்த) நிலையை அடைந்தவன் முக்தன் எனப்படுவான், மோக்ஷம் என்பது ஆகாசத்திற்கப்பாலுள்ளதில்லை; பாதாளத்திலுமில்லை; எல்லா ஆசைகளும் நசித்து சித்தம் ஒடுங்குவதே மோக்ஷம். "எனக்கு மோக்ஷம் வேண்டும்" என்று சிந்தை ஏற்பட்டாலே மனஸ் வெளிக்கிளம்பினதாகும். மனஸ் நினைக்கவாரம்பித்தால் ஸம்ஸார பந்தம் நிச்சயம். எல்லாவற்றிற்கும் மேலாய் எல்லாமாய், வியாபகமாய், இருக்கும் ஆத்மாவில் பந்தம் ஏது? மோக்ஷம் ஏது? ஆகையால் நினைப்பதை நிறுத்திவிட வேண்டும்.

சரீரத்திற்கு வேறாக சைதன்யத்தை விவேகத்தினால் அறிபவனுக்கு ஏதேனும் அங்கம் வெட்டுப்பட்டாலும் அவனுக்கு எதுவும் வெட்டுப்படவில்லை. வெல்லம் தித்திப்பு என்று அனுபவித்தவனுக்கு கைகால்களில் காயம்பட்டாலும் அந்த அனுபவத்தை வேறுவிதமாகச் செய்து விடாது. அப்படியே ஆத்மானந்தத்தையனுபவித்தவனுக்கு சரீரத்திற்கு ஏற்படும் எதுவும் பாதகமாகாது. வேறு புருஷனுடன் ஸங்கம் செய்த ஒரு ஸ்திரீ தன் வீட்டுக்கார்யங்களில் முனைந்திருந்தபோதிலும் அந்த ஸங்கத்தினால் ஏற்பட்ட ஸுகத்தையே தனக்குள் ரஸித்துக்கொண்டிருப்பாள். அவ்விதமே சுத்தமான ஆத்ம தத்வத்தில் நிலைத்துள்ளவன், வெளியில் வியவஹாரம் செய்து கொண்டிருந்தபோதிலும், அதையே ரஸித்துக்கொண்டிருப்பான், வரப்போவதை எதிர்பார்க்கமாட்டான். வந்திருப்பதிலும் பிடிமானமிராது., சென்றதை நினைக்கமாட்டான். ஆனால் எல்லாக் கார்யங்களையும் செய்வான். பக்தியுள்ளவர்களின் மத்தியில் பக்தனாயிருப்பான். துஷ்டர்களின் மத்தியில் துஷ்டனாகத் தோன்றுவான். பாலர் மத்தியில் பாலகனாகவும்' விருத்தர்மத்தியில் விருத்தனாகவும் யுவாக்களின் மத்தியில் யுவாவாகவும்,

தீரர்கள் மத்தியில் தீரனுகவும். துக்கப்படுபவர் மத்தியில் துக்கப் படுபவனுகவும் இருப்பான். ஸூர்யன் குளிர்ந்த கிரணத்துடனிருந்தாலும், சந்திரகிரணம் எரித்தாலும் அக்னியின் ஜ்வாலே கீழ்நோக்கி எரிந்தாலும், ஜீவன்முக்தன் ஆச்சர்யப்படமாட்டான சைதன்யத்தின் சக்திகள் இவ்விதம் வெளிக்கிளம்புகின்றன வென்ற தீர்மானத்தினுல் அவனுக்கு ஆச்சர்யமேற்படுவதில்லே. ஜலம் அசைவதினுல் ஏற்படும் சுழல் எப்படி ஜலத்தைவிட வேறுபோல தோன்றுகிறதோ அப்படியே தான் சித்தம் அசைவதால் ஜகத் ஏற்படுகிறது.

**ஸ்ரீராமர்** : சித்தம் எதினுல் அசைகிறது? எதினுல் சித்தம் அசையாது? இவ்விதம் அசைவதை நிறுத்துவது எப்படி?

**வஸிஷ்டர்**: சித்தத்தை நாசம் செய்ய இரண்டு முறைகள் இருக்கின்றன. அதனுடைய விருத்திகளே தடுப்பதுவாகிய யோகம். தத்வத்தை நன்கு அறிவதாகிய ஞானம்,என்று. சித்தம் அசைவது பிராணனுக்கு ஆதீனமாயிருப்பதால், பிராணனே அடக்கிவிடும் விஷயத்தில் சித்தமும் அடங்கிவிடும், சித்தம் அடங்கி விட்டால், ஸம்ஸாரம் போய்விடும், ஸூர்ய வெளிச்சம் குறைந்தபோது உலக வியவஹாரம் குறைவது போல்.

**ஸ்ரீராமர்**: பிராணனுடைய சலனத்தை அடக்குவது எப்படி?

**வஸிஷ்டர்**: சாஸ்திரங்களே கற்றறிதல், நல்லோர் ஸஹவாஸம், வைராக்கியம், அப்யாஸம் ஒரேதத்வத்தில் ஈடுபடுவது, இவைகளால் பிராணன் கட்டுப்படும். வாஸனேகளே விட்டு விடுவதாலும், கல்பனே செய்யாமலிருப்பதாலும், பூரகம் முதலிய பிராணுயாமத்தினுலும், பிரணவத்தை உச்சரிப்பதினுலும். அல்லது, குரு உபதேசிக்கும் வேறு உபாயத்தினுலும், பிராணன் கட்டுப்படும். அப்யாஸத்தினுல் பிராணனினுடைய சலனம் க்ஷயித்துவிட்டால்,மனஸ்நன்கு அடங்கிவிடும்,ஆனந்தம்மிஞ்சும்

**ஸ்ரீராமர்**: மனஸ் அடங்குவதைப்பற்றிச் சொன்னீர்கள் ஞானம் என்பது எப்படி?

**வஸிஷ்டர்** வஸ்து எவ்விதமிருக்கிறதோ அப்படியே அறிவது ஞானம் எனப்படும் இந்த குடம் வஸ்திரம் முதலான உருவங்கள் தோன்றுகின்றனவே அவை யெல்லாம் ஆத்மாவே, அதைத்தவிர வேறு எதுவும் கிடையாது என்ற நிச்சயம்தான் சரியான அறிவு, அறியப்படுவது வேறில்லை, பிரஹ்மம் ஒன்றுதான் அறியப்படுவதாகவும் மனஸாகவும் தோன்றுகிறது. எல்லாம் ஒரே பிரஹ்மம். அப்படியிருப்பதால் பந்தம் ஏது, மோக்ஷம் ஏது? கட்டை, கல், வஸ்திரம் எல்லாவற்றையும் நன்கு கவனித்துப்பார்த்தால், வாஸ்தவத்தில் எவ்வித பேதமும் கிடையாது. கற்பனையினால்தான் பேதம் ஏற்படுகிறது வெளிவஸ்துக்களிலேயோ தன்னிடத்திலேயோ முதலிலிருந்து கடைசிவரையில் எவ்வித மாறுதலுமன்னியில் நன்கு அடங்கியுள்ள ஸ்வரூபம் எதுவோ, அதிலேயே ஈடுபடவேண்டும். இதுவே ஞானம்.

## அத்யாயம் 18

## வீதஹவ்ய - உபாக்யானம்

**வஸிஷ்டர்:** இதையொட்டி வீதஹவ்யருடைய கதையை சொல்கிறேன், கேள். அவர் கர்ம காண்டத்திலேயே ஈடுபட்டவராயிருந்தவர், நிர்விகல்ப ஸமாதியை அடைவதற்காக, எல்லாக் கர்மாக்களையும் விட்டு விட்டு, சுத்தமான ஆஸனத்தில் உட்கார்ந்துகொண்டு, மனஸை கொஞ்சம் கொஞ்சமாக அடக்க ஆரம்பித்தார். வெளியிலும் உள்ளேயுமுள்ள விஷயங்களை விட்டு தன் மனஸை அசையாமல் செய்ய நினைத்து ஆலோசித்தார் "என்ன ஆச்சர்யம்? இந்த மனஸ் எவ்வளவு இழுக்கப்பட்டாலும் ஒரு க்ஷணத்தில் குடத்திலிருந்து வஸ்திரத்திற்குத் தாவுகிறது, மரங்களில் குரங்கு தாவுவதுபோல, வஸ்திரத்திலிருந்து வண்டிக்குத்தாவுகிறது இப்படியே ஒவ்வொரு விஷயமாகதாவிக் கொண்டேயிருக்கிறது, ஹே மனமே, நானே சேதனமென்று வீணாய் நினைத்துக்கொண்டிருக்கிறாய். சைதன்யமும் மனஸும் வெவ்வேறாயிருக்கிறபோது அவையிரண்டிற்கும் ஐக்யமிருக்க முடியாது. அஹங்காரத்தைக்கொண்டு நான் ஜீவன் என்று

நினைப்பதையும் விட்டுவிடு. எதுவரை விசாரணை செய்யவில்லையோ அதுவரைதான் உனக்கு ரூபம். வெளிச்சம் வந்தால் இருட்டுபோய் விடுவது போல, விசாரித்தால் நீ அடங்கி விடுவாய். இனி நான்காவதான ஆத்ம நிலையிலேயே நான் இருக்கப் போகிறேன். ஹே இந்திரியங்களே நீங்களும் வீணாக கவலைப் படாதீர்கள்" என்று சித்தத்தை ஒரு நிலைப்படுத்தி, இந்திரியங்களை சலிக்காமல் செய்து, இருந்து விட்டபடியால் கிரமமாக பிராணனுடைய சேஷ்டை உள்ளேயே அடங்கி விட்டது.

இவ்விதமே அவர் முன்னூறு வருஷ காலமிருந்து வருகையில் அவருடைய சரீரம் மண்மூடி பூமிக்குள் அமிழ்ந்து விட்டது. பிறகு அவர் விழித்துக் கொண்டு பூமியில் அமிழ்ந்திருந்த சரீரத்தைப்பார்த்தார் அறிவு மாத்திரம் இருந்தது. ஆனால் எல்லா துவாரங்களும் அடைபட்டு விட்டபடியால் பிராணனுக்கு ஒட்டமில்லை. அப்படியே அவர் கைலாஸகிரியில் நூறு வருஷம் முனியாகவும், பிறகு வித்யாதரன், இந்திரன், பரமசிவனுடைய பரிவாரத்தைச் சேர்ந்தவன் என்று தன்னிஷ்டப்படி தோன்றினதையெல்லாம் அனுபவித்து விட்டு, பின்னால் இந்த சரீரத்தையே மண்ணிலிருந்து எடுத்து விட நினைத்தார். தானே வெறும் மனஸாக மாத்திரமிருந்தவர் ஸூர்யனிடத்தில் பிரவேசித்து அவருடைய அனுமதியின் பேரில் ஜ்யோதிஸ் ரூபத்தைத்தரித்துக் கொண்டு தன் இருப்பிடம் சென்று பூமியிலிருந்து சரீரத்தை வெளியில் எடுத்து அதற்குள் நுழைந்து கொண்டார். பிறகு எழுந்திருந்து ஸ்நானம் செய்து ஜபாதிகளை முடித்துக்கொண்டு ஸூர்யனை பூஜித்துவிட்டு முன்னிருந்த சரீரத்திலேயே அறிவுடன் விளங்கிக்கொண்டிருந்தார்.

இப்படியிருக்கையில் மனஸிற்கு சாந்தி ஏற்படாததினால் ஒரு ஸமயம் மறுபடியும் "சிந்தனையால் எவ்வித பிரயோஜனமும் இல்லை. கல்பனை இருக்கிறது, இல்லை. யென்ற வியவஹாரத்தையே ஒழித்து விட்டு சுத்தனாக ஆகி மலைபோல் நின்று விடுகிறேன்" என்று தீர்மானித்து அப்படியே ஆறு தினங்கள் இருந்தார். பிறகு, வழிப்போக்கன் தூங்கி யெழுந்திருப்பது போல,

விழித்துக்கொண்டு, ஆத்மஞானமடைந்து வெகுநாள் ஜீவன் முக்த தசையிலிருந்தார். பிறகு கிரமமாக விதேஹமுக்தியையே அடைந்துவிட நினைத்து பத்மாஸனமிட்டுக்கொண்டு தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டார்.

"ஹே ஆசையே, ஆசையற்ற தன்மையை அடை. ஹே துவேஷமே, துவேஷமற்ற தன்மையை அடை. உங்களிருவருடனும் நான் வெகுநாளாக விளையாடிக் கொண்டிருக்கிறேன். அது போதும். ஹே, போகங்களே, எவ்வளவோ நூறு கோடி ஜன்மாக்களில் உங்களால் நான் குழந்தைபோல லாலிக்கப்பட்டு வந்திருக்கிறேன், உங்களுக்கு நமஸ்காரம், இவ்வளவு உத்தமமான ஆனந்த பதவியை இதுவரை என்னை மறக்கும்படிச் செய்தாயே, ஹே ஸுகமே, உனக்கு நமஸ்காரம், ஹே துக்கமே, நீ அதிகமாக வாட்ட ஆரம்பித்ததினால்தானே நான் மிகவும் ஆதரவுடன் ஆத்மாவைத் தேடவாரம்பித்தேன்; இவ்விதம், எனக்கு வழிகாட்டின உனக்கு நமஸ்காரம். ஹே, தேஹமே, நீ எனக்கு வெகு நாளாயிருந்து வந்த பற்று; இப்பொழுது நான் உன்னை விட்டு விட வேண்டியிருக்கிறது; எனக்கு ஆத்ம ஞானத்தை ஏற்படுத்திக் கொடுத்து உன் நாசத்தை நீயே தேடிக் கொண்டாய். ஹே, ஆசையே நான் அடங்கியான பிறகு நீ தனித்து வற்றிப்போக வேண்டியிருக்கிறதேயென்று துக்கப்படாதே; உனக்கும் நமஸ்காரம்; ஹே, காமமே, எவ்வளவோ விபரீதமான செய்கைகளால் பலவிததோஷங்கள் ஏற்பட்டிருக்கும்; அவைகளை மன்னித்துவிடு. நான் இனி அடங்கப் போகிறேன்; எனக்கு மங்களத்தையே கொடு. ஹே, புண்யமே, உனக்கும் நமஸ்காரம், என்னை நரகத்திலிருந்து ரக்ஷித்துக் கொடுத்து ஸ்வர்க்கத்தையடையும்படி செய்தாயே! வெகுநாளாக என்னுடனேயே பிறந்து தோழர்களாகயிருந்து விட்ட பிராணன்களே, உங்களை கிரமமாக கிளப்பியனுப்பி விட்டு, நான் போகிறேன். உங்களுக்கு நமஸ்காரம்."

இவ்விதமாகவே உள்ளேயே பாவனை செய்து கொண்டு பிரணவத்தை உச்சரித்துக் கொண்டு இந்திரியங்களையும்,

ஸூக்ஷ்ம பூதங்களையும் விட்டார், பிறகு அக்ஞானமாகிற இருட்டையும் விட்டார், அடுத்த க்ஷணம் தோன்றின ஜ்யோதிஸ் ஸ்வரூபத்தையும் விட்டார். பிறகு இருட்டுமில்லாமல் பிரகாசமுமில்லாமல் இருக்கும் நிலையை அடைந்தார். அதையடைந்தவுடன் மனஸ் விலகி விட்டது. பிறகு நிர்மலமாயுள்ள சிற்றறிவு தோன்றிற்று. அதையும் அரை நிமிஷத்தில் உதறி விட்டு ஸத்தாமாத்திரமாயுள்ள "பச்யந்தீ" நிலையை அடைந்தார். பிறகு தூங்கும் நிலையை அடைந்து மலைபோல் அசைவற்றிருந்தார். அந்தநிலை உறுதிப்பட்டதும் துரீய நிலையை அடைந்தார். அங்கே ஆனந்தமில்லையானாலும் ஆனந்தமுண்டு; இருப்பு இல்லையானாலும் இருப்பு உண்டு; அறிவு இல்லையானாலும் அறிவு உண்டு அந்த நிலைதான் "இதுவல்ல, இதுவல்ல" என்று வேதத்தில் சொல்லப்படுகிறது. பிறகு வாக்குக்கு எட்டாதது எதுவோ அதுவாக ஆகிவிட்டார் அதைத்தான் ஸாங்கியர்கள் புருஷன் என்றும், வேதாந்திகள் பிரஹ்மமென்றும், சைவர்கள் சிவன் என்றும், எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்கிறவர்கள் எல்லாம் என்றும், சொல்கிறார்கள். அதுவே எல்லா சாஸ்திரங்களுடையவும், ஸித்தாந்தம்; அதுவே எல்லாருடைய ஹ்ருதயங்களிலும் கூடவே இருந்து வருகிறது, தேகங்களுக்கெல்லாம் பிரகாசம் கொடுத்துக்கொண்டு அசைவற்றிருப்பது அதுவே. தன் அனுபவத்தினால் மாத்திரமே அறியத்தக்கது. எங்கும் உள்ளது, எல்லாமும் அதுவே, ஒன்றுயிருப்பதும் அதுதான், பலவாயிருப்பதும் அதுதான்; ஜனன மரணமற்ற நிலை இவ்விதமாகவே முப்பதினாயிரம் வருஷகாலம் விளங்கிக் கொண்டிருந்து விட்டு மறுபடியும் ஜன்மமில்லாதவராக வீதஹவ்யர் அடங்கி விட்டார்

**ஸ்ரீ ராமர் :** ஆத்ம ஞானிகளாயுள்ள ஜீவன் முக்தர்களிடத்தில் ஆகாசத்தில் ஸஞ்சரிப்பது முதலான சக்திகள் காணப்படுவதில்லையே? ஏன்?, அப்படி?

**வஸிஷ்டர் :** ஆத்மாவை அறியாமல் ஜீவன் முக்தனில்லாமல் இருப்பவனும் திரவியம் மந்திரம், கர்மா, காலம் இவை

களின் சக்தியினுல் ஆகாசத்தில் ஸஞ்சரிப்பது முதலியதை அடைந்து விடலாம். இது ஆத்மஞானிக்கு ஏற்பட்டதல்ல; அவன் சுத்தமான ஆத்மாவையே அறிந்தவன். எவனுக்கு அவை போலுள்ள ஸித்திகளில் ஆசையிருக்கிறதோ அவன் ஸம்பாதித்துக் கொள்வான். ஆத்மஞானியோ பரிபூர்ணமா யிருப்பதால் அவனிடத்தில் அவ்வித ஆசை ஸம்பவிக்காது அந்த சக்திகள் பரமாத்மநிலையை அடைவதற்கு எவ்விதத்திலும் உதவாது,

**ஸ்ரீ ராமர் :** யோகிகள் வெகுகாலம் ஜீவித்திருக்கிருர்களே அது எப்படி?

**வஸிஷ்டர் :** உள்ளேயும், வெளியிலும் சித்தத்தினுலோ, பிராணனினுலோ ஏற்படும் சலனம் எவனுக்கு இல்லையோ அவன் விஷயத்தில் மாறுதலோ, க்ஷயமோ கிடையாது. சித்தம், பிராணன் இவ்விரண்டின் சலனம் அடங்கி விடுவதால் சரீரத்தி லுள்ள தாதுக்கள் அங்கிருப்பதை விட்டு விடாது. எவர்கள் தத்வமறிந்து ராகமற்று, அக்ஞானம் விலகி மஹான்களாக இருக்கிருர்களோ அவர்கள் ஸ்வதந்திரர்களாகவே சரீரத்தில் இருந்து வருவார்கள்.

**ஸ்ரீ ராமர் ;** விவேகம் ஏற்பட்டு சித்தம் அடங்கியான பிறகு மைத்ரீ முதலான குணங்கள் யோகிகளுக்கு எங்கே ஏற்படும்.

**வஸிஷ்டர் :** சித்தம் நசிப்பது இரண்டு விதம், ரூபமுள் ளது, ரூபமில்லாதது என்று. ஜீவன் முக்தியில் ரூபமுள்ளது. விதேஹமுக்தியில் ரூபமில்லாதது. சித்தத்தின் இருப்பு துக்கத் தைக் கொடுக்கும், சித்தநாசம் ஸுகத்தைக் கொடுக்கும். சித்தத்தின் இருப்பைப் போக்கி சித்த நாசத்தை ஏற்படுத்த வேண்டும். ஸுகம் துக்கம் முதலியதிற்கு ஆசிரமாய் "நான் இருக்கிறேன்" என்று நினைக்கும் மனஸ் "இருப்புள்ளது" எனப் படும்; அதுவே ஸம்ஸாரமாகிற விருக்ஷம் வளருவதற்குக் கார

ணம், ஸுகம் துக்கம், ஆபத்து மதம், ஜாட்யம், ஸந்தோஷம் இவை எவனிடத்தில் மாறுதலை உண்டாக்க வில்லையோ அவனுடைய மனஸ் நசித்தது என்பார்கள். ஜீவன் முக்தனுடைய மனஸ் மைத்ரீ முதலான குணங்களுடன் கூடி உத்தமமான வாஸனைகளுடன் இருக்கும்; இவை மறுஜன்மாவைக் கொடுக்காது; இது ரூபமுள்ள மனோ நாசம். எல்லா குணங்களுக்கும் ஆசிரமமாயுள்ள மனஸே நன்கு லயமடைந்து விதேஹமுக்தியிலிருப்பது ரூபமற்ற மனோ நாசம். ரூபமற்ற மனோ நாசத்தில் எதுவும் கிடையாது. குணங்களும் கிடையாது அகுணங்களும் கிடையாது ஸந்தோஷம் கோபம் முதலியது எதுவும் அங்கு கிடையாது.

## அத்யாயம் 19

## ஸம்ஸார பீஜம்

**ஸ்ரீ ராமர் :** வெகு விஸ்தார மடைந்திருக்கிற இந்த ஸம்ஸாரமாகிற திராக்ஷைக்கொடிக்கு பீஜம் எது? அதற்கு பீஜம் எது? அதற்கும் பீஜம் எது?

**வஸிஷ்டர் :** ஸம்ஸாரமாகிற கொடிக்கு பீஜம் சரீரம்தான் அதற்கு பீஜம் ஆசைக்குள்பட்ட சித்தம். அந்த சித்தத்திற்கு இரண்டு பீஜங்கள்; ஒன்று பிராணனின் சலனம், இரண்டாவது திருடமான வாஸனை எப்பொழுது பிராணன் சலித்து நாடிகளில் ஸம்பந்தப்படுகிறதோ அப்பொழுது உடனே அறிதல் என்ற குணமுள்ள சித்தம் உண்டாகிறது. எங்கேயும் வியாபித்துக்கொண்டிருந்த அறிவு பிராணனின் சலனத்தினால் கிளப்பப்பட்டு அறியப்படும் பதார்த்தத்தை நோக்கிச் செல்கிறது. அதினால்தான் சித்தத்திற்கு துக்கங்கள் ஏற்படுகின்றன. ஆகையால் யோகிகள் சித்தம் அடங்குவதற்காக பிராணனை அடக்குகிறார்கள்.

வாஸனையால் சித்தம் ஏற்படுவதையும்கேள். முன் பின் எதையும் ஆலோசிக்காமல் நன்கு பாவனை செய்வதால் ஒரு

பதார்த்தத்தை எடுத்துக்கொள்ளச் செய்வது எதுவோ அதுவே வாஸனை எனப்படும்: மனஸினுல் எந்த பதார்த்தத்தை தீவிரமாக பாவிக்கிருனே, அதுவாகவே ஆகிவிடுகிருன்; அதுவே வாஸ்தவமாயிருக்கும் வஸ்து என்று மோஹத்தையடைகிருன். வாஸனையின் வேகத்தினுல் அது தன் ஸ்வரூபத்தை விட்டு விடுகிறது. இவ்விதமாக வாஸ்தவமல்லாததில் வாஸ்தவமென்ற பாவனையே சித்தம். அவ்விதம் ஒரு பதார்த்தத்தில் ஈடுபடும் சித்தம் ஜனன மரணம் இவைகளுக்குக் காரணமாகிறது எடுத்துக்கொள்ள வேண்டியது, தள்ளவேண்டியது என்ற இரண்டு பாவனைகளும் இல்லாமலிருந்தால், சித்தம் உண்டாவதில்லை, எல்லாவற்றையும் விட்டு விட்டு உள்ளே குளிர்ந்ததேயானுல், அந்த சித்தம் ஏதேனும் செயலில் ஈடுபட்டிருந்த போதிலும் இல்லாதது என்றே சொல்லப்படுகிறது. எவர்களுடைய வாஸனை ரஸமன்னியில் வறுத்த விதைபோலிருக்கிறதோ அவர்கள் சித்தமற்றவர்கள் எனப்படுகிருர்கள். அவர்களே ஜீவன் முக்தர்கள்.

மேலும் வாஸனையால் பிராணனும் சலிக்கும், பிராணன் சலிப்பதினுல் வாஸனையும் ஏற்படும். இதிலிருந்து சித்தம் முளைக்க ஆரம்பிக்கிறது. இவ்விரண்டில் ஒன்று நசித்தால் சீக்கிரம் இரண்டுமே நசித்துவிடும். இவ்விரண்டிற்கும் பீஜம் அறியப்படும் பதார்த்தம், அதை விட்டு விட்டால் இரண்டும் நசித்துவிடும். அறியப்படும் பதார்த்தத்திற்கு பீஜம் அறிதல் என்பது, அது இல்லையானுல் அறியப்படுவது கிடையாதல்லவா? அறிதல்தான் எல்லையற்ற துக்கத்திற்குக்காரணம். ஜாட்யமில்லாமல் அறியாதிருத்தல் ஸுகத்திற்குக்காரணம்.

**ஸ்ரீ ராமர் :** ஜாட்யமில்லாமல் அறியாதிருத்தல் என்பது எப்படி? அறியாமலிருக்கும்போது ஜாட்யம் எப்படி இல்லாமலிருக்கும்.

**வஸிஷ்டர் :** எவ்விஷயத்திலும் ஆசை வைக்காமல் எங்கேயும் ஒரேமாதிரி பாவனையுடன் எதையும் வேண்டாமலிருக்கும்

ஜீவன் அறிகிறவனுமில்லே; ஜடனுமில்லே. அவன் நூறு கார்யங்களைச் செய்துகொண்டிருந்தாலும் செய்யாதவனேஆவான். அவனே ஜீவன் முக்தன். எல்லா வாஸனைகளேயும் விலக்கி விட்டு நிர்விகல்ப ஸமாதியில் எந்த ஆனந்த மேற்படுமோ, அதுவும்கூட உள்ளே லயித்து விடும். அவ்விதம் ஆனந்தத்தையும் நழுவவிட்டவன் அறிகிறவனல்ல, ஆனுல் அவன் ஜடனுமல்ல, ஸுகமாய் இருப்பவன். எல்லேயற்ற குணங்களின் கடலேத் தாண்டி துக்க ஸாகரத்தின் கரையை அடைந்தவன்.

இந்த அறிவிற்கும் பீஜம் "இருப்பு"என்பது மாத்திரம். அந்த இருப்புக்கு இரண்டு ரூபங்கள் உண்டு, ஒன்ருகவும் பலவாகவும், "இது குடம், வஸ்திரம், நீ, நான்" என்று எல்லாம் பிரித்துப் பிரித்து இருப்பது "பலவாக" எனப்படும். இந்த வித்யாஸங்களே எல்லாம் விட்டு எதிலும் ஸம்பந்தப்படாமல் எங்கும் வியாபித்துக் கொண்டு இருப்பாக மாத்திரம் எது இருக்கிறதோ அது "ஒன்ருக" எனப்படும். அந்த பொதுவாயுள்ள இருப்பாக மாத்திரம் இருப்பதே இந்த ஜகத்திற்கு "பீஜம்," அதிலிருந்துதான் ஜகத் உண்டாகிறது. எல்லாக்காரணங்களுக்கும் காரணமாயிருப்பதால், அதற்குக் காரணம் கிடையாது. எல்லா ஸாரங்களுக்கும் ஸாரம் அதுவே; அதற்கு ஸாரம் வேறு கிடையாது. அது மாத்திரம் அறியப்பட்டு விட்டதேயாஞல் சித்தம் சாசுவதமான சாந்தியை அடைந்து விடும்.

**ஸ்ரீ ராமர் :** இவ்விதமாகப்பல பீஜங்களேச் சொன்னீர்களே, அவைகளுக்குள் எதைக்கைப்பிடித்தால் அந்தநிலேயை அடைய முடியும்?

**வஸிஷ்டர் :** நான் சொல்லி வந்த பீஜங்களில் மேல், மேல் சொன்னதைக் கைப்பிடித்தால் கீழ் கீழ் சொன்னது விலகும். இருப்பாக மாத்திரம் இருப்பதைப்பிடித்துவிட்டால் உடனே மேலான நிலேயேற்படும். பலாத்காரமாக பிரயத்னம் செய்து வாஸனைகளேயெல்லாம் விட்டு விட்டிருந்தால், அதாவது இருப்பாக மாத்திரம் இருக்கும் நிலேயில் ஸ்திரமாயிருந்தால், அது

கிடைக்கும். "அறிதல்" என்ற நிலையிலிருந்தால் இன்னும் அதிகப்பிரயத்தினம் செய்து கிரமமாக அந்த உத்தம நிலையை அடையலாம்.

சித்தம் லயமாகாத வரை வாஸனை நசிக்காது; வாஸனை நசிக்காதவரை சித்தம் அடங்காது. தத்வக்ஞானம் ஏற்படாத வரை சித்தம் அடங்காது; சித்தம் அடங்காத வரை தத்வத்தை அறிய முடியாது. வாஸனை நசிக்க வில்லையானுல் தத்வக்ஞானம் எப்படி ஏற்படும்? தத்வமறியவில்லையானுல் வாஸனை எப்படி நசிக்கும்? ஆகையால் தத்வக்ஞானம், மனோநாசம், வாஸனுக்ஷயம் ஆக மூன்றுமே ஒன்றுக்கொன்று காரணமாயிருப்பதால் ஸம்பாதிப்பது மிகவும் சிரமம். அதனுலேயே மிகவும் புருஷப்பிரயத்னம் செய்து விவேகத்தினுல் போகத்திலுள்ள ஆசையை தூரத்தள்ளி விட்டு மூன்றையுமே ஆசிரயிக்க வேண்டும். ஸமகாலத்தில் மூன்றும் நன்கு அப்யஸிக்கப்பட்டால் ஸபலமாகும். நீ படித்து, இவைகளை அப்யஸித்தால் எல்லாவித கட்டுகளும் விலகி விடும். வாஸனைகளைத் தியாகம் செய்வதைப் போலவே பிராணனைக் கட்டுப்படுத்துவதும். நன்கு பிராணயாமத்தை அப்யஸிப்பதாலும், குருஉபதேசித்த யுக்தியை அனுஸரிப்பதினுலும், ஆஸனம் ஆஹாரம் இவைகளின் நியமத்தினுலும் பிராணன் கட்டுப்படும். ஆத்ம விஷயமான அறிவை ஸம்பாதித்தல், ஸாதுக்களை ஸேவித்தல், வாஸனைகளை விடுதல் இவைகளாலும் பிராணன் கட்டுப்படும். இவ்விதமாக அநேக உபாயங்கள் இருக்கும்போது எவர்கள் ஹடமாக மனஸைக் கட்டுப்படுத்த நினைக்கிறுர்களோ, அவர்கள் கையிலுள்ள தீபத்தை விட்டெறிந்து விட்டு மையைக்கொண்டு இருட்டை விரட்ட நினைப்பவரே ஆவார்கள்.

ஆகையால் இவ்வித கோணங்களையெல்லாம் விட்டு விட்டு, சுத்தமான அறிவையே ஆசிரயிக்க வேண்டும். "இந்த ஜகத் எதுவாயிருக்கும்? நான் யார்?" என்று இடைவிடாமல் மெள்ள மெள்ள, தானுகவேயோ நல்லோர்களைக் கூட வைத்துக் கொண்டோ, விசாரிக்க வேண்டும். ஆத்மா விஷயமான விசா

ரணைதான் ஞானத்திற்கு அங்கம். அந்த ஞானம் ஏற்பட்டால் சித்தம் தானுகவே தெளிந்து விடும் தத்வத்தை அறியாமல் நிம்மதியற்று இருப்புக் கொள்ளாதவனை இந்திரியங்கள் விழுங்கி விடும். ஸங்கம் (பற்றுதல்) தான் விஷயங்களுக்குக்காரணம்; ஸம்ஸாரத்திற்கும் ஆசைகளுக்கும், ஆபத்துக்களுக்கும் அதுவே காரணம். வாஸனை அழுக்குள்ளதானுல் அதுதான் ஸங்கம் எனப்படும். ஜீவன் முக்தர்களுடைய வாஸனையோ. களிப்பு, சோர்வு என்பதையறியாத, சுத்தமான வாஸனை-ஸம்பத்திலும், விபத்திலும், மனஸ் ஸமமாக இருந்து கொண்டு, வந்ததை யனுபவித்துக் கொண்டிருந்தால், ஸங்கமற்றதாகும்.

தேசம் காலம் முதலியதால் வரையறுக்கப்படாமல் ஒன்ருகவே யிருந்துவரும் பிரஹ்மமே நான், வேறு எதுவுமில்லையென்ற தீர்மானத்துடன் சாந்தமான மனஸுடன் மௌனியாய் தன் ஸ்வரூபத்தையனுபவித்துக் கொண்டிருக்க வேண்டும். அக் ஞானம் எதுவரை இருந்து வருகிறதோ, எதுவரை நான் பிரஹ்ம மில்லையென்ற எண்ணம் இருந்து வருகிறதோ, உலகத்திலுள்ள வஸ்துக்களில் ஆசை எதுவரை இருக்குமோ, அதுவரை சித்தம் கல்பனை செய்து கொண்டேயிருக்கும். உள்நோக்கினவனுய் எவன் மூவுலகத்தையும் துரும்பாக பாவித்து சைதன்யமாகிற அக்கினியில் ஆஹுதி செய்து விடுகிருனே. அவனுக்கு சித்தம் முதலியதிலுள்ள பிராந்திகள்யாவும் மறைந்து விடும். இந்த சைதன்யம் அழிவற்றதாக எல்லா ஜீவன்களிடத்திலுமே இருக்கிறது. ஆனுல் இதை அறிந்து கொள்ளாததினுல் எல்லாரும் தீனர்களாக இருக்கிருர்கள். இவ்விதம் அறியாதவர்களை வைத்துக்கொண்டுதான் இந்த ஸம்ஸாரம் நடந்து கொண்டிருக்கிறது.

அறியப்படுவதினுல் தீண்டப்படாமல், சாந்தமாய், எல்லா ஸ்வரூபமாய் எது இருக்கிறதோ, அந்த ஸத் சித் ஆனந்தமயமாயுள்ள வஸ்து எவ்வித அசைவுமில்லாமலிருந்து வருகிறது அதிலிருந்து தானுகவே அசைவு ஏற்படுகிறது, அது ஸூக்ஷ்மம் என்றும், நடுத்தரம் என்றும், ஸ்தூலம் என்றும், மூன்று

விதமாக கல்பிக்கப்படுகிறது. இதை ஸத்வம், ரஜஸ், தமஸ் என்பார்கள். இதுதான் பிரகிருதி என்பதும். இதுதான் ஸம்ஸாரம் என்பதும். இதற்கு அக்கரையே பரமபதம். இந்த மூன்று குணங்களில் ஒவ்வொன்றும் மூன்ருகும். ஆகையால் இது ஒன்பது விதமென்றும் சொல்லலாம். ஸாத்விக பாகத்திலுள்ள தமஸைச் சேர்ந்தவர்கள் நாகர், வித்யாதரர் முதலானவர்; ரஜஸைச் சேர்ந்தவர்கள் முனிகள், ஸித்தர்கள்; ஸத்வத்தைச் சேர்ந்தவர்கள் ஹரிஹராதி தேவர்கள். அவித்யையின் சுத்த ஸத்வபாகம் வித்யை எனப்படும் இவ்விதமே ரஜஸ், ஸ்ருஷ்டி, தமஸ் ஸ்ருஷ்டி இரண்டும் மூவகையாகும். தமஸில் மிகவும் கீழேயிருப்பது மரம் செடி முதலிய ஸ்தாவரங்கள். அந்த நிலையில் மனஸில்லாத தன்மையும் அடையப்படவில்லை; மனஸுள்ள தன்மையிலிருந்து நழுவியும் விட்டது. ஸுகத்தைக் கொடுக்கக் கூடிய சைதன்யமாயுள்ள ஜீவன் தூங்கிக் கொண்டு ஊமை குருடன் ஜடம் போல "இருக்கிறது" என்று மாத்திரம் சொல்லக் கூடியதாயிருக்கும்.

**ஸ்ரீ ராமர் :** "இருக்கிறது" என்று மாத்திரம் சொல்லக் கூடிய நிலை மோக்ஷத்திற்கு வெகு ஸமீபம் அல்லவா? இதை ஸ்தாவரங்களின் நிலை என்கிறீர்களே?

**வஸிஷ்டர் :** புத்தி பூர்வகமாய் நன்கு விசாரித்து தத்வத்தை உள்ளபடி அறிந்து 'இருக்கிறது" என்று மாத்திரம் சொல்லக் கூடிய நிலை ஏற்பட்டால், அதுதான் மோக்ஷமாகும். வேறு எதுவுமாகாது. வாஸனைகளை நன்கு அறிந்து பரித்யாகம் செய்தாக வேண்டும், வெறுமென உள்ளே தூங்கிக் கொண்டு, முளைக்கு விதையிருப்பது போல, மந்தமாயிருக்கும் வாஸனை, மறுபடியும் விழிப்பைக் கொடுக்கும் தூக்கம் போல, ஜன்மாவையே கொடுக்கும். அப்படித்தான் அததன் வாஸனைகள் ஸ்தாவரங்களில் உள்ளடங்கிக்கிடக்கின்றன. அவை நசித்து விடவில்லை, நெருப்பு, கடன், வியாதி, சத்ரு, எண்ணெய் எதிராளி. விஷம், இவை வெகு கொஞ்சமாக மிஞ்சியிருந்தாலும் பாதிக்கும், வாஸனையாகிற விதையை நன்கு எரித்து விட்டு "ஸத்தா ஸாமான்ய" ஸ்வரூபனுயிருந்தால், அவன் தேஹத்துடனிருந்தாலும் தேஹ

மற்றிருந்தாலும் துக்கத்தையடைய மாட்டான். மோக்ஷமென்பது வாஸனையற்ற சித்தத்தை அபேக்ஷிக்கிறபடியால் அவித்யையின் சுத்தபாகமான வித்யையினுல் அசுத்தமான பாகத்தை எரித்து விடவேண்டும். கடைசியில் இரண்டுமே அடங்கி, க்ஷேமம் ஏற்படும்

## அத்யாயம் 20

## புசுண்ட – உபாக்யானம்.

**வஸிஷ்டர் :** "இந்த உலகம் பிரஹ்மம் அல்ல" என்ற தீர்மானம்தான் அவித்யை எனப்படும். "இது பிரஹ்மமே" என்ற தீர்மானம், அந்த அவித்யைப் போக்கடிக்கும், சைதன்யம் பிரஹ்மம், உலகம் பிரஹ்மம், பூதங்கள் பிரஹ்மம். நான் பிரஹ்மம், என் சத்ரு, மித்ரன், பந்துக்கள் எல்லாரும் பிரஹ்மம். எல்லாமே பிரஹ்மம் - என்ற பாவனையேற்பட்டு விட்டால், அவன் ஸுகமாயுள்ளவன் என்பதில் ஸந்தேகமில்லை. எல்லா ஸங்கல்பங்களும் அடங்கியுள்ள சைதன்ய ஸ்வரூபத்தையே உபாஸிக்கிரேம் என்று நிச்சயித்து எவர்கள் ஸத்யமான நிலையில் ஸுகமாக இருக்கிருர்களோ, அவர்கள் ஜீவித்திருப்பதில் ஸந்தோஷமடைவதுமில்லை, மரணத்தை வெறுப்பதுமில்லை.

**ஸ்ரீ ராமர் :** பிராணனுடைய சலனத்தைக் கட்டுப்படுத்துவதினுலும் வாஸனைகளை லயப்படுத்துவதினுலும் ஜீவன் முக்தி நிலையில் எப்படி ஒய்வுதல் ஏற்படுகிறது?

**வஸிஷ்டர் :** பிராணனைக் கட்டுப்படுத்துவது, ஆத்ம தத்வத்தை அறிவது, ஆகிய இரண்டு முறைகளும் யோகம் என்றே சொல்லப்பட்டபோதிலும், சிலருக்கு முதல் யோகம் ஸாதிக்க முடியாமலிருக்கும்; சிலருக்கு இரண்டாவது யோகம் ஸாதிக்க முடியாமலிருக்கும். இவ்விஷயத்தில் வெகு ஆச்சர்யகரமான ஒரு விருத்தாந்தம் சொல்கிறேன் கேள்.

முன்னெரு ஸமயம் இந்திரனுடைய ஸதஸில் சாதாதப முனிவர் "மேருபர்வத்தின் ஈசான மூலையிலுள்ள கல்பவிருக்ஷத்

தின் மேலே புசுண்டன் என்ற வொரு காக்கை இருக்கிறது அவன் சாந்தன் ஓய்வு பெற்ற மனஸையுடையவன். ஆசையை விட்டவன, சிரஞ்சீவி. அவனைப்போல ஸ்வர்க்கத்திலும் யாரும் கிடையாது, இருக்கப்போவதுமில்லை'' என்று சொன்னர். இதைக் கேட்டதும் எனக்குக் குதூஹலமேற்பட்டு நானேபோய் அந்த கல்பவிருக்ஷத்திலிருந்த புசுண்டனைப் பார்த்தேன். அவன் உடனே எனக்கு அர்க்யபாத்யாதிகளெல்லாம் கொடுத்து விட்டு நான் அங்கு வந்ததின் உத்தேசமென்ன வென்று கேட்டான். அதற்கு நான் "தாங்கள் எந்த குலத்தில் பிறந்தவர்? தங்களுக்கு வயது எவ்வளவு? தாங்கள் அறிவாளியாக எப்படி ஆனீர்? என்று கேட்டதின் பேரில் அவன் சொல்லவாரம்பித்தான்.

**புசுண்டன் :** பரமேசுவரருக்குப் பிரமத கணங்கள் இருப்பது போல பரிவார தேவிகளாக ஜயா, விஜயா, ஜெயந்தீ, அபராஜிதா, ஸித்தா, ரக்தா, அவம்புஜா, உத்பலா என்ற மாதிருகைகள் ஒரு ஸமயம் சேர்ந்து ஒரு பெரிய உத்ஸவம் கொண்டாடினர்கள். அப்பொழுது அவர்களுடைய வாஹனங்களும் ஸுராபானம் செய்து விட்டு நர்த்தனம் செய்தார்கள். அவம்புஜையின் வாஹனமாகிய சண்டன் என்ற காக்கை மற்ற வாஹனங்களாகிய ஸ்திரீ ஹம்ஸங்களுடன் ரமித்ததில் அவர்கள் கர்ப்பம் தரித்து கிரமமாக பிரஹ்மாவின் ஸரஸ்கரையில் இருபத்தோரு புத்திரர்களை பிரஸவித்தார்கள். இவ்விதமாக நாங்கள் பிறந்தோம். பிறகு நாங்கள் அந்த மாதிருகைகள் ஹம்ஸிகள் இவர்களுடன் சேர்ந்து பிராஹ்மீயை ஆராதித்தோம். அவளுடைய அனுக்ரஹத்தினல் நாங்கள் முக்தர்களைப் போல சாந்தர்களாய் திருப்தியுள்ள மனஸையுடையவர்களாக யிருந்துவர, தியானத்திற்குத் தக்கதான ஏகாந்தமான இடம் வேண்டுமென்று எங்கள் தகப்பனரைக் கேட்டுக்கொண்டோம். அதற்கு அவர் எவ்வித கெடுதலுமில்லாத இந்த கல்பவிருக்ஷத்தைக் குறிப்பிட்டார். எவ்வித கவலையுமற்று இங்கே இருந்து வருகிறோம்.

இவ்விதம் புசுண்டன் சொல்லி நிறுத்தினவுடன் "உம்மை மாத்திரம் தானே இங்கே காணுகிறேன், ஸகோதரர்களைக்

காணவில்லையே?'' என்று நான் கேட்டதற்கு " நாங்கள் இங்கே வெகுகாலமிருந்து வந்தோம்'' அநேகயுகங்கள், கல்பங்கள் சென்றன. என் தம்பிகள் எல்லோரும் துரும்பாக மதித்து தேஹத்தை விட்டு விட்டு மங்களமான பரமபதத்தை அடைந்து விட்டார்கள் தீர்க்காயுஸ்ஸுள்ளவர்களாகவோ நல்லோர் களாகவோ, மஹான்களாகவோ, பலிஷ்டர்களாகவோ இருந் தாலும் எல்லாருமே காலத்தினால் விழுங்கப்படுகிறார்கள் என்றான். அதன் பேரில் நான் ''கல்பங்கள் முடியும்போது அக்னி ஜலம் வாயுவெல்லாம் பெருக்கெடுத்து ஸூர்யன்களும் வெகுவாக தபிக்கும்போது எவ்விதமாயும் பாதிக்கப்படாமல் தாங்கள் எப்படி இருந்தீர்கள்? என்று கேட்டேன். அதற்கு-

**புசுண்டன் :** கல்பத்தின் முடிவில் உலக வியவஹாரங்கள் யாவற்றும் அடங்கிவிடும் போது; எவ்விதகல்பனையுமற்ற ஆகா சத்திலேயே நின்று விடுவேன் ஸூர்யன்களெல்லாம் தபிக் கும்போது ஆகாசத்திலிருந்து கொண்டு மனதை திடப்படுத்திக் கொண்டு ''வாருணீதாரணை''யை ஏற்படுத்திக் கொண்டிருப் பேன் பிரளயகாலத்து வாயுக்களால் மலைகளெல்லாம் சிதறும் போது பர்வதம்போல 'தாரணை'யை ஏற்படுத்திக்கொண்டு அசைவற்றிருப்பேன் பிரஹ்மாண்டத்திற்கு அப்பாலுள்ள நிர்மலமான நிலையில் அசைவற்ற தூக்கமுள்ளவன்போல இருப் பேன் பிரஹ்மா மறுபடியும் எப்பொழுது ஜகத்தை ஸ்ருஷ்டி செய்கிறானோ அப்பொழுது பிரஹ்மாண்டத்தில் பிரவேசித்து என்னிருப்பிடம் வருவேன். என்னுடைய ஸங்கல்பத்தின்லேயே ஒவ்வொரு கல்பத்திலும் திரும்பத் திரும்ப இந்த மலையுச்சியில் இப்படியே விருக்ஷமும் ஏற்படும்.

இவ்விதம் புசுண்டன் சொன்னதும் ''பிரளய காலங்களில் தாங்கள் எப்படி தாரணை செய்து கொண்டு நின்று விடுகிறீர் களோ, அப்படியே மற்ற யோகிகள் ஏன் நிற்பதில்லை?'' என்று நான் கேட்டதற்கு,

**புசுண்டன் :** "பகவானுடைய கட்டுப்பாட்டை யாரும் மீற முடியாது. எனக்கு இப்படித்தான், அவாகளுக்கு அப்படித் தான்" என்ருன். பிறகு "தாங்கள் விசித்திரமாக அநேக ஸம் பவங்களை அனுபவித்திருப்பீர்களே" என்றேன், அதற்கு

**புசுண்டன் :** மலை காடு மரம் எதுவுமில்லாமல் கிடந்த இந்த பூமியைப்பார்த்திருக்கிறேன். ஸூர்யன் சந்திரன் முதலானவர் களின் உத்பத்தி; இந்திரன், உபேந்திரன் இவர்கள் ஏற்பட்டது, பூமியை ஹிரண்யாக்ஷன் கொண்டு போனது, அதை பகவான் வராஹரூபமெடுத்து மீட்டியது, ஸமுத்திரங்கள் உண்டானது. அமிருதத்திற்காகக் கடலைக் கடைந்தது, எல்லாவற்றையும பார்த்திருக்கிறேன். பிரஹ்மாவின் புத்திரரான தங்களுக்கு இது எட்டாவது பிறவி. மஹாவிஷ்ணு ரேணுகையின் புத்திரா் பரசுராமராக ஆறுதடவை பிறந்திருக்கிருர். திரிபுரஸம்ஹாரம் முப்பது தரமும்' தக்ஷயாகத்தைக் கலைத்தது இரண்டு தரமும், அமிருதமதனம் பன்னிரண்டு தரமும் நடந்தது நினைவுக்கு வரு கிறது. இப்பொழுது பகவான் ராமர் என்ற பெயருடன் பதினே ராவது தடவை அவதரிக்கப் போகிருர். பிற்பாடு வஸூதேவ ருடைய கிருஹத்தில் பதினுருவது தடவையாக மறுபடியும் வரப்போகிருர். இந்த ஜகத் என்பதே வெறும் பிராந்தி, ஜலத்தில் தோன்றும் நீர்க்குமிழி மாதிரி, கொஞ்சகாலம் இருப்பதாகத் தோன்றும் வாஸ்தவத்தில் இருப்பற்றதுதான்."

இவ்விதம் சொல்லும் போது "உலகத்தின் மத்தியிலிருந்து கொண்டு வியவஹாரமும் செய்து கொண்டிருப்பவர்களுடைய சரீரத்தை மிருத்யு ஏன் பாதிக்கவில்லை" என்று ஸந்தேஹம் தோன்றி நான் கேட்டதின் பேரில்,

**புசுண்டன் :** எவருடைய ஹ்ருதயத்தில் தோஷங்களாகிற முத்துக்களில் வாஸனையாகிற கரடு கோர்க்கப்பட்டதாயில்லை யோ, அவரை மிருத்யு கொல்ல நினைக்க மாட்டார். எவருக்கு உள்ளே ஆசையென்ற அக்கினியில்லையோ, அவரையும் கொல்ல நினைக்க மாட்டார். எவருடைய சித்தமானது ஒன்ருக

நிர்மலமாக வெகு பரிசுத்தமாகவுள்ள நிலையை அடைந்து ஓய்வு பெற்றிருக்கிறதோ, அவரையும் மிருத்யு கொல்ல நினைக்க மாட்டார். ஸம்ஸாரமாகிற வியாதிக்குக் காரணமாயிருக்கும் இவ்விதமான பெரிய தோஷங்கள் எவருடைய சித்தத்தை கொஞ்சமேனும் அசுத்தப்படுத்துவதில்லையோ, அவருடைய சித்தம் தத்வத்திலேயே நிலைத்திருக்கும். எல்லா துக்கங்களை யும் போக்கடிப்பது ஆத்மா விஷயமான சிந்தனை, எல்லாவித க்ஷேமங்களையும் விருத்தி பண்ணும், அதையொட்டி பிராண சிந்தையுமிருந்ததேயானல் வெகுநாள் ஜீவித்திருக்க முடியும்.

"பிராண சிந்தை என்பது என்னவென்று நான் கேட்டதற்கு

**புசுண்டன்:** இந்த' சரீரத்தில் மேல் நோக்கி பிராணன் என்றும் கீழ்நோக்கி அபானன் என்றும் இரண்டு வாயுக்கள் ஸஞ்சரித்துக்கொண்டு இந்த சரீரமாகிற பெரிய யந்திரத்தை ஓட்டிக் கொண்டிருக்கின்றன. அவைகளுக்கு எப்பொழுதும் சிரமமோ ஓய்வோ கிடையாது. ஹ்ருதயமாகிற ஆகாசத்தி லுள்ள ஸூர்யனும் சந்திரனுமாகும் அவை. ஜாகிரத் ஸ்வப்னம் ஸுஷுப்தி எந்த தசையிலும் எப்பொழுதும் ஒரே மாதிரியிருப் பவைகள். அவைகளுடைய ஸஞ்சாரம் வெகு ஸூக்ஷ்மமா யிருப்பதால் நன்கு காணமுடியாது. எப்பொழுதும் ஸஞ்சரித் துக்கொண்டேயிருக்கும் சலன சக்திகள் இவையிரண்டும், மேல் நோக்கியுள்ள பிராணன் எவ்வித பிரயத்னமுமில்லாமல் வெளியில் பன்னிரண்டு அங்குலம் வரை போக்குவது ரேசகம் எனப்படும். அப்படியே அபானனை உள்ளேயிருத்தி சரீரத்தில் நிறப்புவது பூரகம் எனப்படும். அபானன் ஒடுங்கி பிராணன் வெளிக்கிளம்பாமல் செய்வது கும்பகம் எனப்படும். இவ்விதம் மூன்றுவிதமேற்படுகிறது. இதிலேயே ஈடுபட்டு மனஸ் வெளி யில் போகாமல் பார்த்துக்கொண்டு விட்டால் சில நாட்களிலே யே மேலான நிலையை அடைந்து விடலாம்.

இவ்விதம் பிராணனை நிலைநிறுத்தி கிரமமாக நிர்மலமான சைதன்யமான ஆத்மாவினிடத்தில் இருத்தல் எனக்கு ஏற்

பட்டது. சென்றதையோ, வரப்போவதையோ, நான் ஒருக் காலும் நினைப்பது கிடையாது. நடப்பதைப் பார்த்துக்கொண்டிருப்பேன் என்னுடைய மனஸ் நல்லது கிடைத்தால் ஸந்தோஷப் படுவதுமில்லை, கெட்டது ஏற்பட்டால் துக்கப்படுவதுமில்லை, எப்பொழுதும் ஒரேமாதிரியாயிருக்கும் இவன் பந்து, இவன் வேறு, இவன் என்னைச் சேர்ந்தவன், இவன் வேறு என்பதை நான் அறியேன். அதினாலேயே வெகுகாலம் ஜீவித்து வருகிறேன். ஆசை முதலான சித்த விருத்திகளுக்கு இடம் கொடுப்பதேயில்லை. அதினால்தான் வெகுகாலம் ஜீவித்து வருகிறேன்.

இவ்விதம் சொன்னவுடன் "தங்களுடைய விருத்தாந்தம் வெகு ஆச்சர்யகரமாகவிருக்கிறது" என்று சொல்லி விட்டு நான் விடைபெற்றுக்கொண்டு தேவலோகம் போய்ச்சேர்ந்தேன். சென்ற க்ருத யுகத்தின் ஆரம்பத்தில் மறுபடியும் அந்த புசுண்டனைக் கண்டேன். ஹே ராம, நீ இந்த திரேதாயுகத்தின் மத்தியில் பிறந்திருக்கிறாய், மறுபடியும் எட்டாவது வருஷத்தில் அந்த விருக்ஷத்தின் மேலே அவனைக் கண்டேன். எவ்வித ஜரையுமன்னியில் முன்போலவேயிருக்கிறான. இந்த விசித்திர மான விருத்தாந்தத்தை நன்கு விசாரித்து எப்படி யுக்தமோ அவ்விதம் செய்.

## அத்யாயம் - 21

# ஆத்ம - பூஜை

**வஸிஷ்டர் :** இந்த உலகம் வெறும் தோற்றமே தவிர வேறில்லை. இன்ன பெயருள்ளவன் நான் என்ற இந்த சரீரமும் வாஸ்தவத்தில் இருப்பற்றது. ஸுகமாகப் படுக்கையில் படுத்துக்கொண்டிருப்பவன் ஸ்வப்னம் காணும்போது பலதிக்கு களில் அலைவதற்கு உபயோகப்படுகிற சரீரம் எங்கே இருக் கிறது? விழித்துக் கொண்டிருக்கும்போதே மனோராஜ்யம் செய் யும் போது எது ஸ்வர்க்கத்திற்கும் மேருபர்வதத்திற்கும் போகிற

தோ, அந்த தேஹம் எங்கேயிருக்கிறது? இந்த உலக அனுப வத்தையும் ஒரு நீண்ட ஸ்வப்னம் அல்லது நீண்ட பிராந்தி அல் லது நீண்ட மனோராஜ்யம் என்றே அறி. இந்த ஸம்ஸார சக்கி ரம் சுழல்வதெல்லாம் நடுவிலுள்ள சங்கல்பத்தினால்தான், ஆகையால் பௌருஷத்தைக்கொண்டு சித்தத்தை நிரோதம் செய்ய வேண்டும்.

நல்லபுத்தி, நல்ல நடத்தை, சாஸ்த்திரக்ஞானம் இவைகளு டன் சேர்ந்த பௌருஷத்தினால் அடையக் கூடாதது எதுவும் எங்கேயும் கிடையாது. சித்தமாகிறயக்ஷனால் பீடிக்கப்பட்டுள்ள மனிதனை சாஸ்திரங்களோ, பந்துக்களோ, குருக்களோ காப் பாற்ற முடியாது. சித்தமாகிற வேதாளத்தை அடக்கிவிட்டால், குரு, சாஸ்திரம் பந்துக்கள் எல்லாருமே, ஸ்வல்பமான சேற்றி லகப்பட்டுக்கொண்ட மானை விடுவிப்பது போல அதிக சிரம மன்னியில் கைதூக்கிவிடமுடியும்.

இவ்விஷயமாக, மோஹத்தை விலக்கக்கூடிய வேறொரு முறையைச் சொல்கிறேன். கேள், இது சந்திரகலாதரரான பர மேசுவரராலேயே எனக்குச் சொல்லப்பட்டது ஒரு ஸமயம் கங்கா நதிக்கரையில் நான் அவரை பூஜை செய்து கொண் டிருந்தேன். சிராவணமாஸம் கிருஷ்ணபக்ஷம் அஷ்டமீ தினத் தில் அந்தக்காட்டில் வெகு சந்திரன்கள் சேர்ந்து பிரகாசிப்பது போல ஒரு பிரகாசத்தைக்கண்டேன். உடனே அந்தப் பக்கம் திரும்பிப் பார்க்கையில், முன்னால் நந்திகேசுவரர் வர, பார்வதியுடன் கைகோர்த்துக்கொண்டு பகவான் தர்சனம் அளித்தார். நான் உடனே அர்க்யபாத்யாதிகள் கொடுத்து புஷ்பங்களால் அர்ச்சித்து ஸ்தோத்திர நமஸ்காராதிகளைச் செய் தேன். பூஜைமுடிந்தவுடன் அவர் "உன்தபஸ் இடையூறில்லாமல் நடந்து வருகிறதா? அடைய வேண்டியதை அடைந்து விட்டாயா?'' என்று என்னைக் கேட்டார். அதற்கு நான் "தங் களுடைய ஸ்மரணம் எனக்கு இருந்து வரும்போது இடையூறு எப்படியிருக்க முடியும்? அடைய முடியாததும் எதுவும் கிடை யாது. தங்களை ஸ்மரிப்பதே மோக்ஷமாகிற நகரத்தின்

கோட்டைவாசல், இருந்தாலும் ஒரு சிறிய ஸந்தேஹத்திற்கு தெளிவு கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். எல்லா பாபங்களையும் போக்கடிக்கக் கூடியதாயும் எல்லாவித மங்களங்களையும் வளர்க்கக்கூடியதாயுள்ள தேவ பூஜா முறை எப்படி என்று தெரிய விரும்புகிறேன்" என்றேன், அதற்கு,

**மஹேசுவரர் :** கமலக் கண்ணனான மஹாவிஷ்ணு தேவன் அல்ல; முக்கண்ணனாயுள்ளவரும் தேவன் அல்ல. சரீரமுடையவர் யாரும் தேவன் அல்ல. சித்த ரூபமாயுள்ளவரும் தேவன் அல்ல. உண்டாகாததாக ஆதியும் அந்தமுமற்றது எது பிரகாசிக்கிறதோ அதுவே தேவன். அந்த தேவனின் தத்வத்தையறியாதவர்களுக்கு ரூபமுள்ளதின் பூஜை விதிக்கிப்பட்டிருக்கிறது; பத்து மைல் நடக்க முடியாதவனுக்கு இரண்டு மைல் நடக்கும்படி விதிப்பது போல மனதின் அடக்கம் ஞானம், முதலான புஷ்பங்களைக் கொண்டு ஆத்மதத்வத்தை பூஜிப்பதே, தேவ பூஜை; ரூபமுள்ளதைப் பூஜிப்பது பூஜையாகாது வெளியிலுள்ள ஸாதனங்களை அபேக்ஷிக்காமலும் அவைகளால் உண்டாக்கக் கூடியதில்லாமலுமுள்ள ஸுகம் இந்த ஆத்ம பூஜையிலிருந்து கிடைக்கும்.

ஸத்தாஸாமான்ய ரூபமாய் (பொதுவாக 'இருக்கிறது" என்று மாத்திரம் சொல்லக் கூடியதாய்) இருக்கிற சைன்தயம் ஆத்மா வென்று சொல்லும் தன்மையை அடையும் போது தேவன் என்று சொல்லப்படுகிறது, தேசம் காலம் முதலிய சக்திகளுக்கு உள்படும்போது ஜீவன் எனப்படுகிறது பிறகு புத்தியாக நம் மனஸாகவும் ஆகி ஸம்ஸாரத்தைப் பிடித்துக் கொள்கிறது. தேஹத்தில் இருந்து கொண்டு நான் என்ற எண்ணம் ஏற்படும்போது துக்கம் வருகிறது அந்த துக்கமும் ஸங்கல்பத்தினாலேயே வளர்ந்து விடுகிறது. ஸங்கல்பமற்றிருந்தால் அது தானாகவே நசித்து விடும், மனஸிற்கு ஸங்கல்பத்தினால் ஏற்படும் அழுக்கை ஸங்கல்பத்தினாலேயே போக்கடித்து தெளிவு படுத்தி விட்டால், உத்தமமான ஆனந்தம் தோன்றும். இந்த ஆத்மா எல்லா சக்திகளையுடையவர், எல்லாவற்றையும்

ஸாதிப்பவர், இவர்தான் தேவர், இவர்தான் மேலான பரதத்வமும்.

இவரை பூஜை செய்தல் என்பது உள்ளே தியானம் செய்வது தான் இவருக்கு வேறு பூஜை கிடையாது ஆகையால் மூவுலகத்திற்கும் ஆதாரமாய், நித்யமாய், சைதன்யஸ்வரூபமாய் லக்ஷம் சூர்யனுக்கு ஸமமான பிரகாசம் உள்ளவராய், எல்லா தோற்றங்களையும் தோற்றுவிக்கிறவராய் இருக்கிற இவரை தியானத்தினால் பூஜை செய்ய வேண்டும். சரீரத்திலிருக்கும் ஞானம் முதலான சக்திகள் யாவும் அவருடையதே. அவரே ஜகத்தாகத் தோன்றுகிறார். காலம் அவருக்கு துவாரபாலகன். அவருக்கு எங்கேயும் கண், எங்கேயும் காது, எங்கேயும் மூக்கு, எங்கேயும் த்வக், எங்கேயும் மனஸ்; நினைப்புக்கு அப்பாலுள்ளவர், எங்குமுள்ள உத்தமமான மங்களம். இவ்விதம் பாவித்து அவரை பூஜிக்க வேண்டும்.

இவர் பூஜிப்பவனுடைய சைதன்ய ஸ்வரூபமாயிருப்பதால் அவருக்கு நைவேத்யம் முதலியது தேவையில்லை எப்பொழுதும் எவ்வித சிரமமுமன்னியில் ஏற்பட்டிருக்கும் அறிவைக் கொண்டே அவரை பூஜிக்க வேண்டும். இவரை உள்ளே பூஜிக்க வேண்டிய கிரமத்தையும் சொல்கிறேன். தன் சரீரத்திற்குள் இருந்துவரும் சைதன்யத்தின் ஆபாஸத்தை தேவன் என்று பூஜிக்க வேண்டும். எது எது போய்விடுகிறதோ அதனை உபேக்ஷிக்க வேண்டும்; எது எது கிடைக்கிறதோ அதனை எடுத்துக்கொள்ள வேண்டும். இவ்விதமாக எவ்வித விகாரமுமற்றிருப்பதினாலேயே உத்தமமான பூஜை செய்வதாகிறது. எல்லாம பிரஹ்மமே என்ற தீர்மானத்துடன் இந்த நித்யமான ஆத்மாவின் பூஜைக்கிரமமாகிய வாதத்தையனுஷ்டிக்கவேண்டும் இந்த பூஜைக்காக திரவியம் சமம் (மனதை அடக்குதல்) என்ற ஒன்றுதான்.

இந்த ஆத்மா சாஸ்திரங்களைக்கொண்டு அறியப்படுவதில்லை; குருவின் வாக்கியத்திலிருந்தும் அறியப்படுவதில்லை.

தன் அறிவினுல் தானுகவே அறியப்படும் ஆனுலும் குருவின் உபதேசம், சாஸ்திரம், இவையன்னியில் தன்னுல் மாத்திரம் அறியக்கூடியதில்லை இவையெல்லாம் சேர்ந்திருந்தால்தான் தன் ஆத்மாவின் ஞானம் பிரகாசிக்கும். இவ்விதம் எவர் தேவ பூஜையை வெகுஜாக்கிரதையாய் எப்பொழுதும் செய்துகொண் டிருக்கிருரோ, அவர் நாங்கள் கூட எந்த விடத்தில் ஸேவகர் களாகயிருந்து வருகிருேமோ அவ்வித உத்தமமான பதவியை யடைந்துவிடுவார்.

என்று இவ்விதம் சொல்லிவிட்டு பரமேசுவரர் மறைந்து விட் டார். அது முதல் இதுவரை நான அவர் சொன்ன முறைப்படியே ஆத்மாவை பூஜித்து வருகிறேன். இந்த பூஜாக்கிரமத்தையனு சரிப்பதினுல்தான், வியவஹாரத்தில் ஈடுபட்டாலும் கூட, எவ் வித கவலையுமற்று காலம் கழித்து வருகிறேன். இவ்வித முறைப் படியே, பற்றற்ற சித்தத்துடன், இந்த ஸம்ஸாரமாகிற பெரிய காட்டில் ஸஞ்சரித்து வந்தால் எவ்வித துன்பமும் ஏற்படாது.

## அத்யாயம் - 22

## பாவனு – வைபவம்

**ஸ்ரீராமர்:** தங்களுடைய வாக்யாமிருதத்தைப் பருகப் பருக போதுமென்று திருப்தியேற்படவில்லை. தத்வ விஷயமாக மேலும் சொல்லும்படி பிரார்த்திக்கிறேன்.

**வஸிஷ்டர்:** ஏதாவது வஸ்து கிடைத்ததேயானுல், கிடைக் கும் க்ஷணத்தில் எவ்வளவு ஸந்தோஷம் இருக்குமோ. அந்த ஸந்தோஷம் அதற்கு அடுத்த க்ஷணத்தில் இராது என்பதை யாரும் அனுபவித்ததே. ஒரு வஸ்துவை விரும்பும் காலத்தில் அதில் எவ்வளவு பற்றுதலிருக்கிறதோ, அது வேறு காலத்தில் இராது. இவ்விதமாக க்ஷணிகமாயுள்ள ஸுகத்தில் பற்றுதல் வைப்பது பாலர்களுக்குத் தகும்; விவேகிகளுக்குத் தகாது. மேலும், விரும்பும் காலத்தில் ஏற்படும் ஸந்தோஷமும் விருப்பத் தினுலேயே தவிர, வஸ்துவினுல் அல்ல. ஆகையால் விருப்பம்

தான் அந்த ஸந்தோஷத்திற்குக் காரணம். அந்த ஸந்தோஷமும் ஸந்தோஷமில்லாமையை முடிவிலுள்ளது. ஆகையால் விரும்புவதை விட்டுவிட வேண்டும். ஆகையால் பற்றற்று ஜீவிக்க நினைத்தால், ஆசை, ஆசையற்றதாக மாற வேண்டும் பாவனையற்றிருக்க வேண்டும், மனஸே நினைக்காமலிருக்க வேண்டும். வாஸனையையும், பிராணனையும் கட்டுப் படுத்தி மனஸை சலிக்காமல் செய்ய வேண்டும். எப்பொழுது மனஸ் வெளிக்கிளம்பவில்லையோ அப்பொழுதுதான் உத்தமமான ஸுகம் இருக்கும். இதற்கு ஒரு கதை சொல்லுகிறேன் கேள்

ஒரு பெரிய பில்வப் பழம் இருக்கிறது. எத்தனையுகங்களானாலும் அது மாறுவதில்லை. பிரளய காலத்துக் காற்றிலும் அசைவதில்லை. உலகம் இருந்து வருவதற்கே அதுதான் மூலம். அது அளவில் அகப்படாது. அந்த பழத்தின் மேல் பக்கத்தில் பிரஹ்மாண்டங்கள் இருக்கின்றன; உள்ளேயோ சைதன்ய சக்தி, இந்த ஆகாசம் காலம், கோட்பாடு, பிரஹ்மாண்டம், திக்குகள் எல்லாம் அதுவே.

**ஸ்ரீ ராமர்:** தாங்கள் பில்வப்பழம் என்று சைதன்யத்தின் இருப்பையே சொல்கிறீர்களென்று நினைக்கிறேன்.

**வஸிஷ்டர்:** அப்படியேதான். வேறு விதமாயும் சொல்லுகிறேன். ஒரு பெரிய பாறை வெகு அகலம் நீளமுள்ளதாயிருக்கிறது. உள்ளே இடைவெளியன்னியில் நெறுக்கமாயுள்ளது. ஆனால் அதற்குள் நன்கு மலர்ந்த அநேக தாமரைகள் இருக்கின்றன. அவைகளுடைய இலைகள் ஒன்றோடொன்று பின்னப்பட்டிருக்கின்றன, சிலது வெளியில் தெரியும், சிலது மறைந்திருக்கும். சிலதிற்கு வேர் மேலேயும், சிலதிற்கு வேர் கீழேயும், சிலது வேர் இல்லாமலும் இருக்கும் நான் சொன்ன இந்த பாறை சைதன்யமே. அதற்குள்தான் ஜகத்து இருக்கிறது. ஒரே தன்மையுள்ளதால் பாறையென்றேன். அதற்குள் ஜகத் இருந்தபோதிலும், அது ஒன்றுகவேயிருக்கும் தன்மையை இழப்பதில்லை பலவித மாறுதல்களையடைந்துகொண்டிருக்கும் பிரஹ்மாண்டங்கள் அதற்குள்ளேயே அடங்கியிருக்கின்றன.

**ஸ்ரீ ராமர் :** ஜீவனுடைய ஸ்வரூபம் எவ்விதம்?

**வஸிஷ்டர் :** ஜகத்திற்கு பீஜமாய், ஆதியும் அந்தமும் அற்றதாய், இருக்கும் பிரஹ்மம் எதுவோ, அதுவே அசைவு ஏற்படும்போது ஜீவன் எனப்படுகிறது. அந்த ஜீவன்தான் இந்த சரீரத்தில் சேஷ்டிக்கிறது. நான் என்ற பாவனையால் அஹங்காரம் ஆகிறது; நினைப்பதால் மனஸ் ஆகிறது; அறிவதினால் புத்தி ஆகிறது; வெளிப்பார்வையால் இந்தரியமாகிறது தேஹத்தை பாவிப்பதால் தேஹம் ஆகிறது; குடத்தை பாவிப்பதால் குடம் ஆகிறது. இதையே "புர்யஷ்டகம்" என்றும் சொல்வார்கள். சைதன்யமானது அறியும் தன்மை, செய்யும் தன்மை, அனுபவிக்கும் தன்மை, ஸாக்ஷியாயிருக்கும் தன்மை; முதலியதைக் கொள்ளும்போது ஜீவன் எனப்படுகிறது இதினாலேயே தான், ஒரு ஸ்வப்னத்திலிருந்து வேறு ஸ்வப்னம் காணப்போவது போல், ஜனங்கள் வாஸ்தவமற்ற இந்த ஜகத்தைத் திரும்பத் திரும்பப் பார்த்துக்கொண்டேயிருக்கிறார்கள்.

யமதர்மராஜர் பிராணிகளைப் பிடிப்பதினால் தனக்கு பாபமேற்படுமோ என்று ஸந்தேகத்துடன் ஒரு ஸமயம் தபஸ் செய்ய வாரம்பித்து விட்டபடியால் உலகத்தில் மிருத்யு இல்லாததால் பிரஜைகள் ஏராளமாக விருத்தியாகி பாரம் தாங்காமல் பூதேவி மஹாவிஷ்ணுவை சரணமடைவாள். அப்பொழுது அவர் "வாசுதேவர் என்றும் அர்ஜுனன் என்றும் இரண்டு தேஹங்களையுடையவராக அவதரிப்பார். அந்த ஸமயம் யுத்தம் ஏற்படும் போது எதிரிகளெல்லாம் தன் பந்துக்களாக விருப்பதைக்கண்டு அர்ஜுனன் துக்கமடையும்போது அப்பொழுது நடக்க வேண்டிய கார்யம் ஸித்திப்பதற்காக வாஸுதேவர் அவனுக்கு உபதேசம் செய்வார்" ஆத்மா என்பது "ஆதி மத்யம் முடிவற்றது; சரீரம் கொல்லப்படுவதால் அது கொல்லப்படுவதில்லை. அது பிறப்பற்றது, எப்பொழுதுமுள்ளது, எவ்வித விகாரமுமற்றது. நான் செய்கிறேனென்ற பற்றுதலையும் பலனில் ஆசையையும் விட்டு விட்டு, யோக நிலையிலிருந்து கொண்டு கர்மாக்களைச் செய். எல்லாவித ஸங்கல்பங்களையும் விட்டு விட்டு, ஸமமாய்

அடங்கின மனஸுடன் இருந்து கொள். ஸங்கல்பங்களை விடுவதே பற்றற்ற தன்மையெனப்படும். என்னிடத்திலேயே மனஸை வை; என்னிடத்திலேயே பக்தியை செய், என்னையே ஸேவி; என்னையே நமஸ்காரம் செய், இவ்விதம் ஈடுபடுவாயாகுல் என்னையே அடைவாய். எனக்கு ஸாதாரணமான உருவம், உத்தமமான உருவம் என்று இரண்டு உருவங்கள் உண்டு கைகால் முதலியதுள்ளது ஸாதாரணம்; அதி ஸூக்ஷ்மமாயுள்ளது உத்தம ரூபம். எதுவரை ஞானமேற்படவில்லையோ அதுவரை ஸாதாரண ரூபத்திலேயே ஈடுபடு; அதிலிருந்து கிரமமாய் ஞானமேற்பட்ட பிறகு உத்தம ரூபத்தை யறிவாய். ஆத்மாவின் ஸ்வரூப ஞானமில்லாததிஞல் வாஸனையிருந்து வருகிறது; அந்த ஞானமேற்பட்டதும் விலகி விடும்" என்று இவ்வாறு அவரால் போதிக்கிப்பட்டு அர்ஜுனன் சோகத்திலிருந்து விடுபட்டவனுக ஆவான்.

வேறொரு பிக்ஷுகர் கதை சொல்கிறேன், அதையும் கேள் அவர் ஸமாதியை அப்யாஸம் செய்வதில் மிகவும் ஈடுபட்டவராய் இருந்து வந்தபடியால் அவருடைய சித்தம் எதைநினைக்கிறதோ அதுவாக ஆகிவிடுவார். ஒரு ஸமயம் விளையாட்டாக நினைத்து ஜீவடன் என்ற பெயருடைய ஸாமான்ய மனிதனுனர். அந்த ஜீவடன் தன் ஸ்வப்னத்தில் பிராஹ்மணன் ஆனுன். அந்த பிராஹ்மணன் ஸ்வப்னத்தில் சிற்றரசனுனன். அந்த சிற்றரசன் ஸ்வப்னத்தில் அரசனுனன், இவ்விதம் வரிசையாக ஸ்வப்னத்தில் தேவஸ்திரீ, பெண்மான், கொடி. வண்டு என்று ஆனர், அந்த வண்டு ஒரு யானையைப் பார்த்துவிட்டு யானையாக ஆகிவிட்டது. அந்த யானை தன் கன்னத்தில் உட்கார்ந்த ஒரு வண்டை நினைத்து மறுபடியும் வண்டாக ஆகிவிட்டது. பக்கத்திலிருந்த ஒரு ஹம்ஸத்தைப்பார்த்து இதுவும் ஹம்ஸமாக மாறி பிரஹ்மாவின் பரிவாரத்தில் சேர்ந்திருக்கும்போது, ஒரு ஸமயம் ருத்ரரைக் கண்டது. நானே ருத்ரன் என்று நினைத்ததால் ருத்ரனுக ஆகிவிட்டார், அதற்குரிய உத்தம ஞானமும் பிரகாசிக்க ஆரம்பித்தது. உடனே தான் செய்த கார்யத்தையெல்லாம் நினைத்து வெகு ஆச்சர்யத்தை யடைந்தார்."

உலகத்தை மயக்க வைக்கும் இந்த மாயையின் சக்தி வெகு விசித்திரமாயுள்ளது. நான் நூறு ஜன்மாக்களில் அலைந்து விட்டு இப்பொழுது ருத்ரனாக இருக்கிறேன். என்னால் ஏற் படுத்தப்பட்ட எல்லாரையும் எழுப்பிப்பார்க்கிறேன்" என்று தீர்மானித்துக்கொண்டு அந்த பிக்ஷுகர் இருந்தவிடம் போய் அவரை எழுப்பித் தன்னுடைய மனஸுடனும், சைதன்யத் துடனும் சேர்த்து வைத்தார், உடனே அவர் எழுந்து தன் னுடைய பிராந்தியை உணர்ந்து தன்னை ருத்ரனாகக் கண்டார். உடனே இருவரும் ஜீவடனுடைய இருப்பிடம் சென்று அவனை யும் இப்படியே எழுப்பினார்கள். பிறகு இந்த மூன்று ருத்திரர்க ளும் பிராஹ்மணன் சிற்றரசன், அரசன் முதலியயாவரையும் வரி சையாக எழுப்பினதில் எல்லாருமே திவ்யஞானமுள்ளருத்ராம்சங் களாக பிரகாசித்தார்கள். பிறகு ருத்ரருடைய ஸ்தானமடைந்து சரீரம் விலகினவுடன் எல்லாருமே ருத்ரராகி விட்டார்கள்.

ஆகையால் எல்லாம் சைதன்யத்திற்குள் அடங்கியிருக் கிறது. ஒரே நிலையிலிருப்பவனுக்கு நினைப்பதெல்லாம் ஸித்திக்கும். இந்த பிக்ஷுகர் ஸங்கல்பம் செய்தது கூட ஸத்யமாக ஏற்பட்டது. அவரால் ஸங்கல்பிக்கப்பட்ட ஜீவர் களும் ருத்ரத்தன்மையை அடைந்தார்கள். ஸங்கல்பத்தினா லேயே ஒருவர் பலவாகவும். ஆகமுடியும். இவ்விதமாகத்தான் பகவான் அம்சாவதாரலீலைகளைச் செய்து கொண்டு உலகத்தை நடத்திக்கொண்டு வருகிறார்.

## அத்யாயம் - 23

## பகீரத – உபாக்யானம்.

**வஸிஷ்டர் :** ஸௌஷுப்த பௌனத்தை ஆசிரயித்து சித்தத்தினுடைய சேஷ்டைகளை விட்டு விட வேண்டும்.

**ஸ்ரீ ராமர் :** "ஸௌஷுப்த மௌனம்" என்பது என்ன?

**வஸிஷ்டர் :** பேசுவதைத் தடுப்பது "வாக்-மௌனம்" எனப்படும். பலாத்காரமாக இந்திரியங்களை நிக்ரஹம் செய்வது

"அக்ஷ (இந்திரிய)-மௌனம்" எனப்படும். மனஸ் மாத்திரம் ஓடிக்கொண்டு, ஸகல சேஷ்டைகளையும் விட்டிருப்பது "காஷ்ட (கட்டை) மௌனம்" எனப்படும். எவ்வித வேற்றுமையுமில்லாமல், அப்யாஸம் செய்ய அவசியமில்லாமல், ஆரம்பம் முடிவு என்பதில்லாமல், தியானம் செய்தாலும் செய்யாமலிருந்தாலும் எப்பொழுது மிருப்பதால் உள்ளது "ஸௌஷுப்த மௌனம்" எனப்படும். பலவாக பிராந்தியால் தோன்றுகிற இந்த ஜகத்தின் தத்வத்தை உள்ளபடி அறிந்து ஸந்தேஹ மற்றிருப்பதே ஸௌஷுப்த மௌனம். இந்த மௌனம் இரண்டுவித யோகி சிரேஷ்டர்களால் அடையப்படுகிறது. நன்கு தத்வக்ஞான மேற்பட்டு நன்கு ஸமாதி நிலை சித்தித்து அறிவினாலேயே எவர் அந்த நிலையை அடைகிறார்களோ அவர்கள் "ஸாங்க்ய யோகிகள்" எனப்படுவார்கள். பிராணன் முதலான வாயுக்களை யடக்கி யோகத்தை யனுஷ்டித்து எவர்கள் அந்த உத்தம நிலையை அடைகிறார்களோ அவர்கள் "யோக யோகிகள்" எனப்படுவார்கள். ஸாங்க்யர்களால் அடையப்படும் நிலைதான் யோகிகளால் அடையப்படுகிறது ஒரே தத்வத்தில் உறுதியாக மனஸை ஈடுபத்தி அப்யாஸம் செய்வது, பிராணன்களை லயிக்கச் செய்வது, மனஸை நிக்ரஹம் செய்வது, எல்லாமே மோக்ஷத்திற்காகத்தான். இவைகளில் ஏதேனும் ஒன்று ஸித்தித்தாலும் மற்றவையும் ஸித்தித்து விடும் புஷ்பமும் அதனுடைய வாஸனையும் எப்படி ஒன்றை விட்டு மற்றொன்று பிரிந்திராதோ, அப்படியேதான் பிராணனும் மனஸும், எள்ளும் எண்ணெயும் போலுள்ளவை. ஒன்று இல்லையானால் இரண்டுமேயிராது. இரண்டும் நசிக்கும்போது உத்தமமான மோக்ஷ நிலை ஏற்படுகிறது.

எல்லா விஷயங்களிலிருந்தும் சித்தத்தை இழுத்து, எங்கும் ஸமமான பார்வையுடன், ஸ்திரமான புத்தியுடன், எவ்வித மோஹமன்னியில், வந்ததை யனுபவித்துக்கொண்டிருப்பவனுக்கு, பகீரதராஜனுக்குப் போல, ஸாதிக்க முடியாதது கூட சித்திக்கும் அவர் வெகு தார்மிகர். யௌவன பருவத்தி

லிருந்தும் கூட, உலகப்போக்கை விசாரித்து பார்க்கும்போது மிகவும் கவலையை அடைந்தார். ஒரு ஸமயம் அவர் தன் குரு த்ரிதுலரென்பவரிடம் "ஹேபகவன், ஜனன மரணமோஹம் முதலிய ரூபமாய் பயத்திற்குக் காரணமாயுள்ள எல்லா துக்கங் களும் எப்படி ஏற்படுகின்றன? எங்குமுள்ளதாய், சாந்தமாய், நிர்மலமாய், அழிவற்றதாய், சுத்த சைதன்ய ஸ்வரூபமாய் ஒன்று இருக்கிறது, அதைத் தவிர தேஹம் முதலிய வேறு எது வும், கிடையாது என்று அறிவேன், ஆனாலும் அது எனக்குத் தெளிவாய் அனுபவமேற்படவில்லை. அந்த சைதன்ய ஸ்வரூப மாகவே நான் எப்பொழுதும் இருந்து விடுவது எப்படி?" என்று கேட்டார். அதற்கு,

**த்ரிதுலர்** : சித்தமானது ஞானத்தினால் ஹ்ருதயாகாசத்தில் அறிய வேண்டியதான ஆத்ம தத்வத்தில் நிலைத்து விடுமே யானால் எல்லாமாக ஆகி மறுபடியும் ஜீவத்தன்மையை அடை யாது. அந்த ஞானம் என்பது புத்திரன், தாரம், வீடு முதலிய வைகளில் பற்றில்லாதிருத்தல், எதிலும் ஒட்டாதிருத்தல், விரும் பியதோ, விரும்பாததோ எது வந்தாலும் எப்பொழுதும் ஸம மான சித்தத்துடனிருத்தல், வேறு எதிலும் போகாமல் இடை விடாது ஆத்மாவையே சிந்தித்தல், தனித்துள்ள இடத்தை ஸேவித்தல், ஜனங்களின் கூட்டங்களில் ருசியற்றிருத்தல், ஆத்ம விஷயமான ஞானத்திலேயே ஈடுபட்டிருத்தல், தத்வமறி வதினால் ஏற்படக்கூடிய பிரயோஜனமாகிய மோக்ஷத்திலேயே நோக்கம், ஆகிய இவை. இவைகளுக்கு எதிரிடையாயிருப் பவை அக்ஞானம் எனப்படும். அஹங்காரம் ஒடுங்கினால் இந்த ஞானம் கிடைக்கும், எல்லாவித துக்கங்களுக்கும் உத்பத்தி அஹங்காரத்திலிருந்துதான். ஆகையால் ஆத்மாவில்லாத வஸ்துக்களில் இருந்து வரும் 'நான்' என்பதை விட்டுவிட வேண்டும்.

**பகீரதர்** : இந்த சரீரத்தில் உள்ள நான் என்ற எண்ணம் வெகுநாளாக இருந்து வருகிறதே, அதை எப்படி விடுகிறது?

**த்ரிதுலர் :** புருஷப்பிரயத்தனத்தினால் விஷயங்களிலுள்ள வாஸனையை விட்டு விட்டு, பரிபூர்ணமாய் எங்கும் நிறைந்துள்ள வஸ்துவை ஆசிரயித்தால், அஹங்காரம் போய்விடும், எல்லா வித ஆசைகளையும் விட்டு, தன்னைச்சேர்ந்ததாய் தோன்றினது யாவும் அடங்கி, எதுவுமற்ற நிலை ஏற்படுமானால், அஹங்காரம் ஒடுங்கும்.

இவ்விதம் குரு சொன்னதைக் கேட்டு எல்லாவற்றையும் விட்டு விடுவதற்காக, தன் ராஜ்யத்தை சத்ருவிடம் கொடுத்து விட்டு, இடுப்பிலுள்ள வஸ்திரத்துடன் தன் தேசத்தை விட்டு வெளியேறி, எங்கே எவரும் இவரை அறியமாட்டாரோ அங்கே போய், வெகு தைர்யத்துடன் இருந்து வந்தான் ஸ்வல்பகாலத் திற்குள்ளேயே எல்லா ஆசைகளும் அடங்கி உத்தமமான சாந்தி நிலையை அடைந்தார். அவர் ஸஞ்சரித்துக் கொண் டிருக்கும்போது ஒரு ஸமயம் தன் நகரத்திற்கே வந்தார். அப் பொழுது அந்த சத்ருவே நேரில் வந்து மறுபடியும் ராஜ்யத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொண்டான் அப்படி யிருந்தும் இவர் பிக்ஷையைத்தவிர ஒரு துரும்பு கூட பெற்றுக் கொள்ள மறுத்து விட்டார். ஒரு ஸமயம் அந்த குரு த்ரிதுலரை ஸந்திக்க நேரிட்டு அவருடனேயே கொஞ்ச காலம் வஸித்தார். இருவரும் ஸமமான அனுபவமுள்ளவர்களாக ஒவ்வொரு காடாக ஸஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். ஸுகம் துக்கம் எதையும் பொருட்படுத்தவில்லை. ஸித்தர்கள் கொடுத்த ஐசுவர்யத்தை யும் துரும்பாகவே நினைத்தார்கள்.

இப்படியிருக்கையில், வேறொரு தேசத்து அரசன் இறந்து போனதும் அங்குள்ள பிரஜைகள் இந்த முனிரூபத்திலுள்ளவர் பகீரதர் என்று தெரிந்து, இவரை அழைத்துச் சென்று தங்களுக்கு அரசனாகச் செய்து கொண்டார்கள். அவ்விதம் இருந்து வருகையில் இவருடைய முன்னுள்ள பிரஜைகளும் வந்து பிரார்த்தித்ததின் பேரில் பழைய ராஜ்யத்தையும் ஏற்றுக் கொண்டார். சாந்தமான மனஸுடன், எவ்வித ராகம் முத

லியதுமில்லாமல் இருந்து வந்தார். பிற்பாடு ஆயிரக்கணக்கான வருஷங்கள் கடினமாக தபஸ் செய்து தன்னுடைய பாட்டனார்களைக் கரையேற்றுவதற்காக கங்கையைப் பூமியில் பிரவஹிக்கச் செய்தார்.

## அத்யாயம் - 24

## சூடாலையின் பிரபாவம்.

**வஸிஷ்டர்:** முன்னொரு காலத்தில் மாலவ தேசத்து அரசன் சிகித்வஜன் என்றொருவன் இருந்தான். அவனுடைய பத்னீ ஸௌராஷ்டிர தேசாதிபதியின் புத்திரி சூடாலை யென்பவள். இவ்விருவரும் அந்யோந்யப்ரீதியுடன் வெகுநாள் வாழ்க்கை நடத்தி வந்ததில் கிரமமாக, உடைந்த குடத்திலிருந்து ஜலம் ஒழுகவிடுவது போல, யெவன பருவம் விலகி வந்தது. அப்பொழுது இருவரும் ஸம்ஸாரமாகிற வியாதிக்கு ஆத்மக்ஞானம் தான் மருந்து என்று நிச்சயித்துக்கொண்டு அதிலேயே ஈடுபடவாரம்பித்தார்கள். சூடாலை இடைவிடாமல் சாஸ்திரத்தின் தாத்பர்யத்தையே மனனம் செய்து வரும்போது இவ்விதம் சிந்திக்கலானாள்.

“இந்த மோஹம் யாருக்கு ஏற்பட்டிருக்கிறது? எப்படி ஏற்பட்டது? எங்கிருந்து வந்தது? தேஹமோ ஜடம்; அது நான் அல்லவென்பது நிச்சயம். அப்படியே கர்மேந்திரியங்களும் ஞானேந்திரியங்களும் மனஸினால் ஏவப்படுகிறபடியால் ஜடங்களேதான். மனஸும் புத்தியால் ஏவப்படுவதால் ஜடம்; அகங்காரத்தினால் ஏவப்படுவதால் புத்தியும் ஜடமே; ஜீவனால் உண்டாக்கப்படுவதால் அஹங்காரமும் ஜடம் ஜீவனும் வேறு ஏதோ ஒன்றினால்தான் ஜீவிக்கிறது. இப்பொழுது தெரிந்து விட்டது இந்த ஜீவன் சுத்த சைதன்யத்தினாலேயே ஜீவிக்கிறது. அந்த சைதன்யம் எதினால் ஏவப்படுகிறதென்று பார்ப்போம் அது எவ்வித தோஷமுமில்லாதது. அதுதான் அறியப் படவேண்டியது இந்த ஜீவன் புத்தி மனஸ் இந்திரியங்கள்

யாவும் வாஸ்தவத்தில் இருப்பற்றவைகள், கவனமில்லாததினுல் தோன்றுகின்றன. சைதன்யம் ஒன்றுதான் வாஸ்தவமாய் இருக்கிறது. அதில் நான் என்பது கிடையாது. நிர்மலமாய் எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அதுதான் பிரஹ்மம், பரமாத்மா முதலான பெயர்களால் சொல்லப் படுகிறது.''

இவ்விதம் இவள் பிரதிதினம் தன் ஆத்ம தத்வத்திலேயே ரமிப்பவளாய்த் தன் விவேகத்தின் அப்யாஸத்தினுல் ஆத்மக் ஞானமேற்பட்டு, அந்தப் பெரிய லாபம் கிடைத்ததால் ஏற்பட்ட ஆனந்தம் நிறைந்துள்ள மனஸுள்ளவளாய். முன் இல்லாத விசேஷ சாந்தியுடன் விளங்கினுள். அதைக் கண்டு அவள் பர்த்தா ''மறுபடியும் யௌவனம் வந்து விட்டது போல் மிக்வும் சோபிக்கிருய்'' என்ருர். ''இதெல்லாவற்றையும் விட்டு விட்டு, எல்லாமாயுள்ள வேறென்றை ஆசிரயித்திருக்கிறேன். ஸத்ய மும் அதுதான். அஸத்தியமும் அதுதான், அதினுல்தான் நான் சோபிக்கிறேன். நான் ஸந்தோஷப்படுவதுமில்லை கோபிக் கிறதுமில்லை; அதினுல்தான் சோபிக்கிறேன், ஆகாசம் போலுள்ள ஹ்ருதயத்தில் விளங்கும் ஆத்மாவினிடத்திலேயே எப்பொழுதும் ரமிக்கிறேன்; அதினுல்தான் சோபிக்கிறேன்'' என்ருள். இதனுடைய தாத்பர்யத்தை அறிந்து கொள்ளாமல் இவள் ஏதோ ஸம்பந்தமில்லாமல் பிதற்றுகிருள் என்றே ராஜன் நினைத்துக்கொண்டான். சூடாலை ''கஷ்டம், இவர் ஆத்மா வினிடத்தில் இன்னம் விசிராந்தி அடையவில்லை. நான் சொன் னதைப் புரிந்து கொள்ளவில்லை'' என்று துக்கித்து தன் கார் யத்தைக் கவனித்துக் கொண்டிருந்து விட்டாள்.

அவள் எவ்வித ஆசையுமற்று எப்பொழுதும் திருப்தியுட னிருந்த போதிலும், ஒரு ஸமயம் ஆகாசத்தில் ஸஞ்சரிப்பது முதலானதில் தானுகவே இச்சை ஏற்பட்டது அதற்காக எல்லா போகங்களையும் விட்டு விட்டு. நிர்ஜனமான பிரதேசத்தில் பிராணனைக் கட்டுப்படுத்தி அப்யாஸம் செய்தாள். இதை

யொட்டி அந்த அப்யாஸ விஷயமாய் கொஞ்சம் சொல்கிறேன் கேள், பிராணன் முதலிய வாயுக்கள் விஷயமான அப்யாஸம் ஸித்திகளைக் கொடுக்கும் போஜனம் ஆஸனம் இவைகளின் சுத்தியினலும், நன்கு சாஸ்திரார்த்தங்களைச் சிந்திப்பதினலும், போகங்களை விட்டு விடுவதினுலும், கோபத்தை விடுவதினலும், ஸஜ்ஜனங்களை ஸேவிப்பதினலும், பிராணயாமத்தை நன்கு அப்யஸிப்பதினலும், பிராணன்கள் எல்லாம் எஜமானனிடம் வேலைக்காரன் போல, அறிவாளியின் ஆளுகைக்கு உட்பட்ட வைகளாக ஆகிவிடுகின்றன. அவ்விதம் உட்படுவதினல் ராஜ்யம் முதல் மோக்ஷம் உட்பட எல்லாவித ஸம்பத்துக்களும் எல்லாருக்கும் ஸாதிக்கக் கூடியவைகளே. புழு முதற்கொண்டு எல்லா பிராணிகளிடத்திலும் மர்ம ஸ்தானத்தில் பாம்பு போல் வட்டமிட்டுக்கொண்டு வாயுவுடன் கூட ஒரு உத்தமமான பரிசுத்தமான எப்பொழுதும் சலித்துக் கொண்டிருக்கும் சக்தி இருந்து வருகிறது. அது "குண்டலினீ" என்று சொல்லப்படு கிறது. ஹ்ருதய கோசத்திலுள்ள எல்லா நாடிகளும் அதனுடன் இணைக்கப்பட்டிருக்கின்றன. இதுவே பிராண ஸ்வரூபம்; பிராணனுக மேலே நோக்கியும் அபானனுக கீழ்நோக்கியும் ஸஞ் சரிக்கிறது.

சரீரத்திற்குள் வாயு தடைப்பட்டதேயானல் வியாதி ஏற் படுகிறது. தேஹத்திலேற்படும் துக்கம் "வியாதி" மனஸில் வாஸனையால் ஏற்படும் துக்கம் "ஆதி" என்றும் சொல்வார்கள். கெட்ட அன்னத்தைப் புஜிப்பதினலும், கெட்ட பிரதேசங் களுக்குப் போவதினலும், கெட்ட ஜனங்களுடன் சேர்க்கை யென்ற தோஷத்தினலும், கெட்ட காலங்களில் புஜிப்பதினலும் வெகுபலக்குறைவினலும், வெகுவாக நிறைந்திருப்பதினலும், நாடிகளினுடைய துவாரங்களில் பிராண ஸஞ்சாரம் குறையும் போது வியாதி உண்டாகிறது. மனக்கவலையாகிற "ஆதி" யினல் ஏற்படும் வியாதிகள் அந்த "ஆதி" நிவிருத்தியான வுடன் விலகி விடும். மற்ற வியாதிகள், திரவியம் மந்திரம் சுப மானகர்மாக்கள், வைத்ய சாஸ்திரம் முதலியதில் சொல்லியிருக்

கிறபடி அனுஷ்டித்தால், விலகிவிடும். சித்தம் கலங்கும்போது தேஹமும் கலங்குகிறது. அந்த கலக்கத்தினுல் பிராணவாயுக்கள் ஸமமாயிருக்கும் தன்மையை விட்டு ஸஞ்சரிக்கின்றன. அதினுல் நாடிகளும் தன் நிலேயை இழக்கின்றன. நாடி, பிராணன் இவை மாறி விடுவதால், அன்னம் சரியானபடி ஜீர்ணமாவதில்லே, அல்லது ஜீர்ணமே ஆவதில்லே, அல்லது வெகு ஜீர்ணமாகி விடுகிறது; எல்லாமே கெடுதல்தான. எந்த அன்னம் தடைபட்டு சரீரத்தில் தங்கி விடுகிறதோ அதுவே வியாதியாகி விடுகிறது, இவ்விதம் 'ஆதி'' யால் வியாதியேற்படும். 'ஆதி'' நசித்தால் நசிக்கும். எப்படி கடுக்காய் ஸ்வபாவமாகவே விரேசனத்தை (மலவிஸர்ஜனத்தை) செய்விக்கிறதோ, அப்படியே பாவனேயாலும், மந்திரங்களாலும், ஸத்கர்மாக்களாலும், ஸாதுக்களே ஸேவிப்பதினுலும், மனஸ் நிர்மலமாகி ஆனந்தம் பொங்கும். சித்தம் சுத்தமாயிருந்தால், பிராணவாயுக்கள் கிரமப்படி ஸஞ்சரிக்கும் அதினுல் அன்னம் ஜீர்ணமாகும். அதினுல் வியாதி நசித்து விடும்.

பூரகத்தை அப்யாஸம் செய்து குண்டலினியை நிறப்பி ஸமமாக நிறுத்திக்கொண்டால், அப்பொழுது மேரு பர்வதம் போல் ஸ்திரத்தன்மையும், ஸூக்ஷ்மமாயிருக்கும் தன்மையும் ஏற்படும். பூரகம் செய்து பிராண வாயுவை உள்ளே நிறுத்தி விட்டால், அந்த சரீரம் பூராவும் வியாபிக்கும்; இந்த அப்யாஸத்தினுல் ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் சக்தியேற்படும். நாடிகளே உள்ளே நிறுத்தி ரேசகத்தினுல் சிரஸிற்கு மேலே பன்னிரண்டு அங்குல தூரத்தில் பிரஹ்ம நாடி வழியாக குண்டலினீ சென்று ஒரு முகூர்த்தம் நிலேத்திருக்குமேயானுல், ஆகாசத்தில் ஸஞ்சரிப்பவர்களேப் பார்க்கலாம். வாயிலிருந்து பன்னிரண்டு அங்குல தூரத்தில் பிராணனே நிறுத்தினுல், வேறு சரீரத்தில் பிரவேசிக்க முடியும்.

**ஸ்ரீ ராமர் :** ஸூக்ஷ்மமான துவாரங்களில் நுழைவதற்கோ ஆகாசத்தை நிறப்புவதற்கோ வேண்டிய அணுவாயிருக்கும் தன்மையையும் இந்த சரீரம் எப்படி அடைகிறது?

**வஸிஷ்டர் :** ஸூக்ஷமத்திற்கும் ஸூக்ஷமமாய் சைதன்யம் ஒன்றுதான் வாஸ்தவத்தில் இருக்கிறது. இந்த சரீரம் ஸங்கல்ப மாகிற பிராந்தியினுல் தோன்றும். வாஸ்தவமில்லாத பதார்த்தம். ஆத்ம தத்வமறிந்தவர்கள் அதை எப்படி எப்படி பாவிக்கிருர் களோ அது அப்படியப்படி பார்க்கிருர்கள். ஸத்ய மென்ற பாவனையுடன் பார்த்தால் இது தேஹமாகிறது; அஸத்யமென்று பாவித்தால் இதுவே ஆகாசமென்ருகி விடுகிறது. அணிமாதி ஸித்திகளை யடைவதற்கு இந்த பாவனைதான் உபாயம். யோக ஸாதனங்களை நன்கு அறிந்தவர்களுக்கு இது ஸுலபமேயாகும்.

இவ்விதமாகத் தீவிரமாக அப்யாஸம் செய்து வந்தாள் சூடாலை. ஆனுல் இவள் அவ்வளவு சக்தி வாய்ந்தவளென்பது ராஜனுக்குத் தெரியாது. அவள் பலவிதமாக போதித்தும் அவன் அறிந்து கொள்ளவில்லை. வித்யையின் ஸம்பிரதாயத் தைப் பரிபாலனம் செய்வதற்கு மாத்திரம் உபதேசமே தவிர, சுத்தமான சிஷ்யனுடைய புத்திதான் ஞானத்திற்குக் காரணம்.

**ஸ்ரீ ராமர் :** அப்படியானுல், ஆத்மக் ஞானத்திற்குக் கார ணம் குருவின் உபதேசம் என்பது எப்படி?

**வஸிஷ்டர் :** வெகு எளியவன் ஒருவன் விந்திய பர்வதத்தி லுள்ள அடர்ந்த காட்டில் விழுந்த ஒரு சோழியை (காசை) எடுக்க நினைத்து அங்குள்ள புதர்களெல்லாவற்றிலும் மூன்று நாட்கள் உதறித் உதறித் தேடிப்பார்த்தான். அவனுக்கு சிந்தாமணியே கிடைத்தது. இவ்விதம் தான் குருவின் உப தேசத்தினுல் ஆத்மக்ஞானம் கிடைப்பதும். ஆத்ம தத்வத்தை யடைவதற்கு குருவின் உபதேசம் காரணமில்லை. காரணமில்லை யென்ருல், ஸாக்ஷாத்தாக நேரே காரணமில்லை; ஆனுலும் கிரம மாகக் காரணம் தான்,

## அத்யாயம் - 25

## சிகித்வஜன் தபஸ்.

அரசனுக்கு ஆத்மக்ஞானம் ஏற்படாமல் மிகவும் துக்கத்தி னுல் பீடிக்கப்பட்டவனுய் அதற்குப் பரிஹாரமாக அவன் வெகு

தானங்களைச் செய்தான், தீர்த்தயாத்திரை போய்விட்டு வந்தான். கிருச்சிர சாந்திராயணாதி தபஸ்களை செய்தான் எப்படியும் சோகம் விலகவில்லை. ஒரு நாள் அவன் சூடாலையிடம் "நான் வெகுகாலம் ராஜ்யத்தை யனுபவித்தாய்விட்டது. எவ்வளவோ வைபவங்களை யெல்லாம் பார்த்தாய் விட்டது. இப்பொழுது வைராக்கியத்துடன் காட்டுக்குப்போக நினைக்கிறேன்: ராஜ்யத்தில் விட வனவாஸத்தில்தான் அதிகமாக ஸுகமென்று நினைக்கிறேன். இவ்விஷயத்தில் நீ தடங்கல் செய்யக் கூடாது. நீ இங்கேயிருந்து ராஜ்யத்தைப் பரிபாலித்து வா" என்று சொல்லி விட்டு, நடுநிசியில் வெளிக் கிளம்பிக் கிரமமாய், மந்திர பர்வதத்தின் தாழ்வாரத்திலுள்ள காட்டை அடைந்தான். அங்கே ஒரு குடிசை கட்டிக்கொண்டு தபஸிற்கு வேண்டிய ஸாதனங்களை ஸம்பாதித்து வைத்துக் கொண்டான். காலையில் ஸந்தியா வந்தனாதி ஜபங்களைச் செய்வான். பிறகு புஷ்பங்களை பறிப்பான் மறுபடியும் ஸ்நானம் செய்து தேவதார்ச்சனை செய்வான் பிறகு ஏதோ காட்டில் அகப்படக்கூடிய பழத்தை சாப்பிட்டு விட்டு மறுபடியும் ஜபத்திலேயே ஈடுபடுவான்.

ஊரில் சூடாலை விழித்துப் பார்க்கும் போது பர்த்தாவைக் காணாமல் துக்கப்பட்டுக்கொண்டு, வர்யுமார்க்கமாய்ப் போய் பர்த்தாவைக்கண்டு திரும்பி விட்டாள். "இப்படியே இருக்கட்டும், இப்பொழுது அவரிடம் போகவேண்டாம். அதிக தாமஸமன்னியில் அவர் ஸமீபம் போவேன்" என்று தீர்மானித்துக் கொண்டு, அரசன் ஏதோ காரணத்தினால் வெளியில் போயிருக்கிறாரென்று பிரஜைகளை ஸமாதானப் படுத்திக்கொண்டு, இவளே ராஜ்யத்தைப் பரிபாலித்து வந்தாள்.

இவ்விதம் பதினெட்டு வருஷங்கள் சென்றன. இப்பொழுது பர்த்தாவைப்பார்க்க வேண்டிய காலம் வந்துவிட்டதென்று நினைத்து, அவள் ஆகாச மார்க்கமாய் மந்தரபர்வதம் போய் பர்த்தாவைப் பார்த்தாள். "என்ன ஆச்சர்யமான அசட்டுத் தனம்? சாஸ்த்திரார்த்தம் தெரிந்தவர்கள் கூட இவ்விதம் இருக்

கிறார்களே? இவருக்கு அவசியம் தத்வத்தை போதிக்க வேண்டும். ஆனால் நான் இப்படியே யிருந்து சொன்னால், இவள் பெண், என்பார்யை, என்று அவர் நான் சொல்கிறபடி செய்ய மாட்டார். ஆகையால் ஒரு தாபஸ வேஷத்தைத் தரித்துக் கொண்டு. அவருக்கு உபதேசிக்கிறேன்." என்று தீர்மானித்துக்கொண்டு, தியானத்தினால் பிராஹ்மண குமாரனாக, சுத்தமான யக்ஞோபவீதம் வெண்மையான வஸ்திரம் இவைகளை தரித்துக்கொண்டு, அவர் முன் நின்றாள். இந்த பாலகனைப் பார்த்து அரசன் "தாங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்? நான் இன்று தங்களை தரிசிக்கக் கிடைத்ததால் நந்நாளென்று நினைக்கிறேன்." என்று சொல்லி அர்க்யபாத்யாதி உபசாரங்களைச் செய்தான். பிறகு "ராஜ்யத்தை விட்டு காட்டில் வந்திருக்கிறீரே, உம்முடைய தபஸ நன்கு நிறைவேறி வருகிறதா? என்னைப்பற்றி கேட்டீர், சொல்கிறேன். நாரதர் ஒரு ஸமயம் நதிக்கரையிலிருந்த ஒரு குஹையில் தியானத்திலிருக்கும்போது நதியில் சில ரூபவதிகளான ஸ்திரீகள் விளையாடிக் கொண்டிருப்பதைப்பார்த்தார் அப்பொழுது அவர் மனஸ் விவேகத்தை இழந்தது, சலித்தது, ஆனந்தம் தோன்றிற்று, மனஸ் கலங்கிற்று, பிராணன் அசைவுற்றது, ரேதஸ் நழுவியது.

**ராஜன்:** எல்லாமறிந்து ஜீவன் முக்தராயிருக்கும் அந்த முனிவருக்கு இது எப்படி ஏற்பட்டது?

**பாலன்:** நிர்மலமாய் ஸத்யமாயுள்ள ஸ்வரூபம் ஒரு நிமிஷம் மறந்து போய்விட்டாலும், உடனே பிரபஞ்சம் பற்றிக் கொள்ளும். ஜீவனுக்கு பந்தம் என்பது ஸுகதுக்கத்தினால் ஏற்படும் கலசல்தான்; அது இல்லாதிருத்தலே மோக்ஷம்.

**ராஜன்:** தாங்கள் சொல்வது மிகவும் ஆச்சர்யமாயிருக்கிறது. இதை பின்னால் கேட்டுக் கொள்கிறேன். இப்பொழுது தங்கள் விருத்தாந்தத்தைச் சொல்லுங்கள்.

**பாலன்:** பால் நிறைந்த ஒரு கும்பத்தில் அந்த வீர்யத்தை விட்டார். அது ஒரு மாஸத்திற்குள் எல்லா அங்கங்களும் ஸம்

பூர்ணமாயுள்ளபாலனாக வெளிவந்தது. அதுவே நான் கும்பத்திலிருந்து வந்ததால் எனக்கு "கும்பன்" என்றே பெயர் ஏற்பட்டு விட்டது. என்னுடைய பிதாமஹரான பிரஹ்மதேவர் என்னை எல்லாவித ஞானமுள்ளவனாகச் செய்தார். நான் என்னிஷ்டப்படி ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிறேன் என் கதையிருக்கட்டும். நீர் யார்? இங்கே மலையில் என்ன செய்கிறீர்?

**ராஜன்:** நான் சிகித்வஜன் என்ற அரசன். ஸம்ஸாரத்திலிருந்து பயமடைந்து காட்டில் வஸிக்கிறேன். ராஜ்யத்தை விட்டு இங்கே வந்து இந்தக்கார்யங்களைச் செய்தும் துக்கத்திற்கு மேல் துக்கத்தையே அடைகிறேன்.

**கும்பன்:** ஞானம்தான் உத்தமமான சிரேயஸ் ஸாதனம். அதினால்தான் கைவல்ய மோக்ஷம் கிடைக்கிறது. ஞானத்தில் நோக்கமில்லாதவர்களுக்கு கர்மா கதியாகும். ஆத்மக் ஞானமில்லாதவன் வாஸனைகளை நிறைந்தவனாயிருப்பதால், அவனுக்குக் கர்மாக்கள் பிரயோஜனமாகும். ஞானிக்கோ வாஸனைகளெல்லாம் நசித்து விட்டபடியால், எல்லா கர்மாக்களும் பிரயோஜன மற்றவை. எல்லாம் பிரஹ்மமே என்ற பாவனையால் எவனுக்கு அக்ஞானம் விலகி விடுகிறதோ அந்த அறிவாளிக்கு வாஸனையேற்படாது, அறிந்தவனுக்குக் கானலில் ஜலம் என்ற எண்ணம் ஏற்படாதது போல, ஸம்ஸாரத்திலிருந்து கடத்தி விடுவது ஞானம். நீர் ஏன் இன்னம் அக்ஞான தசையிலேயே இருக்கிறீர்? நான் யார் இந்த உலகம் எப்படி ஏற்பட்டது, எப்படி மறையும், பந்தம் எப்படி வந்தது, மோக்ஷம் எப்படிக்கிடைக்கும்; என்ற கேள்விகளைக் கேட்டுக் கொண்டு கரை கடந்தவர்களுடைய பாதகமலங்களை நீர் ஏன் ஸேவிக்காமலிருக்கிறீர்?

**ராஜன்:** இப்பொழுது தாங்களே எனக்கு அறிவூட்டி விட்டீர்கள். தாங்களே என்மித்ரன், குரு, பிதா, எதை மிகவும் உத்தமமாக தாங்கள் அறிந்திருக்கிறீர்களோ, எதை அறிந்

தால் பிறகு சோகமே கிடையாதோ, எதினால் நான் நித்யமான ஸுகத்தையடைவேனோ, அந்த பிரஹ்மத்தைத் தாங்களே எனக்கு உபதேசிக்க வேண்டுகிறேன.

**கும்பன்:** நான் சொல்லும் வார்த்தையை நீர் எடுத்துக் கொள்வதானால் சொல்கிறேன். இல்லையானால் அவ்வளவு சொன்னாலும் வீண்தான். எல்லா சாஸ்திரங்களையும் அறிந்த முனிவரொருவர் எல்லையற்ற பிரயத்னம் செய்து அடைய வேண்டிய சிந்தாமணியை அடைவதற்கு வெகு பிரயத்னம் செய்தார் அவர் கைக்கு எட்டும்படியான தூரத்தில் அது இருப்பதைக் கண்டார் ஆனால் "நான் வெகு அல்பமான தபஸ் செய்தவன். ஒரு யோக்கியதையுமற்ற மனிதன். எனக்கு ஸித்திகள் எப்படி ஏற்படும்." என்று ஸந்தேகம் வந்து விட்ட படியால், அந்த மணியை எடுத்துக்கொள்ளவில்லை. அந்த மணியும் மறைந்து விட்டது. பிறகு அவர் மறுபடியும் விசேஷப் பிரயத்னம் செய்ததினால் பள பளவென்று ஒரு கண்ணாடிக்கல் தென்பட்டது அதை எடுத்துக்கொண்டு "இது இருப்பதினால், இதிலிருந்தே எல்லாம் கிடைக்கும். வேறுதனம் எதற்கு." என்று தன்னிடமிருந்த எல்லா ஸம்பத்தையும் விட்டு விட்டு ஒரு சூன்யமான காட்டுக்குப்போய்ச் சேர்ந்தார். அங்கே அவர் அந்த கல்லினால் பலவித ஆபத்துக்களையே அடைந்தார்.

விந்திய மலையிலுள்ள காட்டில் ஒரு பெரிய முரட்டு யானை இருந்தது. அதையொரு ஸமயம் ஒரு யானைப்பாகன் பிடித்து இரும்பு சங்கிலிகளால் கட்டி விட்டான். அது மிகவும் சிரமப் பட்டு தன் தந்தங்களினாலேயே அந்த சங்கிலியை அறுத்து விட்டது. அதைப் பார்த்து அவன் மறுபடியும் யானையை வசப் படுத்தக் கருதி ஒரு பனை மரத்திலேறி அங்கிருந்து அதன் தலையில் குதித்தான், ஆனால் கொஞ்சம் பிசகி விட்டபடியாய் தலையில் குதிக்காமல் தரையில் விழுந்து விட்டான் அப்படி விழுந்திருந்த யானைப்பாகனைப்பார்த்து, யானைக்குக் கருணை ஏற்பட்டது, மிருகங்களில் கூட உத்தம குணமிருப்பவர்கள் இருப்பார்களல்லவா? தயவினால் அவனை ஒன்றும் செய்யாமல் தன்

ணிருப்பிடம் போய்ச் சேர்ந்தது. பிற்பாடு அவன் எழுந்திருந்து மறுபடியும் அதைப் பிடிப்பதற்காக அக்காட்டில் ஒரு பெரிய குழி வெட்டினான். இது தெரியாமல் அந்தப்பக்கம் போன அந்த யானை குழியில் விழுந்து மறுபடியும் பிடிபட்டு கட்டுக்குள்ளாகியது. அப்பொழுதே அந்த யானைப்பாகனை அது கொன்றிருந்தால், குழியில் விழுந்து கட்டுப் பட்டிருக்கும் துக்கம் அதற்கு ஏற்பட்டிராது

**ராஜன்:** இந்தக் கதைகளின் தாத்பர்யம் என்ன?

**கும்பன்:** அந்த ரத்னம் தேடினவர் நீர்தான். எல்லாவற்றையும் விட்டு விடுவது என்பது எதுவோ அதுவே சிந்தாமணி. நீர் எல்லாவற்றையும் விட்டு விட்டு நான் என்ற எண்ணத்தை மிச்சம் வைத்துக் கொண்டீர். அதையும் விட்டு பரிபூர்ணமான தியாகம் ஏற்படுவதற்கு முன், தபஸ் என்ற ஒரு கல்லைப்பார்த்து விட்டீர். அதையே சிந்தாமணியென்று நினைத்து விட்டீர். உமக்கு எவ்வித பிரயோஜனமும் ஏற்படவில்லை, சிரமம்தான் மிச்சம்.

விந்திய பர்வதத்திலுள்ள யானை என்றதும் இவ்வுலகில் நீர் தான். யாணைப்பாகன் என்றது உம்முடைய அக்ஞானம். ஆசாபாசங்களே சங்கிலி. வைராக்கியம், விவேகம் என்ற இரண்டு தந்தங்களைக்கொண்டு நீர் எல்லா போகங்களையும் விடுவதினால் அந்த சங்கிலியை அறுத்து விட்டீர். நீர் உம்ராஜ்யத்தை விட்டு விலகும்போது உம்மை வசமாக்க முடியாமல் அக்ஞானம் கீழே விழுந்து விட்டது. ஆனால் சாகவில்லை, அந்த ஸமயத்தில் நீர் அதை நசுக்கியிருந்தீரேயானால் அது மறுபடியும் உம்மை ஹிம்ஸித்திராது. நீர் அப்படிச் செய்யத் தவறினதால் அது உம்மை பிரபஞ்சமாகிற குழியில் தள்ளி விட்டது. மிச்சம் வைக்காமல் எல்லாவற்றையும் தியாகம் செய்யத் தவறி விட்டீரே; ஏன்?

## அத்யாயம் - 26.

## ஸர்வத் தியாகம்.

**ராஜன்:** ராஜ்யத்தை விட்டேன், வீட்டை விட்டேன், தேசத்தை விட்டேன், மனைவி மக்களை விட்டேன். நான் எல்லாவற்றையும் விட்டேனல்லவா? இவை "எல்லாம்" என்று ஆகாது, என்றால், இந்த வனத்தையும் விட்டு விடுகிறேன்

**கும்பன்:** இதுவும் உன்னுடைய "எல்லாம்" ஆகாது. எல்லாம் விட்டதாக எப்படி ஆகும்.

**ராஜன்:** இதுவும் "எல்லாம்" ஆகாது என்றால், இங்குள்ள பாத்திரங்கள் முதலானதுகளையும் விட்டு விடுகிறேன்.

என்று சொல்லி அவைகளை எரித்து விட்டு, வெகு ஸந்தோஷமாய்,ராஜன்! இப்பொழுது எல்லாம் விட்டவனாக ஆகிவிட்டேன். பந்தத்திற்கு காரணமாயுள்ள பதார்த்தங்கள் எவ்வளவுக்கெவ்வளவு குறைகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு மனஸ் ஸந்தோஷத்தை அடைகிறது. திகம்பரனாக ஆகி விடுகிறேன். அப்புறம் என்ன மிச்சமிருக்கும்?

**கும்பன்:** அப்படியும் "எல்லாம்" விட்டதாக ஆகாது, வீணாக அபிநயம் செய்யக் கூடாது. இதைக் கேட்டு சற்று ஆலோசித்து,

**ராஜன்:!,** "இந்த மாம்ஸ மயம் தேஹம் மிஞ்சியிருக்கிறது இதையும் நாசம் செய்து விட்டு எல்லாம் விட்டவனாக ஆகிறேன்." என்று சொல்லிக்கொண்டு எழுந்தான்.

**கும்பன்:** நீர் சரீரத்தை விட்டாலும்கூட, எல்லாம் விட்டவராக ஆகமாட்டீர்,எதினால் இந்த சரீரம் ஆட்டப்படுகிறதோ,எது பிறவிக்கும் கர்மாக்களுக்கும் காரணமோ, அதை விட்டு விடுவீரேயானால் நீர் பெரிய தியாகிதான்.

**ராஜன்:** எதினுல் இந்த சரீரம் ஆட்டி வைக்கப்படுகிறது? பிறவிக்கும் கர்மாக்களுக்கும் காரணமாயிருப்பது எது? எதை விட்டு விட்டால் எல்லாம் விட்டு விட்டதாக ஆகும்? அதைச் சொல்லுங்கள்.

**கும்பன்:** சித்தம் தான் இந்த உலகம், அதுவே பந்தம் அதை விட்டு விட்டால் எல்லாம் விட்டதாக ஆகும். அதுதான் பிறவிக்கும் கர்மாக்களுக்கும் பீஜம். காற்றினுல் மரம் அசைவதுபோல, சித்தத்தினுல் இந்த சரீரம் சலிக்கிறது. தியாகத்தின் ஸ்வரூபமறிந்தவர்கள் சித்தத்தின் தியாகத்தைத்தான் ஸர்வதியாகமாகக் கருதுகிறுர்கள்.

**ராஜன்:** அப்படியானுல் சித்தத்தின் ஸ்வரூபத்தையும் அதை விட்டு விடுவதையும் பற்றி சொல்ல வேண்டும்.

**கும்பன்:** வாஸனைதான் சித்தத்தின் ஸ்வரூபம். எல்லா வித அனர்த்தங்களுக்கும் மூலகாரணமாயிருக்கிற "நான்" என்று கிளம்புவது எதுவோ அதுவே சித்தமாகிற விருக்ஷத்தின் பீஜம் இதிலிருந்து முதலில் வெளிவருவது நிச்சய ஸ்வரூபமாயுள்ள புத்தி என்ற துளிர் இதுவே தடித்து ஸங்கல்பரூபமாக ஆகும்போது சித்தம், சேதஸ், மனஸ் எனப்படுகிறது. இந்த விருக்ஷத்தின் கிளைகள் பலவிதமாயுள்ள வாஸனைகள், அவைகளில் பலவித ஸுக துக்க ரூபமான பழங்கள் பழுக்கின்றன. கிளைகளை மாத்திரம் வெட்டியெறிவது போதாது, வேரையே நாசம் செய்வது தான் முக்கியம். அந்த பீஜத்தை நாசம் செய்ய வாய்மையுள்ளது ஆத்மதத்வ விசாரம்தான்,

**ராஜன்:** நானும் தேஹம் முதலானது நான் அல்லவென்று வெகுவாக விசாரித்துப் பார்த்திருக்கிறேன். ஆனுல் இந்த சித்த விருக்ஷத்திற்கு பீஜமாகத்தாங்கள் சொன்ன, ஹ்ருதயத்திலுள்ள, "நான்" என்ற பாவனையை விட்டு விட முடியவில்லை. தள்ளத்தள்ள மறுபடியும் வந்து கொண்டேயிருக்கிறது. அதைத் தள்ள முடியாததினுல்தான் நான் மிகவும் சிரமப்படு

கிறேன், "நான்" என்ற இந்த தோஷத்திற்குக் காரணம் "அறிதல்" என்பது என்பதை உணர்கிறேன் இது எப்படி அடங்குமென்பதை என்க்குச் சொல்ல வேண்டுகிறேன், சைதன்யம் அறியப்படுவதை நோக்கினுல் இந்த "நான்" துக்கத்தைக் கொடுக்க ஸித்தமாகிறது. துக்கமற்றிருக்க வேண்டுமாணுல் அறியப்படுவது அடங்க வேண்டும், அது எப்படி?

**கும்பன்:** நன்கு காரணங்களே அறிந்திருக்கிறீர், "அறிதல்" என்பதற்குக் காரணம் என்ன?

**ராஜன்:** தேஹம் முதலானதினுல் வஸ்து இருப்பதினுல் அறிதல் ஏற்படுகிறது,

**கும்பன்:** தேஹம் முதலியது இருக்குமாணுல் வஸ்துவிற்கு இருப்பு உண்டு,

**ராஜன்:** எப்பொழுதும் அனுபவிக்கப்பட்டுக் கொண்டேயிருக்கிற தேஹம் இல்லே யென்பது எப்படி?

**கும்பன்:** எது காரணமன்னியில் இருப்பதாகத் தோன்றுகிறதோ, அது மித்யை, கயிற்றில் தோன்றும் பாம்பு போல

**ராஜன்:** ஆதி பிதாமஹரான பிரஹ்மா ஜகத்திற்குக் காரணம் அல்லவா?

**கும்பன்:** ஸ்ருஷ்டிக்கு முன்னுல் தனித்து சாந்தமாயுள்ள பரப் பிரஹ்மம் ஒன்றுதான் இருந்தது. இரண்டாவது விஷயமான தோற்றம் அதற்குக் கிடையாததினுல் பிரஹ்மாவுக்குக் காரணம் கிடையாது.

**ராஜன்:** அப்படியாணுல் அந்த பரப்பிரஹ்மமே பிரஹ்மாவுக்குக் காரணமாகுமே? காரணமில்லேயென்று நான் எப்படி தெரிந்து கொள்கிறது.

**கும்பன்:** ஸ்ருஷ்டிக்கு முன்பு இரண்டாவதற்றதாக, ஆதியந்தமற்றதாக, குறைவற்றதாக இருக்கும் பிரஹ்மம் எப்படி,

யாருக்காக, எதினால், எப்பொழுது, கர்த்தா (செயலுள்ளது), போக்தா (அனுபவிப்பது) என்று ஆக முடியும்? சுத்த சைதன்யத்தினால் கல்பிக்கப்பட்ட பிரஹ்மாவும் சைதன்யம் மாத்திரம் தான் என்பது நிச்சயம் எதை மாத்திரம் கொண்டு எது ஸ்ருஷ்டிக்கப்படுகிறதோ, அது அதுவேதான் என்பதுதான் வாஸ்தவம் ஆகையால் இந்த உலகம் தனித்து செய்யப்பட்டதில்லை. ஆகையால் தனித்து இருப்பும் கிடையாது.

இவ்விதம் சொன்னதும் ராஜன் இதை நன்கு பாவனை செய்து தன்னுடைய ஆத்ம நிலையில் இருந்து விட்டு விழித்துக் கொண்டு 'தங்கள் பிரஸாதத்தினால் தன்நிலையை அடைந்து விட்டேன் தத்வமறிந்தவர்களுடைய ஸங்கம் உத்தமமான பலனைக் கொடுக்கிறது இது முன்னாலேயே என்னால் ஏன் அடையப்படவில்லை?" என்று கேட்டான்.

**கும்பன்:** போகத்திலுள்ள ஆசைகளையெல்லாம் விட்டு மனஸ் அடங்கி விடும்போது தோஷங்களெல்லாம் போய் விடுகிறபடியால் குருவின் உபதேசங்கள் ஸபலமாகின்றன. நீர் இப்பொழுது தத்வத்தை அறிந்து விட்டீர், பந்தத்திலிருந்து விடுபட்டு விட்டீர், நிர்மலமாய் தன் ஸ்வரூபத்திலேயே நிலைத்திரும்,

**ராஜன்:** அறிந்தவர்களுடைய சித்தம் எப்படியிருக்கும்? அவர்கள் உலகத்தில் எப்படியிருப்பார்கள்?

**கும்பன்:** மறுபடியும் பிறவியைக் கொடுக்கக்கூடிய கூடிய தடித்த வாஸனை எதுவோ அது சித்தம் எனறு சொல்லப்படுகிறது. அது ஆத்ம தத்வமறிந்தவனுக்குக் கிடையாது மனஸில் அசைவு அசைவற்றது இரண்டையும் ஒன்றாகச்செய்து அந்த சாசுவதமான ஒன்றாகிய நிலையிலேயே இருக்க வேண்டும்.

**ராஜன்:** மனஸில் அசைவு, அசைவற்றது இரண்டும் ஒன்றுவது எப்படி?

**கும்பன்:** உலகம் சைதன்யத்தின் அசைவு மாத்திரம்தான் நன்கு ஞானம் ஏற்பட்டால் அது மறைந்து விடும். அந்த

ஞானம் சாஸ்திரம் நல்லோர்களின் சேர்க்கையாலும் இடைவிடாது அப்யாஸம் செய்வதாலும் மனஸ் நிர்மலமாகும் போது தானுகவே ஏற்படும். அந்த பரிசுத்தமான நிலையை எப்பொழுதும் ரக்ஷித்து வரவேண்டும்.

இவ்விதம் சொல்லிவிட்டு கும்பன் புறப்பட்டுப் போனதும் ராஜன் வெகு ஆச்சர்யத்துடன் தனக்கு ஏற்பட்டுள்ள சுத்தமான சாந்தமான குளிர்ந்த நிலையை நினைத்து எவ்வித ஆசிரயமுமற்றதான நிர்விகல்ப ஸமாதியில் மலைபோல் அசைவற்று நின்று விட்டான்.

சூடாலை வழக்கம்போல் ராஜதானிக்குச் சென்று மூன்று நாட்கள் ராஜ்யகார்யங்களை நிர்வாஹம் செய்து விட்டு மறுபடியும் கும்பன் என்ற ரூபத்துடன் திரும்பி வந்தாள். நிர்விகல்ப ஸமாதியிலிருந்த ராஜனை தொட்டுப் பார்த்து அவர் ஹ்ருதயத்தில் எழுப்புவதற்குப் போதுமான அறிவு மிச்சமிருப்பதை உணர்ந்தாள்.

**ஸ்ரீராமர்:** சித்தமடங்கி கட்டை மண்கட்டிபோலிருக்கிற தியானத்தில் ஈடுபட்டிருப்பவருடைய ஹ்ருதயத்தில் அறிவு எப்படி மிச்சமிருக்கும்?

**வஸிஷ்டர்:** பீஜத்திற்குள்ளே புஷ்பம் பழம் எல்லாம் இருப்பது போல ஞானியின் ஹ்ருதயத்திலும் எழுப்புவதற்குப் போதுமான அறிவின் மிச்சம் வெகு ஸூக்ஷ்மமாக இருக்கும், சைதன்யம் சலிக்காமல் சரீரம் அசைவற்றிருக்கும்போது வாடாது நீ கேட்டதை சொல்லிவிட்டேன். மேலால் நடந்ததைக் கேள். சூடாலை தன்னுடைய தேஹத்தை விட்டு சைதன்ய நிலையில் நின்று ராஜனுடைய சித்தத்தில் அசைவை ஏற்படுத்தி விட்டு, மறுபடியும் தன் தேஹத்திற்கு வந்து விட்டாள். பிறகு கும்பன் என்ற ரூபத்துடனிருந்து கொண்டு ஸாமகானம் செய்தாள். அந்த சப்தத்தைக்கேட்டு விழித்துக் கொண்ட ராஜன் தன்முன் நிற்கும் கும்பனைக்கண்டான்.

**ராஜன்:** நான் மிகவும் தன்யன்.. மறுபடியும் வந்து எனக்குத் தாங்கள் தர்சனம் கொடுக்கிறீர்களே

**கும்பன்:** உம்மை விட்டு நான் சென்றது முதல் உம் ஞாபகமாகவே இருந்தேன்.

**ராஜன்:** என்னிடம் தாங்கள் வர நினைத்தது என்னுடைய பாக்யமேயாகும்.

**கும்பன்:** ஆனந்தமாயுள்ள மேலான நிலையில் விசிராந்தியை அடைந்தீரா? வேற்றுமையால் ஏற்படும் இந்த துக்கத்தையெல்லாம் விட்டு விட்டீரா?

**ராஜன்:** தங்கள் பிரஸாதத்தினுல் அடைய வேண்டியது அடையப்பட்டு விட்டது. வெகு திருப்தியை அடைந்து விட்டேன். கவலையற்றிருக்கிறேன்.

இவ்விதம் இருவரும் ஒரேவித மனோபாவமுள்ளவர்களாக உத்ஸாஹமாய் இருந்து வந்தார்கள்.

## அத்யாயம் - 27.

## சிகித்வஜன் பரீக்ஷை

**வஸிஷ்டர்:** இவ்விதம் கொஞ்ச நாள் இருந்து விட்டு சூடாலை ராஜனிடம் சொல்லிக்கொண்டு, கும்பரூபத்தை விட்டு ஊர் சென்று ராஜகார்யங்களை கவனித்து விட்டு, மறுபடியும் கும்பரூபத்துடன் வந்து சேர்ந்தாள்.. கும்பன் ஏதோ கவலையுற்ற முகத்துடனிருப்பதைக் கண்ட ராஜன் "தங்கள் மனஸ் சரியயில்லை போலத் தோன்றுகிறதே! அறிந்தவர்களுக்குக் கவலையிருக்க நியாயமில்லையே?" என்று கேட்டான்.

**கும்பன்:** சரீரம் இருக்கும்வரை அந்தந்த அவஸ்தைகளில் எப்படியிருக்க வேண்டுமோ, அப்படி ஸமநிலையுடன் கூடவே இல்லையானுல், அவர்கள் தத்வமறிந்தவரல்ல, ஏமாற்றுகிறவர்

கள், பிரஹ்மா முதலானவர்கள் தத்வமறிந்தவர்களாயிருந்தும் தேஹத்தில் அவஸ்தைக்குத் தக்கபடியே யிருந்து வருகிறார்கள். எனக்கு இப்பொழுது ஸ்வர்க்கத்தில் ஏற்பட்ட ஸம்பவத்தைச் சொல்கிறேன் ஸ்நேகிதர்களிடம் துக்கத்தைச் சொல்லிக் கொண்டால் கொஞ்சம் குறையும் நான் இங்கிருந்து புறப் பட்டுப் போனவுடன் சில நாட்கள் ஸ்வர்க்கத்தில் இருந்து விட்டு இங்கே வருவதற்காக ஆகாச மார்க்கத்தில் வந்து கெண்டிருந் தேன். அப்பொழுது அங்கேயே மேகங்களுக்கு மத்தியில் வெகு வேகமாய் வந்து கொண்டிருந்த துர்வாஸ முனிவரைக் கண்டேன், உடனே அவரை நமஸ்கரித்து விட்டு விளையாட் டாக "தாங்கள் மேகமத்தியில் வருவது கருப்பு உடைதரித்த ஸ்திரீ மாதிரி இருக்கிறது" என்று சொல்லி விட்டேன் அவருக்கு உடனே கோபம் வந்து "இனி ராத்திரி வேளையில் ஸ்திரீயாகவே இருப்பாய்' எனறு சபித்து விட்டார். மிகவும் கலங்கிய மனஸுடன் இங்கே வந்து சேர்ந்தேன். பகல் முடிந் தவுடன் ஸ்திரீயாக எப்படி நாட்களைக் கடத்துவது என்று தெரிய வில்லை.

ராஜன்: கவலைப்படுவதில் எவ்விதப் பிரயோசனமும் கிடை யாது. சரீரத்திற்கு எது வந்தாலும் வரட்டும், ஆத்மாவைப் பாதிக்காது.

அன்று ஸாயங்காலம் இருவரும் ஸந்தியா வந்தனம் செய்து விட்டு நிற்கும்போது கும்பன் சிகித்வஜரைப் பார்த்து, "நான் விழுவதுபோல் தோன்றுகிறது, கரைந்து விடுவது போல் தோன்றுகிறது. ஹே ராஜன், பாரும் சிரஸில் கேசங்கள் வெகு நீளமாய் வளர்கின்றன என் மார்பில் ஸ்தனங்கள் தோன்றி விட்டன. வஸ்திரம் கணைக்கால் வரை நீண்டு விட்டது," என் றான், அதற்கு ராஜன் "அவசியம் ஏற்பட்டே தீர வேண்டிய விஷயங்களில் கவலை வைத்துக்கொள்ளக் கூடாது" என்று ஆசுவாஸம் செய்தான். இப்படிய பிரதி தினம் பகல் வேளை களில் கும்பனாகவும், ராத்திரிகளில் ஸ்திரீயாகவும் இருந்து வந்தாள்.

இவ்விதம் சில நாட்கள் சென்ற பிறகு ஒரு நாள் கும்பன் என்ற ரூபத்திலிருந்த சூடாலை பர்த்தாவைப் பார்த்து, "பிரதி தினம் இரவில் நான் பெண்ணாக மாறிவிடுகிறேன். அதையும் முறைப்படி சபலமாக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். நீர்தான் என்னை விவாஹம் செய்து கொண்டு எனக்கு பதியாக இருக்க வேண்டும்" என்றாள் அதற்கு ராஜன் "இவ்விதம் செய்வதால் எனக்கு நல்லதோ கெட்டதோ எதுவுமில்லை. உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள்" என்றான். "அப்படியானால் இன்றைக்கே நல்ல நாளாக இருக்கிறது" என்று அவள் சொன்னதின் பேரில் இருவரும் எழுந்து அன்று ராத்திரி நடக்க வேண்டிய விவாஹத்திற்கு வேண்டிய சந்தனம், புஷ்பம் ஸமித் முதலியவைகளை சேகரித்தார்கள். ஸாயம் ஸந்த்யா வந்தன கர்மா முடிந்ததும் கும்பன் பெண்ணாக மாறிவிட்டான். உடனே அக்னியை வளர்த்து விதிப்படி ராஜன் அவளை பாணிக்கிரஹணம் செய்து கொண்டான். இவ்விதமாக விவாஹம் நடந்து பிரியமான தம்பதிகளாக இருந்து வந்தார்கள். சூடாலை மூன்று நாட்கள் ஊருக்குப் போய் ராஜ்ய காரியங்களை கவனித்துக் கொண்டும் வந்தாள்.

இவ்விதமாக மாஸங்கள் சென்றும் ராஜனுடைய மனஸ் கொஞ்சமேனும் கலங்காததைக் கண்டு, போகங்களைக் கொடுத்துப் பார்ப்போம் என்று நினைத்து இந்திரனை தோற்றுவித்தாள். இந்திரன் ராஜனிடம் "ஸ்வர்க்கத்திற்குப் போவோம் அங்குள்ளவர் எல்லாரும் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். கல்பம் முடியும் வரை பலவித போகங்களை அனுபவிக்கலாம்" என்று சொன்னான். "எனக்கு ஸ்வர்க்கம் எங்கேயும் இருக்கிறது. இதற்காக வேறு இடம் போக எனக்கு அவசியமில்லை" என்று ராஜன் சொல்லிவிட்டான்.

"போகத்தில் ஆசை இவருக்கு இல்லை. கோபத்தினால் மனஸ் கலங்குகிறதா?" என்று பார்க்க நினைத்து, மாயையினால் வேறு ஒரு புருஷனைக் கல்பித்து அவனை தான் ஆலிங்கனம்

செய்து கொண்டு புஷ்பசயனத்திலிருப்பதாகக் காட்டினுள். அதைப் பார்த்து விட்டு அவன் "பயப்படாதீர்கள்" என்று சொல்லிவிட்டு, அப்புரம் போய் விட்டான். சற்று நேரம் சென்று இவளே தலைகுனிந்த வண்ணம் அவன் முன்னால் போய் நின்ருள், அப்பொழுது அவன் "உன்னுடைய காதலனை ஸந்தோஷப்படுத்த அங்கேயே போ. மூவுலகிலும் அந்யோன்யம் ஸ்நேகம் ஏற்படுவது வெகு துர்பலம். அதற்கு விக்னம் செய்யாதே" என்று ஸமநிலையிலிருந்து கொஞ்சமேனும் நழுவாமல் சொன்னுன்.

இதைக்கேட்ட சூடாலை "என்ன ஆச்சர்யம்! உத்தமமான ஸமநிலையை அடைந்திருக்கிருரே! இனி இவரிடம் நான் செய்ததை சொல்லி விடவேண்டும்" என்று தீர்மானித்துக் கொண்டு தன் சொந்த ரூபத்துடன் முன் நின்ருள் அதைப் பார்த்த ராஜன் வெகு ஆச்சர்யப்பட்டு "யாரம்மா நீ? எங்கிருந்து வருகிருய்? எதற்காக இங்கே நிற்கிருய்? உன்னுடைய அங்கங்கள், பேச்சு, புன்சிரிப்பு முதலியதைப் பார்க்கும்போது, என் பார்யை சூடாலை மாதிரி காணப்படுகிருயே" என்ருர். அதற்கு சூடாலை 'ஹே பிரபோ, அப்படியே தான். நான் சூடாலைதான். ஸந்தேஹிக்க வேண்டாம். தங்களுக்கு தத்வத்தை போதிப்பதற்காக கும்பனுகவும் பெண்ணுகவும் சரீரத்தை நிர்மாணம் செய்தேன். தாங்கள் இப்பொழுது தத்வத்தை அறிந்து விட்டீர்கள், தியானத்தினுல் எல்லாவற்றையும் நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்" என்ருள். அப்படியே அவன் தியானத்தினுல் பார்க்கும் போது, தன் ராஜ்யத்தை விட்டுப் புறப்பட்டது முதல் இப்பொழுது சூடாலையைப் பார்ப்பது பர்யந்தம் எல்லாச்செய்திகளையும் அறிந்து கொண்டான்.

பிறகு ஸமாதியிலிருந்து எழுந்து சூடாலையிடம் "தாண்டுவதற்கு மிகவும் கடினமான இந்த ஸம்ஸாரமாகின்ற இருட்டை தாண்டிவிடும்படி யுக்தி செய்து எனக்கு இந்த பேருபகாரத்தைச் செய்தாயே, இதற்கு ஸமானம் எது உண்டு? இந்த உபகாரத்திற்கு பதில் நான் எப்படி செய்ய முடியும்?" என்ருன். அதற்கு

அவள் 'பிரயோஜனமற்ற கர்மாக்களில் தாங்கள் ஈடுபட்டு சிரமப்படுவதை நினைக்க நினைக்க எனக்கு துக்கம் ஏற்பட்டது. தங்களுக்கு ஞானம் ஏற்பட்டபடியால் எனக்கு அந்த துக்கம் நிவிருத்தியாகி விட்டது. ஆகையால் என் பிரயத்தினம் எல்லாம் எனக்காகவேதான். இதில் எனக்கு என்ன கௌரவம்?' என்றாள்.

"எனக்கு ஆசை எதுவுமில்லை. இது, அது, என்பதும் கிடையாது. எது இருக்கிறதோ அதாகவே நான் இருக்கிறேன். அது எவ்விதமென்று சொல்லவும் என்னால் முடியாது. உன்னுடைய பிரஸாதத்தினால் நான் ஸம்ஸாரக்கடலை தாண்டி விட்டேன்" என்று மறுபடியும் ராஜன் சொல்ல; இவள் "ஹே, பிரபோ, இப்பொழுது தங்களுக்கு எது ருசிக்கிறது என்று சொல்ல வேண்டும்" என்றாள். அதற்கு அவன் "எனக்கு வேண்டாமென்பதும் கிடையாது, வேண்டுமென்பதும் கிடையாது. நான் எதையும் மெச்சுவதுமில்லை, எதையும் நிந்திப்பதுமில்லை. உன்னிஷ்டம் எப்படியோ அவ்விதம் செய்" என்றான்.

"அப்படியானால், என் அபிப்பிராயத்தைச் சொல்கிறேன்; கேளுங்கள். நமக்கு ஏற்பட்டுள்ள ராஜ்யத்திலேயே சிலகாலம் கழித்து விட்டு பிறகு தேஹமற்ற நிலையை அடைவோம்" என்று அவள் சொன்னதும், ராஜன் "அதுவும் யுக்தம்தான், அப்படியே செய்வோம்" என்றான். உடனே சூடாலை எழுந்து மனஸினால் ஒரு ரத்ன கும்பத்தைக் கல்பித்து ஸங்கல்பத்தினாலேயே ஏழு ஸமுத்திரங்களின் தீர்த்தங்களால் அதை நிரப்பி; ராஜனை கிழக்கு முகமாய் உட்கார்த்தி, அந்த கும்ப தீர்தத்தினால் ஸ்வாராஜ்யத்தில் அபிஷேகம் செய்தாள். பிறகு ராஜனும் அவளையும் ஆஸனத்தில் இருக்கச் செய்து அவளுக்கும் அபிஷேகம் செய்தான்.

பிறகு ஸங்கல்ப மாத்திரத்தினால் அந்த வனம் ஸைன்யத்தினால் நிரம்பியது. ஒரு உத்தமமான யானை பேரில் இந்த தம்பதிகள் ஏறிக்கொண்டு புறப்பட்டு தாமஸமன்னியில் தன்

நகரம் போய்ச் சேர்ந்தார்கள். அங்கு பிரஜைகளால் மிகவும் உத்ஸாகத்துடன் வாத்ய கோஷங்களுடன் எதிர்கொண்டு அழைக்கப்பட்டு நகரத்தில் பிரவேசித்தார்கள்.

அங்கு சூடாலையுடன் கூட பதினாயிர வருஷகாலம் ராஜ்யம் நடத்திவிட்டு பிறகு தேஹத்தை உதறிவிட்டு மறுபிறப்பில்லாத நிலையை அடைந்தான் சிகித்வஜ மஹாராஜன்.

## அத்யாயம் - 28.

## அகங்ஹாரம் விடுதல்.

**வஸிஷ்டர் :** சிகித்வஜர் எப்படி கிரமமாக ஞானமடைந்தாரோ அப்படியே பிரஹஸ்பதியின் குமாரன் கசனும் அடைந்தான். பால்ய பருவம் தாண்டினது முதலே ஸம்ஸாரத்திலிருந்து விடுதலையடைவதில் நோக்கமுள்ளவனாய் அதற்கு என்ன உபாயம் என்று தகப்பனாரைக் கேட்டதில், அவர் எல்லாவற்றையும் விட்டு விடுவதுதான் உபாயம்'' என்று சொன்னார். அப்படியே கசன் எல்லாவற்றையும் விட்டு விட்டு ஏகாந்தமாயுள்ள ஒரு வனம் சென்றான் அதினால் பிரஹஸ்பதி எவ்வித கவலையையும் அடையவில்லை. சேர்க்கையாலோ, பிரிவாலோ பெரியோர்கள் கலங்கமாட்டார்களல்லவா. ஒரு ஸமயம் பிதாவைக் கண்டு நமஸ்கரித்து ''நான் எல்லாவற்றையும் விட்டு இன்று எட்டு வருஷமாகிறது. ஆனாலும் சாந்தி ஏற்படவில்லையே; ஏன்?'' என்று கேட்டான் ''எல்லாவற்றையும் விடு'' என்று சொல்லி விட்டு அவர் போய்விட்டார். அவன் உடனே மரவுரி முதலியதையும் எறிந்து விட்டான். அதன் பிறகு மூன்று வருஷங்கள் சென்று மறுபடியும் கண்டு 'துணியையும் எறிந்து விட்டேன், சாந்தி யேற்படவில்லையே, நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான், அதற்கு அவர் ''சித்தம்தான் எல்லாம். அதை விடுவதே எல்லாவற்றையும் விடுவதாகும்'' என்று சொல்லி விட்டுப் போய் விட்டார்.

பிறகு கசன் ஆலோசித்துப் பார்த்து தேஹம் முதலான பதார்த்தங்கள் சித்தம் அல்ல என்ற தீர்மானத்திற்கு வந்து, மறுபடியும் பிதாவிடம் சென்று "சித்தம் என்று எது சொல்லப் படுகிறது?" என்று கேட்டான் "உள்ளே நான் என்ற எண்ணம எதுவோ அதுவே சித்தம்" என்று அவர் சொன்னதும் "அதை விடுவது சிரமமாகத்தோன்றுகிறதே, அதை எப்படி விட முடியும்?" என்று கசன் கேட்டான், அதற்கு அவர் "நான் என்பதை விடுவது வெகு ஸுலபம்; அதில் கொஞ்சமேனும் சிரமம் கிடையாது தத்வத்தை பாவனை செய்தால் வாஸ்தவ மில்லாத நான் என்ற எண்ணம் தானுகவே மறைந்து விடும் திக்கு தேசம் காலம் முதலான எவ்வித வரையறுப்பு மற்றதாய் நிர்மலமாய் எப்பொழுதும் எங்கும் பரவியுள்ளதாய் எல்லா பதார்த்தமுமாய் ஒரே வஸ்துவாய் தெளிவாய் சைதன்யமாத்திர மாய் இருப்பதே நீ. அதையே பாவித்துக்கொண்டு சாந்தனுய் கவலையற்று இரு" என்ருர். இவ்விதமாக பிதாவினிடமிருந்து உபாயத்தை அறிந்து அனுஷ்டித்து கசன், நான் என்றே என்னுடையது என்றே இல்லாமல், ஸகல ஸந்தேஹங்களும் அற்றவனுய்; நன்கு சாந்தியடைந்த மனஸுள்ளவனுய், ஜீவன் முக்தனுக ஆகிவிட்டான். கசன் எப்படி யிருந்தானே, அப்படியே, ராமா நீயும் எவ்வித விகாரமும் அற்று இரு.

இன்னெரு விசித்திரமான கதை சொல்கிறேன், கேள். ஒன்றுமில்லாத சூன்யத்தில் மாயாமயமாக ஒருவன் உண்டாகி அதிலேயே இருந்து வருகிருன். அவனைத் தவிர வேறு எதுவும் கிடையாது; அப்படியே ஏதேனும் இருந்தாலும் அதுவும் அவனேதான்; அவனேதான் அப்படித் தோன்றுகிருன் ஆனல் அவன் அறிவதில்லை. பிரியமாயுள்ளதை ரக்ஷிக்க வேண்டியது தானேயென்று தன்னை ரக்ஷித்துக் கொள்வதற் காக ஒரு வீடு கட்டிக் கொண்டான். அதினுல் தான் ரக்ஷிக்கப் பட்டு விட்டதாத நினைத்துக் கொண்டான். கொஞ்ச காலம் சென்றபின் அந்த வீடு இடிந்து விழுந்தபோது இவன் வீட்டி லுள்ள ஆகாசமும் போய் விட்டதென்று மிகவும் துக்கபட்டு,

மறுபடியும் தன்னை ரக்ஷித்துக் கொள்ள ஒரு கிணர் ஏற்படுத்தினன். அதுவும் கொஞ்ச காலத்தில் இடிந்து போக, கிணற்று ஆகாசமும் போய் விட்டதேயென்று புலம்பிக்கொண்டு, ஒரு குடத்தை உண்டு பண்ணி, இனி கவலையில்லை யென்று நினைத்தான், அதுவும் உடைந்து விட்டது, ஒரு குண்டம் ஏற்படுத்தினன் அதுவும் நசித்தவுடன், நான்கு பக்கமும் தாழ்வாரம் போட்டுக் கட்டினன். அதுவும் இடிந்து போக, ஒரு குதிர் கட்டினன். அதுவும் போனவுடன், குதிர் ஆகாசம் போய்விட்டதென்று துக்கித்தான். இவ்விதமாக ஆகாசத்தைக் காப்பாற்ற நினைத்து துக்கத்திலிருந்து துக்கத்தை யடைந்தானே தவிர ஸுகத்தை யடையவேயில்லை,

இவ்விதமேதான் ஸ்ருஷ்டிக்கு முன்னல் ஆத்மா சுத்தமாய் ஆகாசம் போல இருந்தது அதிலிருந்து அஹங்கராம் ஏற்பட்டது. அது ஆத்மாவை ரக்ஷிப்பதாக நினைத்து பலவித சரீரங்களை ஏற்படுத்தியது. ஒவ்வொன்றும் நாசம் அடைந்ததால் துக்கப்பட்டு மற்றொன்றை கல்பித்தது. வாஸ்தவத்தில் ஆகாசத்தைவிட ஸூக்ஷ்மமாயும் சுத்தமாயுமுள்ள ஆத்மாவை எதைக்கொண்டு ரக்ஷிக்க வேண்டும்? வீடு. குடம்; முதலியது நசிக்கும்போது ஆகாசம் நசிப்பதே கிடையாது, அப்படியே சரீரங்கள் நசிக்கும்போது ஆத்மாவுக்கு நாசம் கிடையாது. அது நித்யமான வஸ்து. இதை நன்கு அறிந்து விட்டால் ஸுகமாயிருக்கலாம்.

கயிறு என்பதை மறக்கும்போது பாம்பு தோன்றுவதுபோல ஆத்ம தத்வத்தை மறக்கும்போது உலகம் ஸத்யமாகத் தோன்றுகிறது எவன் தங்கத்திற்கு வேருக வளையலைப் பார்க்கிருனே, அவனுக்கு அது வளையலே தவிர தங்கம் அல்ல, எவன் தங்கத்திற்கு வேறில்லாததாக வளையலை பார்க்கிருனே, அவனுக்கு அது தங்கமே தவிர வளையல் அல்ல தங்கமென்றே பார்ப்பதில் வளையலினுடைய நாம ரூபம் மறைத்து விடுவதால் அந்த பார்வை நிர்வி கல்பம் எனப்படுகிறது. இவ்விதமே உலகத்தில் தோன்றும் பலவென்பதை யெல்லாம் விட்டு விட்டு

சுத்த சைதன்யம் ஒன்றுதான் உள்ளது என்று அறிய வேண்டும். எல்லா பதார்த்தங்களிலும் ஸாரமாயுள்ளது சைதன்யம்தான். இந்த ஜகத் எல்லாம் சைதன்யமேதான். ஒன்ருயுள்ள சைதயன்மே பலவாகத்தோன்றுவதால் ஜகத்வேறு எதுவுமில்லை. அறியப்படும் வஸ்து என்பது தனியாகக் கிடையாது

முன்னெரு ஸமயம் பரமேஸ்வரர் பிருங்கீசரைப் பார்த்து "மஹாகர்த்தா, மஹாபோக்தா, மஹாத்யாகியாக இரு" என்று சொன்னர். அம்மூன்றையும் உனக்கு நான் விளக்கிச் சொல்கிறேன். சிரத்தையுடன் கேள். (1) ராகம், த்வேஷம், ஸுகம் துக்கம், தர்மம், அதர்மம், பலன், பலனற்றது, இவைகளை அபேக்ஷிக்காமலே எவன் கர்மாவை செய்கிருனே, அவன் மஹாகர்த்தா (உத்தமமான செய்கிறவன்) எனப்படுகிருன். எவ்விஷயத்திலும் பற்றுதலன்னியில் ஸாக்ஷிபோலிருந்து கொண்டு ஆசையன்னியில் கார்யத்தில் எவன் ஈடுபடுகிருனே, அவன் மஹாகர்த்தா. பிறப்பு, இருத்தல், இறத்தல் என்பவைகளிலும் உண்டாவது நசிப்பது என்பவைகளிலும் எவனுடைய மனஸ் ஸமமாகவேயிருக்கிறதோ, அவன் மஹாகர்த்தா. (2) ஸுகங்களையோ, துக்கங்களையோ. கார்யங்களையோ உத்பத்தி நாசமுள்ளவைகளையோ, பிராந்தியை உண்டுபண்ணுபவைகளையோ அனுபவிக்கும்போது கலங்காமல் எவன் இருக்கிருனே, அவன் மஹாபோக்தா (உத்தமமான அனுபவிக்கிறவன்) எனப்படுகிருன். இது போகத்திற்கு உரியது, இது போகத்திற்கு உரியதில்லை யென்ற கல்பனையை விட்டு விட்டு விருப்பமற்றவனுக எவன் அனுபவிக்கிருனே, அவன் மஹாபோக்தா, ஆபத்து, ஸம்பத்து, மோஹம், ஆனந்தம் மேலானது, கீழ்ப்பட்டது எல்லாவற்றையும் ஸமமான புத்தியுடன் எவன் அனுபவிக்கிருனே, அவன் மஹாபோக்தா. (3) தர்மம், அதர்மம் ஸுகம், துக்கம். ஜனனம், மரணம் இவைகளை மனஸினுல் எவன் தள்ளிவிடுகிருனே அவன் மஹாத்யாகீ (உத்தமமான விட்டவன்) எனப்படுகிருன். எல்லாவித ஆசைகள், எல்லாவித ஸந்தேஹங்கள். எல்லாவித சேஷ்டைகள், எல்லாவித தீர்மானங்

கள் இவை எவனால் மனஸினால் விடப்பட்டு விட்டனவோ, அவன் மஹாத்யாகீ. பார்க்கப்படுவதாக எதெல்லாம் காணப்படு கிறதோ அதையெல்லாம் எவன் நன்கு விட்டு விட்டு இருக் கிறானோ, அவன் மஹாத்யாகீ. இவ்விதம் பகவான் உபதேசித்த படி நீயும் கவலையற்று இரு.

## அத்யாயம் - 29

## இக்ஷ்வாகு உபாக்யானம்.

**வஸிஷ்டர்**: அஹங்காரம் என்ற பெயரையுடைய சித்தம் குறைந்தாலும் குறைந்து கொண்டிருந்தாலும் கோபம் சுருங்கி விடும், மோஹம் மங்கிவிடும், காமம் வாடிவிடும், லோபம் ஓடி விடும். ஸுகமோ துக்கமோ ஒட்டாது. நன்கு குளுமையைக் கொடுக்கக் கூடிய ஸமபாவம் எல்லாவிஷயத்திலும் மனஸில் உதிக்கும். உங்கள் மூலபுருஷரான இக்ஷ்வாகு மஹாராஜர் ஒரு ஸமயம் பிரஹ்ம லோகத்திலிருந்து வந்திருந்த மனுவிடம், "இந்தக்காணப்படும் பிரபஞ்சத்திற்குக் காரணம் எது? என்று கேட்டார். அதற்கு மனு இவ்வாறு சொன்னார்.

இது எதெல்லாம் காணப்படுகிறதோ அதெல்லாம் வாஸ்தவத் தில் இல்லை வெறும் கானலில் ஜலம் போலவும், ஆகாசத்தில் கந்தர்வப்பட்டணம் போலவும்தான் இது. வாஸ்தவமாயிருப்பது எது மனஸ் இந்திரியங்களுக்கு எட்டாததாயும் எப்பொழுதும் பார்க்கமுடியாததாயும் நாசமற்றதாயும் இருக்கிறதோ அந்த "ஸத்" வஸ்து ஒன்றுதான். அதுவே ஆத்மா வென்று சொல் லப்படுகிறது. பார்க்கப்படுகிற இதெல்லாமோ அந்தப் பெரிய கண்ணாடியில் தோன்றும் பிரதி பிம்பமே. சுத்த சைதன்யமா யிருப்பதற்கு ஸங்கல்பத்தில் நோக்கமேற்படும்போது, ஜலத்தில் அலைபோல, ஜீவத்தன்மை ஏற்படுகிறது. ஸுக, துக்க மோஹங்கள் மனஸிலேயே தவிர ஆத்மாவில் கிடையாது, அந்த பரமாத்வை சாஸ்திரங்களைக் கொண்டோ குருவைக்

கொண்டோ பார்த்துவிட முடியாது; நன்கு ஸத்வகுணத்தில் நிலைத்துள்ள புத்தியைக் கொண்டு தானாகவே பார்க்க வேண்டும்.

நான் இந்த சரீரம் என்ற எண்ணம் ஸம்ஸாரத்திற்குக் காரணம் விடுபட நினைப்பவன் இவ்வெண்ணத்திற்கு ஒரு பொழுதும் இடம் கொடுக்கக் கூடாது, தங்கம் எப்படி காப்பு முதலியதாகத் தோன்றுகிறதோ, தன்மார்போடு அணைந்து தூங்கும் குழந்தையை மறந்து வெளியில் தேடும் தாயைப் போல, ஜரா மரணமற்ற தன் ஆத்மாவை அறியாமல் துக்கப் படுகிறார்கள் ஜனங்கள். சரீரம் போகும்போது தானே போய் விட்டதாக நினைக்கிறான். ஆத்மாவல்லாத சரீரம் முதலியதில் ஆத்மாவென்ற எண்ணத்தை விட்டால் ஸுகமாக இருக்கலாம். பகவான் பாலனைப்போல ஸ்ருஷ்டி ஸம்ஹாரம் முதலியதைச் செய்து விளையாடிக் கொண்டிருக்கிறார், எல்லாவற்றையும் உள்ளடக்கிக்கொண்டு தனித்துமிருப்பார். அவருடைய மாயை எல்லாரையும் மயங்கச் செய்கிறது சரீரம் பூராவும் வியாபித்துக்கொண்டிருக்கிற இந்த ஆத்மாவை யாரும் பார்ப்ப தில்லை. இது அழகாக இருக்கிறது. இது அழகாக இல்லை, என்ற எண்ணம்தான் துக்க பரம்பரைக்கு பீஜம். அதை ஸம பாவம் என்ற அக்னியால் எரித்து விட்டால் பிறகு துக்கத்திற்கு இடம் ஏது?

நான் என்ற எண்ணத்தை விட்டவன், வியவஹாரம் செய்து கொண்டிருந்தாலும், உபசாந்தனாயிருந்தாலும், கிரஹஸ்தனானாலும், ஸன்னியாஸியாயிருந்தாலும், சரீரத்திலிருந்தாலும் சரீரம் விட்டிருந்தாலும், சுத்தன், அறிந்தவன், ஜராமரண மற்றவன் அவனுக்கு சோகம் கிடையாது. எதில் வாஸனையை வைத்து ஸேவிக்கப்படுகிறதோ, அது ஸுகத்தைக்கொடுக்கும், ஆனால் எது ஸுகத்தைக் கொடுக்கிறதோ அதுவே நாச மடையும் போது துக்கத்தையும் கொடுக்கும். ஸுகத்தையும் துக்கத்தையும் பிரித்துவிட முடியாதென்பது பிரஸித்தமாயுள்ள விஷயம். எது அல்பமான வாஸனையைக் கொண்டோ, வாஸ

ஜையில்லாமலேயோ, ஸேவிக்கப்படுகிறதோ, அது ஸுகத்தைக் கொடுக்காது; நசிப்பதினுல் துக்கமும் ஏற்படாது. வாஸனை யற்ற புத்தியினுல் செய்யப்படும் கர்மா, எரித்த விதை போல முளைவிடாது. செய்ததும், செய்யப்படுவதுமான கர்மா, காற்றினுல் அடித்துக் கொண்டு போகப்படும் பஞ்சு போல, பறந்து விடும். எல்லா கலைகளும் அப்யாஸத்திலில்லையானுல் மங்கி நசித்து விடும், இந்த ஆத்ம ஞானமாகிற கலைமாத்திரம், நல்ல வயலில் விதைத்த விதைபோல, நாளுக்கு நாள் தானுகவே வளர்ந்து வரும். எது வரை விஷயத்தில் ஆசையிருக்கிறதோ அதுவரை ஆத்மாவுக்கு ஜீவன் என்ற பெயர். அந்த ஆசையும் ஆத்மாவின் ஸ்பாவத்தைச் சேர்ந்ததல்ல; விவேகமில்லாததினு லேயே ஏற்பட்டது. விவேகத்தினுல் ஆசை நசித்து விடும் போது ஆத்மா ஜீவத்தன்மையை விட்டு பிரஹ்மமாக நின்று விடுகிறது. இவ்விதம் சுத்த சைதன்ய நிலையையடைந்து, மரணத்தைக் கடந்ததாய், மனஸ் அற்றதாய், பரமானந்த ஸ்வ ரூபமாய் எவன் ஆகிருனே அவனுக்கு எதை உபமானமாகச் சொல்ல முடியும்? அந்த ஸ்வரூபத்தை அடையும் போது பிரகிருதி அடங்கிவிடும். பாவனையென்ற பெயருள்ள பிரகிருதி அஹங்காரமாகிற மோஹம் விலகினவுடன் நசித்துவிடும். இதுதான் மோக்ஷம் என்பது.

அவனுக்கு ஏதேனும் வஸ்திரம், ஏதேனும் உணவு, எங்கே யானுலும் சயனம், ஸம்ராட் சக்கரவர்த்தி போல் விளங்குவான். ஜாதி, ஆசிரமம், சாஸ்திரம் முதலிய எவ்விதக் கட்டுப்பாட்டை யும் விட்டவன். கம்பீரமாய், பிரஸன்னமாய் தானுகவே தன்னி டத்திலேயே ரமிப்பான். எல்லா கர்ம பலன்களையும் விட்டவன்; எப்பொழுதும் திருப்தியுடன் இருப்பவன். எதையும் ஆசிரயிப் பவன் அல்ல. புண்யமோ, பாபமோ, வேறு எதுவோ அவ னிடம் ஒட்டாது. ஸ்படிகத்தில் பிரதிபிம்பத்தினுல் எப்படி வர்ணம் தீண்டப்படாதோ, அப்படியே ஞானி கர்மபலனுல் தீண்டப்படுவதில்லை. எல்லாவித ஆசாரம் நியாயம் இவை களுடன் கூடியுமிருப்பான், அவையில்லாமலுமிருப்பான்.

அவனைக்கண்டுயாரும் பயப்படமாட்டார்கள். அவனும் யாரைக் கண்டும் பயப்படமாட்டான். சரீரத்தை நல்ல தீர்த்தத்தில் விட்டாலும் விடுவான்; சண்டாளன் குடிசையில் விட்டாலும் விடுவான்; விடாமலே இருந்தாலும் இருப்பான்; இந்த க்ஷணத் திலேயே விட்டாலும் விடுவான்.' தனக்கு க்ஷேமம் ஏற்பட வேண்டுமென்று கோறும் யாவராலும் அவன் பூஜிக்க வேண்டி யவன், ஸ்துதிக்க வேண்டியவன், நமஸ்கரிக்க வேண்டியவன், தர்சனம் செய்ய வேண்டியவன். ஆத்ம ஞானிகளை பக்தியுடன் ஸேவிப்பதினால் என்ன பதவி கிடைக்குமோ அது யக்ஞம்தானம் தீர்த்தயாத்திரை, தபஸ் இவைகளால் அடையமுடியாது.

இவ்விதம் சொல்லிவிட்டு மனு பிரஹ்மலோகம் போய் விட்டார் அவர் உபதேசித்ததை அவலம்பித்துக்கொண்டு இக்ஷ்வாகுவும் ஸ்திரமாயிருந்தார்.

## அத்யாயம் - 30

## ஜீவன் முக்த நிலை.

**ஸ்ரீ ராமர் :** மற்றவர்களிடம் காணாத விசேஷம் ஜீவன் முக்தர்களிடம் என்ன இருக்கும்?

**வஸிஷ்டர் :** அவர் எப்பொழுதும் திருப்தராய் நன்கு சாந்தமான மனஸுடன் தன் ஆத்மாவினிடத்திலேயே நிலைத் திருப்பார். அணிமாதி ஸித்திகள், ஆகாச ஸஞ்சாரம் முதலி யவை மந்திரம் தந்திரம் தபஸ் இவைகளாலேயே ஸித்திக்கும். அவை பிரயத்தினம் செய்து ஸம்பாதிக்கப்படுகின்றன. எல்லா விஷயத்திலும் ஆசை விட்டவரானதால் ஞானிகள் மனஸ் ராக மற்று நிர்மலமாயிருக்கும் அவருக்கு அந்த ஸித்திகளால் ஆக வேண்டியது ஒன்றுமில்லை. மோஹத்தையடைந்துள்ள புத்தி களையுடையவர்கள் போல ஞானி இருக்க மாட்டார்கள் என்பதே விசேஷம்.

பிராஹ்மணனாயிருப்பவன் ஸத்வ குணத்தை விட்டு கெட்ட செய்கைகளால் சூத்திரத்தன்மையை அடைந்துவிடுவது போல

ஆத்மா ஜீவனாக ஆகிவிடுகிறது. பிறகு தன் கர்மாக்களினால் ஸுக துக்கங்களுக்குக் காரணமாக ஆகிறான். கர்மாவுக்குக் காரணம் ஸங்கல்பம். ஸங்கல்பம் செய்வதுதான் பந்தத்திற்குக் காரணம்; அதை விட்டு விடவேண்டும், ஸங்கல்பமற்றிருப்பது மோக்ஷத்திற்குக் காரணம்; அதை அப்யாஸம் செய்யவேண்டும் மனஸிலுள்ள ஆசை மோஹம் மதம் முதலான முடிச்சுகளை மனஸினாலேயே அறுத்தெறிய வேண்டும், அதினால் ஸம்ஸாரம் விலகிவிடும்; அழுக்கைப் போக்க வேறொரு அழுக்கைக் கொண்டே அலம்பிவிட வேண்டும்.

ஜீவனுக்கு ஸ்தூலம், ஸூக்ஷ்மம், உத்தமம் என்ற மூன்று ரூபங்கள் இருக்கின்றன. கை கால் முதலியதுடன் ஸுகதுக்க போகத்திற்காக ஏற்பட்டிருக்கும் தேஹம் ஸ்தூலம். ஸம்ஸார முள்ளவரை கூடவேயிருந்து கொண்டு ஸங்கல்பமயமா யிருக்கிற சித்தம் ஸூக்ஷ்மம். ஆதியும். அந்தமும் அற்ற வாஸ்தவமாய், நித்தியமாய், விகல்பமற்று, சுத்தமாய். சைதன்ய ஸ்வரூபமாயுள்ளது உத்தமம். முதல் இரண்டையும் விலக்கி விட்டு, மூன்றாவதில் காலை ஊன்ற வேண்டும். ஸாக்ஷியாக மாத்திரம் இருந்து பார்த்துக் கொண்டிருக்கும் ஜீவன் முக்தநிலை நான்காவது என்று சொல்லப்படுகிறது. ஸங்கல்பமெதுவுமில் லாததினால் அது விழிப்புமில்லை, கனவுமில்லை; ஜடத்தன்மை யில்லாததினால் அது தூக்கமுமில்லை விழிப்பு, கனவு தூக்கம் என்ற மூன்றும் சித்தத்திற்கே, தவிர ஆத்மாவிற்குக் கிடையாது சித்தத்திற்கு கோரம், சாந்தம், மூடம் என்று மூன்று தன்மைகள் உண்டு. கோரம், விழிப்பு. சாந்தம், கனவு, மூடம் தூக்கம். இந்த மூன்றுமில்லையானால் மனஸே நசித்து விடும். மனஸ் நசித்திருக்கும் நிலையே நான்காவது. இதைத் தான் எல்லா யோகிகளும் பிரயத்தினப்பட்டு ஸம்பாதிக்கிறார் கள். சித்தத்தின் இருப்பு துக்கம்; சித்தத்தின் நாசம் ஸுகம், எல்லா ஆத்மவிஷயமான சாஸ்திரங்களுக்கும் முடிவு இதில்தான் இதை சிலர் சூன்யம் என்பார்கள்: சிலர் அறிவு மாத்திரம் என்பார்கள்: சிலர் ஈசுவரத்தன்மை என்பார்கள்; அவர் களுக்குள் பலவிதமான விவாதம் செய்து கொள்வார்கள்.

எல்லாவற்றையும் விட்டு விட்டு சித்தம் அடங்கினவனாக எவ்வித சித்த விருத்தியுமன்னியில், உத்தமமான மௌனியாக இருந்துவிடு உள்ளே எல்லாவற்றையும் விட்டவனாக இருந்து கொண்டு வெளியில் எதெது ஏற்படுகிறதோ, அதை செய்து கொண்டு இருந்து வா.

## அத்யாயம் - 31

## பூமிகைகள்

**வஸிஷ்டர்:** தன்நிலையிலிருப்பது மோக்ஷம், நான் என்று எண்ணுவது அதிலிருந்து நழுவுவது என்று சுருக்கமாய்ச் சொன்னேன். அக்ஞான தசையிலும் ஏழு பூமிகைகள் உண்டு ஞான தசையிலும் ஏழு பூமிகைகள் உண்டு. அவைகளை சொல்கிறேன் கேள்.

பீஜ ஜாகிரத், ஜாகிரத், மஹா ஜாகிரத், ஜாகிரத்ஸ்வப்னம், ஸ்வப்னம், ஸ்வப்ன-ஜாகிரத், ஸுஷுப்தம்-என்று ஏழுவிதம் அக்ஞானம்.

1. பெயரிட முடியாத சைதன்யம் பின்னால் ஜீவன் முதலான பெயர்களுக்கு பீஜரூபமாய் இருக்கும் புதிதான அவஸ்தை **பீஜ ஜாகிரத்** எனப்படும்.

2. சைதன்யத்திலிருந்து ஏற்பட்ட ஜீவனுக்கு இது, அது, நான், என்னுடையது, என்ற எண்ணம் முன்னாலில்லாமல் இப்பொழுது ஏற்படுவது **ஜாகிரத் ஆகும்.**

3. முன் ஜன்மாக்களில் இருந்த இது, அது, நான், என்னுடையது என்பதையெல்லாம் நினைத்துப் பார்க்கக் கூடியது **மஹா ஜாகிரத்** .

4. விழித்துக் கொண்டிருக்கிற போதே லேசாகவோ திருடமாகவோ செய்யப்படும் மனோராஜ்யம் **ஜாகிரத் ஸ்வப்னம்** என்பார்கள்.

5. விழித்துக் கொண்டிருக்கும்போதே, இரண்டு சந்திரன், கிளிஞ்சலில் வெள்ளி, கானல் ஜலம் முதலிய அநேக விதங்களும், ஏதோ கொஞ்சம் பார்த்து லிட்டு பார்த்தேனே இல்லையா வென்று ஸந்தேஹ முள்ளதும், **ஸ்வப்னம்** எனப்படுகிறது.

6. வெகு நாளாக பார்க்காததினுல் தெளிவாய் ஞாபகப் படுத்திக் கொள்ள முடியாததும் வெகுநேரம் அனுபவித்ததினுல் ஜாகிரத் போலவே தோன்றும் ஸ்வப்னமும், விழித்துக் கொண்டேயிருக்கும் போது இருப்பதால் **ஸ்வப்ன-ஜாகிரத்** எனப்படும்.

7. இந்த ஆறுவித அவஸ்தைகளையும் விட்டு பின்னுல் ஏற்பட வேண்டிய துக்கத்தின் பீஜம் அடங்கியுள்ளதாய் ஜடமாயிருக்கும் நிலை **ஸுஷுப்தம்** எனப்படுகிறது அப்பொழுது உலகமே இருட்டில் லயித்து விடுகிறது

ஏழு அவஸ்தைகள் என்று சொன்னேன். ஒவ்வொன்றின் கிளைகள் பலவிதமாக நூற்றுக்கணக்காக இருக்கின்றன இனி ஞான பூமிகைகளைச் சொல்கிறேன் கேள்.

1. "முட்டாள் மாதிரி இருந்து வருகிறேனே! சாஸ்திரங்கள் பெரியோர்களைத் தேடி அறிய வேண்டும்" என்று வைராக்யத்தை முன்னிட்டு ஏற்படும் விருப்பம் **சுபேச்சா** எனப்படும்,

2. வைராக்யத்தின் அப்யாஸத்தை முன்னிட்டு சாஸ்திரங்கள் பெரியோர்கள் இவர்களுடன் சேர்வது நல்ல ஆசாரத்தில் பிரவிருத்தி இவைகளை **விசாரணை** என்பார்கள்.

3. சுபேட்சை விசாரணை இவ்விரண்டினுலும் இந்திரியங்களின் விஷயங்களான சப்த ஸ்பர்சம் முதலியதில் பற்றில்லாமலிருப்பது, **தனுமானஸா** எனப்படும்,

4. இந்த மூன்றின் அப்யாஸத்தினுல் விஷயங்களிலிருந்து சித்தம் திரும்பி சுத்தமான ஆத்மாவில் நிலைப்பது **ஸத்வாபத்தி**யாகும்.

5. இந்த நான்கின் அப்யாஸத்தினுல் எதிலும் பற்றில்லாமல் ஸத்வத்தில் நிலைப்பது **அஸம் சக்தி** எனப்படும்.

6 இந்த ஐந்தின் அப்யாஸத்தினுல் தன் ஆத்மாவிலேயேரமித்துக்கொண்டிருப்பதால் உள்ளும் வெளியிலும் எந்த பதார்த்தமும் தோன்ருமலிருந்து வேறு யாரேனும் பிரயத்தனம் செய்து எழுப்பினுலொழிய அதிலேயே நிலைப்பதான **பதார்த்தா பாவனு** என்ற ஆருவது பூமிகை ஏற்படுகிறது

7. இந்த ஆறையும் வெகுகாலம் அப்யஸித்து இரண்டாவது பதார்த்தமே தோன்ருமல் எப்பொழுதும் ஆத்மாவினிடத்திலேயே நிலைத்து விடுவது **துர்யகா** எனப்படும், எவர்கள் இந்த நிலையை அடைகிருர்களோ அவர்கள் மஹா பாக்ய சாலிகள். மஹாத்மாக்கள், ஆத்மாவிலேயே ரமித்து உத்தமமான பதத்தை யடைந்தவர்கள். இதற்கப்புறம் உள்ள துரீயாதீத நிலை விதேஹமுக்தியைச் சேர்ந்தது. இது ஜீவன் முக்தியில் நான்காவது நிலையாகும்.

[நாலாவது ஸத்வாபத்தி யடைந்தவர் **பிரஹ்மவித்,** 5 வது அஸம்ஸக்தி நிலையிலுள்ளவர் **பிரஹ்ம வித்வான்;** ஆருவது பதார்த்தாபாவனு நிலையிலுள்ளவர் **பிரஹ்ம வித்வரீயான்;** 7வது துர்யகா நிலையையடைந்தவர் **பிரஹ்மவித்வரிஷ்டர்,** ஆவார்கள்]

இவைகளில் முதல் மூன்று ஜாகிரத் என்றே சொல்லலாம்; நான்காவதில் உலகம் ஸ்வப்னம் போல் தோன்றுவதால் ஸ்வப்னம் எனலாம். ஆனந்த மாத்திரம் தோன்றுவதால் ஐந்தாவதை ஸுஷுப்தி எனலாம். ஆருவதில் எவ்வித அறிதலும் கிடையாது. ஏழாவதோ ஸ்வயம் பிரகாச நிலையானதினுல் மனேவாக்குக்கு எட்டாது.

**ஸ்ரீராமர்:** இந்த ஏழு பூமிகைகளின் அப்யாஸம் செய்வது எப்படி?

**வஸிஷ்டர்:** மனிதன் பிரவிருத்தன், நிவிருத்தன் என்று இரண்டு விதம். "மோக்ஷம்" என்பதில் என்ன இருக்கிறது?

எனக்கு ஸம்ஸாரமே நல்லது "என்று தீர்மானித்துக்கொண்டு எவன் செயலில் ஈடுபடுகிருனே, அவன் ' பிரவிருத்தன்" எனப் படுகிருன். "ஸம்ஸாரத்தில் இருப்பதில் ஸாரமேயில்லை, எனக்கு இது போதும்" என்று தனக்குள்ளே நிச்சயமுள்ளவன் "நிவிருத்தன்" எனப்படுவான். "நான் வைராக்கியமுள்ள வனுக ஆகி எப்படி ஸம்ஸாரக் கடலைத்தாண்டுவேன்?" என்று ஸம்ஸாரத்தைக் கடப்பது விஷயமாய் விசாரம் செய்பவன் பூமிகையுள்ளவன் எனப்படுகிருன் அப்பொழுது அவன் சுபேச்சா என்கிற முதலாவது பூமிகையை அடைந்து இரண்டாவதான விசாரணை என்ற பூமிகைக்கும் போகிருன் அப்பொழுது உத்தமமான வித்வான்களை ஆசிரயித்து, சுருதி, ஸ்மிருதி, ஸதாசாரம், தாரணை, தியானம், கர்மா, இவைகளின் பிரிவுகளை நன்கு அறிகிருன்; தம்பம் முதலான தோஷங்களன்னியில் சாஸ்திரங்களை கற்றுக்கொண்டு குரு, நல்லோர் இவர்களுடைய ஸேவையைச் செய்வதால் உள்ளபடி ரஹஸ்யம் பூராவையும் தெரிந்து கொள்கிருன். அதன் பிறகு மூன்ருவதான அஸம் ஸக்தியென்ற பூமிகையை அடைந்து தபஸ்விகளுடைய ஆசிரமத்திற்கு உரிய கார்யங்களாலும் ஆத்மா விஷயமான உபதேசங்களாலும் சித்தம் நன்கு சாந்தியுடன் சோபிக்கிற வனுய் நீதிமானுய் காலம் கழிப்பான்; சாஸ்திரங்களை நன்கு அப்யாஸம் செய்வதாலும் புண்ணிய கர்மாக்களைச் செய்வதாலும் இவனுக்கு உள்ளபடி வஸ்துவைப் பார்க்கும்படி தெளிவு ஏற்படுகிறது.

இந்த அஸம் ஸக்தி என்பது ஸாதாரணம் உத்தமம் என்று இருவகைப்படும். "நான் கர்த்தாவல்ல, போக்தாவுமல்ல, பாதிக்கப்படுபவன் அல்ல, பாதிக்கிறவனும் அல்ல, எல்லாம் முன் செய்த கர்மாவினுல் ஏற்படுகிறது, அல்லது எல்லாம் ஈசுவரனுக்கு அதீனமாயுள்ளது, ஸுகமோ துக்கமோ, அதில் எனக்கு ஏது செய்யும் தன்மை? என்று விஷயங்களில் ஒட்டுதலில்லாமலிருப்பது ஸாதாரணம். இதையே அப்யாஸம் செய்வதினுலும்; பெரியோர்களுடைய சேர்க்கையினுலும், துர்

ஜனங்களிலிருந்து விலகுவதினுலும், ஆத்மக் ஞானத்தில் ஈடுபடுவதினுலும், ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தின் அக்கரையாயும் பரம காரணமாயுள்ள தத்வத்தில் அடங்கி மௌனமாயிருப்பது, எதுவோ அதுவே உத்தமமான அஸம்ஸக்தி. இதுதான் மூன்ருவது பூமிகை.

**ஸ்ரீராமர்:** யோகத்தில் இறங்காமல் மூடனுயிருப்பவனுக்கு கடைத்தேறுவது எப்படி? யோகத்தில் மேல் போனவன் இறந்தால், அவனுடைய கதி எப்படியிருக்கும்?

**வஸிஷ்டர்:** நன்கு தோஷங்களுடன் கூடிய மூடனுக்கு நூற்றுக் கணக்கான பிறவிகள் ஏற்பட்டாலும், எது வரை முதலாவது பூமிகையேற்படவில்லையோ, அது வரை ஸம்ஸாரம் நீடித்துக் கொண்டுதானிருக்கும். வைராக்யம் நன்கு ஏற்பட்டால், அவசியம் முதல் பூமிகையேற்பட்டு கிரமமாய் ஸம்ஸாரம் நசிக்கும் என்பதுதான் சாஸ்திரத்தின் சுருக்கம். அந்த பூமிகைக்கு உரியவாறு வாழ்க்கையை நடத்தி வருகிறவனுக்கு முன் செய்துள்ள பாபங்கள் நசித்துவிடும். புண்யமான லோகங்களில் வஸிப்பதினுல் புண்யமும் செலவழிந்து விடும். பிறகு இந்த யோக வாஸனையுடனேயே பரிசுத்தமான ஸ்ரீமான்களின் கிருஹத்தில் பிறப்பான். அதன் பிறகு மேலுள்ள பூமிகைகளில் ஏறுவான்

மூன்று பூமிகைகளை நன்கு அப்யாஸம் செய்வதால் அக்ஞானம் விலகி, அத்வைத நிலை ஸ்திரப்பட்டு, த்வைதம் நன்கு அடங்கும்போது, நான்காவது பூமிகையை அடைந்து, உலகத்தை ஸ்வப்னம்போல் பார்ப்பான். ஐந்தாவது பூமிகையில் சென்று அத்வைதநிலையில் மாத்திரம் நின்று கொண்டு, எவ்வித விசேஷமான அம்சமுமில்லாமல், தூக்கக் கலக்கத்திலுள்ளவன் போல காணப்படுவான். இதையும் அப்யஸித்து ஆருவது பூமிகைக்குப் போனவன் எவ்வித ஸந்தேஹமோ பாவனையோயில்லாத ஜீவன் முக்தனுகிருன். ஆகாச மத்தியிலுள்ள வெறும் குடம்போல உள்ளேயும் வெளியிலும் சூன்ய

மாயிருப்பான். ஸமுத்திர மத்தியிலுள்ள நிரம்பிய குடம்போல, உள்ளேயும் வெளியிலும் நிரம்பியிருப்பான். இந்த ஆருவது பூமிகையிலிருந்து விட்டு, பிறகு ஏழாவது பூமிகையை அடைவான். அதுவே விதேஹ முக்தியும் ஆகும் இதுதான் ஸம்ஸாரத்திலுள்ள பூமிகைகளுக்குள் எல்லையாயுள்ளது. இதையே சிவன் என்றும், விஷ்னு என்றும், பிரஹ்மம் என்றும் வெவ்வேறு விதமாகவும், சொல்வார்கள். எப்பொழுதுமே குறிப்பிட முடியாததை எப்படியாவது குறிப்பிடுவார்கள்.

ஆசை என்ற எல்லையற்ற மதம் பிடித்த யானை ஒன்றிருக்கிறது. எல்லாவித அனர்த்தங்களுக்கும் காரணமாயுள்ள அந்த யானையை கொல்லாத விஷயத்தில், இந்த ஏழு பூமிகைகளில் எதிலும் ஸஞ்சாரம் செய்வது ஸர்த்தியமில்லை இதற்கே வாஸனை, விருப்பம், மனஸ், சித்தம், ஸங்கல்பம், பாவனை, வேண்டுதல் என்பது முதலான பெயர்கள் ஏற்பட்டிருக்கின்றன. இதை தைர்யம் என்ற உத்தமமான அஸ்திரத்தினல் எப்படியும் ஜயித்தாக வேண்டும். "இது எனக்கு இருக்கட்டும்" என்று எண்ணுவது கல்பனம், அதை நினைக்காமலிருப்பது கல்பனையை விட்டு விடுதல் நினைப்பதே ஸங்கல்பம், நினைக்காமலிருப்பது நல்லது. "எல்லாவற்றையும் மறந்து விட்டு கட்டைபோல இருக்க வேண்டும்" என்று கைகளை உயர்த்திக்கொண்டு கதறுகிறேன்; அதைக் கேட்பவர் யாருமில்லை, ஸங்கல்ப மன்னியிலிருப்பது உத்தமமான சிரேயஸ். இதை ஏன் கவனிப்பதில்லை? சும்மா இருப்பவனுல் தான் உத்தமமான நிலையடையப் படும்; அந்த நிலையில் மேலான ஸாம்ராஜ்யமும் துரும்பு போலவேதான். அதிகமாக சொல்வானேன்? சுருக்கமாகச் சொல்கிறேன். ஸங்கல்பிப்பது பந்தம், அதன் இல்லாமை மோக்ஷம்; அறிதலற்று இருத்தல் யோகம், தானுகவே சித்தம் நசிக்கும். இந்த யோக நிலையிலிருந்து கொண்டு கர்மாக்களைச் செய். கெட்ட கர்மாக்களைச் செய்யாதே. பந்தமேற்படுமோ யென்று ஸந்தேஹித்து, கர்மாக்களைச் செய்யாமலிருந்து விடாதே. எங்குமுள்ளதாய் பிறப்பற்றதாய், சாந்தமாய் மங்களகரமாய் ஞான ஸ்வரூபமாயுள்ளதையே பாவிப்பது கர்மத்யாகம் எனப்படுகிறது.

## அத்யாயம் 32.

## முடிவுரை.

**வால்மீகி**: இவ்விதம் வஸிஷ்ட மஹா முனிவரால் சொல்லப் பட்ட ஞான ஸாரத்தைக்கேட்டு ஸ்ரீராமர் ஒரு முகூர்த்தம் சைதன்யமாகிற ஆனந்த ஸாகரத்தில் மூழ்கி மங்களகரமான நிலையை யடைந்தவராக ஒன்றும் பேசாமலிருந்தார்.

**பரத்வாஜர்**: ஸ்ரீராமர் அந்த உத்தம நிலையை அடைந்தார் என்று கேட்க மிகவும் ஆச்சர்யமாயிருக்கிறது. அவ்விதநிலை என்னைப்போலுள்ளவர்களுக்கு எப்படி கிடைக்கும்? கரையற்றிருக்கிற ஸம்ஸார ஸாகரத்தை நான் தாண்டுவது எப்படி?

**வால்மீகி**: இதுவரை சொன்ன ஸ்ரீராமருடைய விருத்தாந்தத்தை முதலிலிருந்து பூராவும் நன்கு புத்தியால் விசாரித்துப் பார்த்து திரும்பத் திரும்ப சிந்தனை செய். இந்த ஜகத் அவித்யையால் ஏற்பட்டது; இதில் ஒரு அணுகூட ஸத்யமாயுள்ளது கிடையாது. அறிவாளிகள் சோதித்துப் பார்ப்பார்கள். விவேக மற்றவர்கள் வீணாக விவாதம் செய்வார்கள். சைதன்யத்திற்கு வேறாக எதுவும் கிடையாது. இந்த ஜகத் ஸ்வப்னம் போலத் தான். அவித்யையால் உண்டாகும் இந்த வேற்றுமைகள் எல்லாம் சைதன்யமாகிற ஸமுத்திரத்தில் க்ஷணம் தோன்றி மறையும் நீர்க்குமிழிகளே. சித்தம் நன்கு தெரியும் வரை ஸகுணமான பிரஹ்மத்தை பஜித்துக் கொண்டு வா. பிறகு சிரமமில்லாமல் நிர்குணமான தத்வத்தில் நிலையேற்படும். வெறும் புருஷப்பிரயத்னத்தினாலோ கர்மாவினாலோ பிரயோஜனமில்லை; மஹேசுவரருடைய அனுக்ரஹமிருந்தால்தான் அடைய வேண்டியது அடையப்படும். நல்ல குலத்தில் பிறப்பு, நல்ல நடத்தை, நல்ல நீதி, பராக்கிரமம், இவை போதாது. முன் செய்த புண்ய கர்மாக்கள் பலமாக இருக்க வேண்டும். அவையில்லையானால், நெற்றியில் எழுதியிருப்பதை ஈசுவரனும் அழித்துவிட முடியாது. வெகு ஜன்மாக்களில் செய்த புண்ய கர்மாக்களுக்கு அதீனமாகவே ஞானம் ஏற்படுகிறது. சில

ஜீவன் முக்தர்கள் விஷயத்தில் ஏற்படும் அனுபவத்தைக் கொண்டு அவர்களும் முன் ஜன்மாக்களில் புண்ணியம் செய்தவர்களென்று அனுமானத்திஞல் தெரிந்து கொள்ள வேண்டும். ஆகையால் மங்களமில்லாத சோகத்தை விட்டு விடு; மங்களமாயுள்ளவைகளையே சிந்தனை செய். ஒரு க்ஷணம் கவலையற்று உட்கார்ந்து ஸம்ஸாரமாகிற நாடகத்தைப் பார். ஞான ஸ்வரூபமாய் ஆனந்த கனமாய் நிர்மலமாயுள்ள ஆத்மாவை பாவனை செய். இவ்விதம் எப்பொழுதும் நீ இருந்து விடுவாயேயாஞல் ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டினவஞவாய்

**பரத்வாஜர்:** ஸ்ரீராமர் உத்தமமான யோக நிலையை அடைந்து ஆத்மாவினிடத்திலேயே நிலைத்தவர் மறுபடியும் வியவஹாரத்தில் ஈடுபடும்படி எப்படி வஸிஷ்டர் செய்தார்?

**வால்மீகி:** விசுவாமித்திரரால் தூண்டப்பட்டு வஸிஷ்டர் ஸ்ரீராமரைப்பார்த்து "ஹே ராமா, மஹா புருஷ, சைதன்ய ஸ்வரூபமே, இது விசிராந்திக்கு உரிய காலமில்லை. உலகத்திற்கு ஆனந்தத்தை உண்டு பண்ணுகிறவராக இருக்க வேண்டும். உலகம் தோன்றிக்கொண்டிருக்கும் வரை நிர்மலமான ஸமாதி நிலைக்காது. ஆகையால் இப்பொழுது கிரமப்படி ராஜ்ய கார்யங்களை கவனித்து நடத்திக்கொண்டுவா. அவதாரம் செய்வதற்குக் காரணமாகிய தேவ கார்யத்தை முடித்து விட்டு பிறகு எல்லாவற்றையும் விட்டு ஸுகமாய் இருக்கலாம்" என்று சொன்ஞர். இதைக் கேட்ட ஸ்ரீராமர் எவ்வித ஆசையுமற்றவராய் வினயத்துடன் "தங்களுடைய பிரஸாதத்திஞல் எனக்கு இது செய்ய வேண்டுமென்ற விதியும் கிடையாது, இது செய்யக்கூடாதென்ற நிஷேதமும் கிடையாது. அப்படியிருந்தும் தங்களுடைய வாக்கியத்தை எப்பொழுதும் நிறைவேற்ற வேண்டியது என் கடமை. வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள், ஸ்மிருதிகள் எதை எடுத்துப் பார்த்தாலும் குருவின் வாக்கியம் விதி, அவர் தடுப்பது நிஷேதம், என்றே சொல்லப்பட்டிருக்கிறது" என்று சொல்லி மஹாத்மாவான வஸிஷ்டருடைய பாதங்களை தன் சிரஸில் தாங்கிக்கொண்டு,

அங்குள்ள எல்லாரையும் பார்த்து, "எல்லோருமே கேளுங்கள் உங்களுக்கு க்ஷேமம் உண்டாகட்டும். ஆத்மக் ஞானத்திற்கு மேல் எதுவுமில்லை, அதையறிந்த குருவிற்கு மேல் யாருமில்லை, என்று நிச்சயமாய் நன்கு தீர்மானிக்கப் பட்டிருக்கிறது," என்று சொன்னார். அப்பொழுது ஆகாசத்திலிருந்து அவருடைய சிரஸில் புஷ்ப விருஷ்டி வர்ஷித்தது.

இவ்விதமாக உனக்கு ஸ்ரீராமச்சந்திரருக்கு ஸம்பவித்ததையெல்லாம் சொன்னேன். ஹே பரத்வாஜ, நீயும் இந்த முறையை அனுஸரித்து ஸுகமாக இரு. ராகத்தை விட்டு, ஸந்தேகமற்றவனாய், நன்கு சாந்தமான புத்தியையுடையவனாய், ஜீவன் முக்தனாய் நிலைத்திரு. பிரத்யக்ஷமாய் அனுபவத்தையுண்டு பண்ணக்கூடியதாயுள்ள இந்த புண்யமான மோக்ஷ உபாயங்களைக் கேட்கும் பாலன் கூட ஆத்மக்ஞானியாக ஆகி விடுவான் உன்னைப் போலுள்ளவர்கள் விஷயத்தில் கேட்பானேன்? ஸ்ரீராமருக்கும், வஸிஷ்டருக்கும், நடந்த இந்த ஸம்வாதத்தை எப்பொழுதும் கேட்டுக் கொண்டிருப்பவன், எந்த நிலையிலிருந்தாலும் கூட, மோக்ஷத்தை யடைவிக்கும் வழியிலேயே போகிறவனாகிறான்.

இது எல்லாமே பிரஹ்மம், அதிலிருந்து உண்டாகி, அதினாலேயே இருந்து அதிலேயே லயமடைகிறதென்று ஸாம வேதத்தில் சொல்லப்பட்டுள்ள அந்த பிரஹ்ஸ்வரூபமாயுள்ளதிற்கு நமஸ்காரம்.

சுபம்!

ஹமீது பிரஸ் திருநெல்வேலி-6. போன்: 180

## பிழைத் திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 32 | எண்ணமிராது | எண்ணமிராது. எவர் |
| 14 | 11 | சலித்தும் | சலித்ததும் |
| 23 | 26 | போது எப்படி பார்க்கும் | பார்க்கும்போது எப்படி |
| 24 | 8 | கிரஹத்திவ் | கிரஹத்தில் |
| 39 | 2 | பிரஹ பதி | பிரஹஸ்பதி |
| ,, | 19 | நித்தியமாயிள்ள | நித்யமாயுள்ள |
| ,, | 24 | ஜென்மமோ | ஜன்மமோ |
| 40 | 12 | களிலி | களிலு |
| ,, | 32 | எத்தனே | எத்தனே |
| 41 | 7 | என்ருவது | என்ருகிறது. |
| ,, | 19 | வந்தது | வந்தது'' என்று |
| 44 | 7 | உ-தாரணமான | உதாரமான |
| ,, | 25 | பந்துக்கலிருந்து | பந்துக்கள் இருந்து |
| 45 | 20 | மஹாலெக்ஷ்யின் | மஹாலெக்ஷ்மியின் |
| 46 | 15 | நிர்வாஹிக்க | நிர்வஹிக்க |
| 47 | 6 | அஸ்திரம் | சாஸ்திரம் |
| ,, | 8 | இவைகளாறும் | இவைகளாலும் |
| 51 | 25 | இருக் | இழுக் |
| 52 | 3 | பான்ச | பாஞ்ச |
| 55 | 6 | தோற்றங்களே | தோற்றங்களே |
| 57 | 5 | ஸ்தவ | ஸத்வ |
| 58 | 30 | அவனுடைய | ஸூரகுவினுடைய |
| ,, | 31 | ஸூரகு | பரிகன் |
| 59 | 3 | அடைத்தி | அடைந்தி |
| 66 | 17 | பற்று | பந்து |
| 68 | 28 | ஆசிரம | ஆசிரய |
| 69 | 8 | ஆசிரம | ஆசிரய |
| 72 | 28 | கோணங்களே | கோணல்களே |
| 75 | 29 | முன்னெரு | முன்ஞெரு |
| 76 | 15 | அவம்புஜா | அலம்புஷா |
| ,, | 18 | அவம் | அலம் |
| ,, | 19 | புஜை | புஷை |
| 77 | 23 | செய்கிருஞே | செய்கிருரோ |
| , | 24 | ஸங்கல்பத்திலேயே | ஸங்கல்பத்திஞலேயே |
| 78 | 28 | கரடு | சரடு |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 82 | 25 | புத்தியாக நம் | புத்தியாகவும் |
| 83 | 27 | வாதத்தை | விரதத்தை |
| 88 | 26 | பௌனத்தை | மௌனத்தை |
| 89 | 10 | ஸெஷுப்த | ஸௌஷுப்த |
| 91 | 12 | வந்தான் | வந்தார். |
| 92 | 13 | ஒழுக | ஒழுகி |
| ,, | 13 | யெவன | யௌவன |
| 97 | 31 | பார்த்தால் | பார்த்தாள். |
| 100 | 6 | அவ்வளவு | எவ்வளவு |
| 102 | 13 | ராஜன்! | ராஜன் : |
| 103 | 11 | ஸர்வதியாக | ஸர்வத்தியாக |
| 105 | 23 | கூடிய தடித்த | தடித்த |
| 107 | 22 | சரிய | சரியா |
| 108 | 3 | தேஹத்தில் | தேஹத்தின் |
| ,, | 30 | இப்படிய | இப்படியே |
| 109 | 5 | சபல | ஸபல |
| 110 | 18 | என்றுர். | என்றுன். |
| 111 | 24 | ஸழுத்திர | ஸமுத்திர |
| ,, | 25 | தீர்த | தீர்த்த |
| 113 | 30 | விட்டதாத | விட்டதாக |
| ,, | 32 | துக்கபட்டு | துக்கப்பட்டு |
| 114 | 30 | மறைத்து | மறைந்து |
| 115 | 5 | சைதயன்மே | சைதன்யமே |
| ,, | 8 | பரமேஸ்வரர் | பரமேசுவரர் |
| 117 | 15 | எல்லாவற்வையும் | எல்லாவற்றையும் |
| 118 | 12 | ஸ்பாவ | ஸ்வபாவ |
| 121 | 11 | சொன்ளேன் | சொன்னேன் |
| 122 | 24 | சுபேட்சை | சுபேச்சை |
| 123 | 3 | அஸம் சக்தி | அஸம் ஸக்தி |
| ,, | 17 | ஸத்வா பக்தி | ஸத்வாபத்தி |
| ,, | 18 | வித்வான் | வித்வரன் |
| 124 | 12 | வித்வான்கனே | வித்வான்களே |

**N. B.** அநேக இடங்களில் முற்றுப்புள்ளி போடவில்லை. சில இடங்களில் புள்ளிகள் தவறுதலாயிருக்கின்றன. அவைகளே வாசகர்களே திருத்திக்கொள்ளவும்.